हनूमान् होवाच— वायुपुत्रं विघ्नेशं वाणीं दुर्गां क्षेत्रपालकं सूर्यं चन्द्रं नारायणं नारसिंहं वायुदेवं वाराहं तत्सर्वान् मन्त्रान् सीतां लक्ष्मणं शत्रुघ्नं भरतं विभीषणं सुग्रीवमङ्गदं जाम्बवन्तं प्रणवमेतान् रामस्याङ्गानि जानीथाः । तान्यङ्गानि विना रामो विघ्नकरो भवति ॥ ८

*ராமனின் அங்கங்கள் எவை? (தனிச் சிறப்பென எதனையும் குறிப்பிட இயலாத (நிர்விசேஷ) பிரும்ம ஜ்ஞானம் பெற உதவுகிற ஸகுண (ஸவிசேஷ) பாவனையில் ராமனுடன் கூட இருப்பவர் யார்?) என அவர்கள் கேட்க ஹனுமான் கூறுகிறார். ஹனுமான், விக்நேசுவரர், ஸரஸ்வதி, துர்க்கை, க்ஷேத்ரபாலர், ஸூரியன், சந்திரன், நாராயணன், நரஸிம்ஹர், வாயு, வராஹர் இவர்களின் மந்திரம் (பிரணவம், நான்காவது வேற்றுமையில் பெயர். நம: என. ஓம் ஹனுமதே நம:, ஓம் விக்நேசுவராய நம:, என்று அமைகிற மந்திரம்) கூறியபின் ஸீதை, லக்ஷ்மணன், சத்ருக்னன், பரதன், விபீஷணன், ஸுக்ரீவன், அங்கதன், ஜாம்பவான் என்பவர்களது மந்திரத்தையும் (முன்போல்) கூறி (3-8-16 தடவை உசிதம் போல்) பின் ராம மந்திர ஜபம் செய்யவேண்டும். இந்த அங்க வந்தனமில்லாமல் ராம மந்திர ஜபம் செய்ய இடையூறு நேரலாம்.(7-8)*

पुनर्वायुपुत्रेणोक्तास्ते हनूमन्तं पप्रच्छुः — आञ्जनेय महाबल ! विप्राणां गृहस्थानां प्रणवाधिकारः कथं स्यादिति ॥ ९

स होवाच– श्रीराम एवोवाचेति । येषामेष षडक्षराधिकारो वर्तते तेषां प्रणवाधिकारः स्यान्नान्येषाम् । केवलमकारोकार-मकारार्धमात्रासहितं प्रणवमूह्य यो राममन्त्रं जपति तस्य शुभ-करोऽहं स्याम् । तस्य प्रणवस्याकारस्योकारस्य मकारस्यार्ध-मात्रायाश्च ऋषिश्छन्दो देवता तत्तद्वर्णाविर्णावस्थानं स्वरवेदाग्नि-गुणानुच्चार्यान्वहं प्रणवं मन्त्राद्द्विगुणं जप्त्वा पश्चाद्राममन्त्रं यो जपेत् स रामो भवतीति रामेणोक्तास्तस्माद्रामाङ्गं प्रणवः कथित इति ॥ १०

பிரணவத்துடன் இந்த மந்திரங்களைக் கூற (ஸன்யாஸி யோகிகளைத்தவிர) அந்தணருக்கும் இல்லறத்தானுக்கும் தகுதி என்ன எனக் கேட்க ஹனுமான் கூறுகிறார் - ராமனே இவ்வாறு கூறியுள்ளார். ஷடக்ஷர மந்திரம் ஜபிக்கத் தகுதி பெற்றவர் பிரணவம் கூறவும் தகுதியுள்ளவரே. மற்றவருக்கு பிரணவஜபம் செய்யத் தகுதி இல்லை என. அதனால் அ- உ- ம - அர்த்த மாத்திரையான பிரணவத்தை ஊஹித்து அத்துடன் ராம மந்திர ஜபம் செய்பவருக்கு நான் நன்மை புரிவேன். பிரணவத்தின் நான்கு பகுதிகளின் ருஷி, சந்தஸ் தேவதை அந்த அக்ஷரநிலை,ஸ்வரம், வேதம், அக்னி, குணம் முதலியவற்றைக் கூறிப்பின் ராம மந்திரத்தை ஜபிக்க வேண்டும். அவ்வாறு ஜபிக்க ராமனாக ஆவான். ராம மந்திரத்தின் அங்கமே பிரணவம். *(9-10)*

सिंहासने समासीनं रामं पौलस्त्यसूदनम् ।
प्रणम्य दण्डवद्भूमौ पौलस्त्यो वाक्यमब्रवीत् ॥ ११

रघुनाथ महाबाहो केवलं कथितं त्वया ।
अङ्गानां सुलभं चैव कथनीयं च सौलभम् ॥ १२

श्रीराम उवाच—अथ पञ्च दण्डकानि पितृघ्नो मातृघ्नो ब्रह्मघ्नो गुरुहननः कोटियतिघ्नोऽनेककृतपापो यो मम षण्णवतिकोटिनामानि जपति तेभ्यः पापेभ्यः प्रमुच्यते । स्वयमेव सच्चिदानन्दस्वरूपो भवेन्न किम् ॥ १३

விபீஷணன் ராவணனை வென்ற ராமனை வணங்கி அங்கங்களைக் கூறுகிற எளிய வழியைக் கூறும்படி விண்ணப்பித்தான். தந்தை, தாய், அந்தணன், குரு, துறவி இவர்களைக் கொன்றவன் நரகதண்டனைக்குரியவன். அந்தக் கொடுஞ் செயலால் விளைகிற கொடும் பாபத்தை ஸ்ரீ ராம மந்திரத்தின் ஆறு கோடி ஜபம் நீக்கும். ஸச்சிதானந்தமான பிரும்மநிலை பெறுவான். *(11-13)*

पुनरुवाच विभीषणः–तत्राप्यशक्तोऽयं किं करोति ॥ १४

स होवाचेमम् – कैकसेय पुरश्चरणविधावशक्तो यो ममोपनिषदं मम गीतां मन्नामसहस्रं मद्विश्वरूपं मदष्टोत्तरशतं रामशताभिधानं नारदोक्तस्तवराजं हनूमत्प्रोक्तं मन्त्रराजात्मकस्तवं सीतास्तवं च रामषडक्षरीत्यादिभिर्मन्त्रैर्यो मां नित्यं स्तौति मत्सदृशो भवेन्न किं भवेन्न किम् ॥ १५

*அவ்வாறு செய்ய இயலாத நிலையில் உள்ளவனுக்கு வழி என்ன எனக் கேட்ட விபீஷணனுக்கு ராமன் விளக்குகிறார்- இவ்வாறு புரச்சரண முறைப்படி ஜபிக்க இயலாதவன் எனது உபநிஷத், கீதை, ஸஹஸ்ரநாமஸ்துதி, விச்வரூபஸ்துதி, அஷ்டோத்தர நாமங்கள், சத நாமங்கள், நாரதர் கூறிய ஸ்தவராஜம், ஹனுமான் கூறிய மந்திர ராஜஸ்தோத்திரம், ஸீதா ஸ்தவம், இவற்றுடன் ஷடக்ஷரியை ஜபிக்க இவன் என்நிலை பெறுவான் என்றார் ராமன். (14-15)*

## द्वितीयोऽध्यायः

'இரண்டாவது அத்தியாயம்'

### एकाक्षररामन्त्रः

सनकाद्या मुनयो हनूमन्तं पप्रच्छुः—आञ्जनेय महाबल तारकब्रह्मणो रामचन्द्रस्य मन्त्रग्रामं नो ब्रूहीति ॥

हनूमान् उवाच—

वह्निस्थं शयनं विष्णोरर्धचन्द्रविभूषितम् ।
एकाक्षरो मनुः प्रोक्तो मन्त्रराजः सुरद्रुमः ॥ १

ब्रह्मा मुनिः स्याद् गायत्रं छन्दो रामोऽस्य देवता ।
दीर्घार्धेन्दुयुजाङ्गानि कुर्याद्वह्न्यात्मनो मनोः ॥ २

बीजशक्त्यादिबीजेन इष्टार्थे विनियोजयेत् ।
सरयूतीरमन्दारवेदिकापङ्कजासने ॥ ३

श्यामं वीरासनासीनं ज्ञानमुद्रोपशोभितम्।
वामोरुन्यस्ततद्धस्तं सीतालक्ष्मणसंयुतम्।। ४

अवेक्षमाणमात्मानमात्मन्यमिततेजसम्।
शुद्धस्फटिकसंकाशं केवलं मोक्षकाङ्क्षया ।। ५

*ஸனகாதிமுனிவர்கள்ஹனுமானிடம்தாரகப்பிருமம்மாகிய ராம சந்திரனது மந்திரங்களைக் கூறும் படிகேட்க ஹனுமான் கூறினார் - ராம் என ஓரக்ஷர மந்திரம். பிரும்மா ருஷி, காயத்ரீ சந்தஸ், ராமன் தேவதை; ராம் ரீம் ரூம் ரைம் ரோம் ரௌம் என பீஜ சக்தி - கீலக- கர - அங்க நியாஸங்கள். தியான வடிவம் - ஸரயூ நதிக்கரையில் மந்தார மரத்தினடியில் உள்ள மேடையில் பத்மாஸனத்தில் வீராஸனமாகஅமர்ந்துள்ளவர், கையில் ஜ்ஞான முத்திரை. இடது துடை மீது இடதுகை, இருபுறமும் ஸீதையும் லக்ஷ்மணனும்; தன்னைத் தானே காண்கிற யோக நிலை, பேரொளியாளர், தூயஸ்படிகம் போல் ஒளிர்பவர், அவரைப் பரமாத்மாவாக - முக்தியை மட்டும் விரும்பி தியானித்து 12 லக்ஷம்தடவை ஏகாக்ஷர மந்திர ஜபம் செய்யவும். (1-5)*

वह्निर्नारायणेनाढ्यो जाठरः केवलोऽपि च ।। ६

द्व्यक्षरो मन्त्रराजोऽयं सर्वाभीष्टप्रदस्ततः ।
एकाक्षरोक्तमृष्यादि स्यादाद्येन षडङ्गकम्।। ७

तारमायारमानङ्गवाक्स्वबीजैश्च षड्विधः ।
त्र्यक्षरो मन्त्रराजः स्यात् सर्वाभीष्टफलप्रदः ।। ८

द्व्यक्षरश्चन्द्रभद्रान्तो द्विविधश्चतुरक्षरः ।
ऋष्यादि पूर्ववज्ज्ञेयमेतयोश्च विचक्षणैः ।। ९

*2-3-4 அக்ஷர மந்திரங்கள் - ராம என்ற இரண்டக்ஷர மந்திரம் விரும்பியதை அளிக்க வல்லது. ஏகாக்ஷரத்தைப் போல் இதற்கு ருஷி சந்தஸ் முதலிய நியாஸங்கள். மூன்றக்ஷர மந்திரங்கள் பின் வருமாறு -1. ஓம் ராம; 2. ஹ்ரீம் ராம; 3. ஸ்ரீம் ராம; 4. க்லீம் ராம; 5.ஐம் ராம; 6. ராம் ராம என ஆறு. ருஷி*

*முதலிய நியாஸங்கள் முன்போல். நான்கு அக்ஷரமுள்ள மந்திரங்கள் இரண்டு, ராம சந்த்ர, ராமபத்ர என. (6-9)*

**सप्रतिष्ठौ रमौ वायू हृत्पञ्चार्णो मनुर्मतः ।**
**विश्वामित्र ऋषिः प्रोक्तः पङ्क्तिश्छन्दोऽस्य देवता ॥ १०**

**रामभद्रो बीजशक्तिप्रथमार्णनतिक्रमात् ।**
**भ्रूमध्ये हृदि नाभ्यूर्वोः पादयोर्विन्यसेन्मनुम् ॥ ११**

**षडङ्गं पूर्ववद्विद्वान् मन्त्रार्णैर्मनुनास्त्रकम् ।**
**मध्ये वनं कल्पतरोर्मूले पुष्पलतासने ॥ १२**

**लक्ष्मणेन प्रगुणितमक्ष्णः कोणेन सायकम् ।**
**अवेक्षमाणं जानक्या कृतव्यजनमीश्वरम् ॥ १३**

**जटाभरलसच्छीर्षं श्यामं मुनिगणावृतम् ।**
**लक्ष्मणेन धृतच्छत्रमथवा पुष्पकोपरि ॥ १४**

**दशास्यमथनं शान्तं ससुग्रीवविभीषणम् ।**
**एवं लब्ध्वा जयार्थी तु वर्णलक्षं जपेन्मनुम् ॥ १५**

*ஐந்தக்ஷரமந்திரம்- ஶ்ரீம் ஶ்ரீம் யம் நம: என. ராம் நம: ரீம் நம: என்றவாறு நியாஸங்கள் புருவ நடுவில் இதயத்தில், தொப்புளில், தொடைகளில், கால்களில், உடல்முழுவதும் என நியாஸ இடங்கள். முழுமந்திரமும் அஸ்திர நியாஸத்தில். தியானவடிவம் - கற்பகவனம், கற்பக மரத்தின் அடியில் பூங்கொடிகளாலான ஆஸனத்தில் லக்ஷ்மணனுல் தீட்டப் பெற்ற அம்பை கண்ணேரத்தால் பார்வையிடுகிற ராமன், ஸீதை சாமரம் வீசுகிருள். சடைமுடி மேகவண்ணம், சுற்றி முனிவர்கள். மற்ருெரு தியான வடிவம் - புஷ்பகவிமானத்தின் மீது லக்ஷ்மணன் குடைபிடிக்க ராவணவதம் செய்த ராமன் அமர்ந்துள்ளார். இருபுறத்திலும் ஸுக்ரீவனும் விபீஷணனும். வெற்றி பெற ஸங்கல்பம். (ஒரு எழுத்திற்கு ஒரு லக்ஷம் என) ஐந்து லக்ஷஜபம். (10-15)*

स्वकामशक्तिवाग्लक्ष्मीताराद्याः पञ्चवर्णकाः ।
षडक्षरः षड्विधः स्याच्चतुर्वर्गफलप्रदः ।। १६

पञ्चाशन्मातृकामन्त्रवर्णप्रत्येकपूर्वकम् ।
लक्ष्मीवाङ्मन्मथादिश्च तारादिः स्यादनेकधा ।। १७

श्रीमायामन्मथैकैकं बीजाद्यन्तगतो मनुः ।
चतुर्वर्णः स एव स्यात् षड्वर्णो वाञ्छितप्रदः ।। १८

स्वाहान्तो हुंफडन्तो वा नत्यन्तो वा भवेदयम् ।
अष्टाविंशत्युत्तरशतभेदः षड्वर्ण ईरितः ।। १९

ब्रह्मा संमोहनः शक्तिर्दक्षिणामूर्तिरेव च ।
अगस्त्यश्च शिवः प्रोक्ता मुनयोऽनुक्रमादिमे ।। २०

छन्दो गायत्रसंज्ञं च श्रीरामश्चैव देवता ।
अथवा कामबीजादेर्विश्वामित्रो मुनिर्मनोः ।। २१

छन्दो देव्यादिगायत्री रामभद्रोऽस्य देवता ।
बीजशक्ती यथापूर्वं षड्वर्णान् विन्यसेत् क्रमात् ।। २२

ब्रह्मरन्ध्रे भ्रुवोर्मध्ये हृन्नाभ्यूरुषु पादयोः ।
बीजैः षड्दीर्घयुक्तैर्वा मन्त्रार्णैर्वा षडङ्गकम् ।। २३

कालाम्भोधरकान्तिकान्तमनिशं वीरासनाध्यासितं
मुद्रां ज्ञानमयीं दधानमपरं हस्ताम्बुजं जानुनि ।
सीतां पार्श्वगतां सरोरुहकरां विद्युन्निभां राघवं
पश्यन्तं मुकुटाङ्गदादिविविधाकल्पोज्ज्वलाङ्गं भजे ।। २४

ஷடக்ஷரமந்திரம் - முன் சொன்ன ஐந்தக்ஷரமந்திரத்தையே ராம், க்லீம், ஹ்ரீம், ஐம், ஸ்ரீம், ஓம் என ஏதேனும் ஒரு பீஜாக்ஷரத்துடன் இணைக்க ஷடக்ஷரம் ஆறு வகைப்படும். அம் ஆம்

இம் ஈம்...க்ஷம் என 50 மாத்ருகாக்ஷரங்களில் ஒன்றுடன் சேர்க்க 50 மந்திரங்கள் ஸ்ரீம், ஐம், க்லீம், ஓம் என்ற நான்கில் ஒன்றை ஐந்தக்ஷரமந்திரத்தின் முன் சேர்க்க நான்கு மந்திரங்கள். ஸ்ரீம் ஹ்ரீம் க்லீம் என்ற பீஜங்களில் ஒன்றைப் பின் சேர்க்க மூனறு மந்திரங்கள். ராம் ராமாய ஸ்வாஹா. ராம் ராமாய ஹும்பட். ராம் ராமாய நம: என க்ஷகாரம் முதல் அகாரம் வரையில் ஐந்த க்ஷரத்துடன் ஒவ்வொரு எழுத்தாகச் சேர்க்க (ஸ்ரீம் ஸ்ரீம்யம். நம: க்ஷம். ஸ்ரீம் ஸ்ரீம் யம் நம: ஹம்.... யம் நம: அம் என்றவாறு) 50 மந்திரங்கள் ஆக 128 விதமான மந்திரங்கள். பிரும்மா, ஸம்மோஹனர், சக்தி, தக்ஷிணா மூர்த்தி, அகஸ்தியர், சிவன் இவர்கள் வரிசையாக ஒவ்வொரு தொகுப்பிற்கும் ருஷிகள், காயத்ரீ சந்தஸ், ஸ்ரீ ராமன் தேவதை. மற்றொரு முறை - க்லீம் என்ற காம பீஜத்தை முதலில் கொண்ட மந்திரத்திற்கு விசுவாமித்ரர் ருஷி, தேவீ காயத்ரீ சந்தஸ், ராமபத்ரர் தேவதை; பீஜமும் சக்தியும் முன்போல் ராம், ரீம் என்ற அக்ஷரவரிசையைக் கொண்டோ, மந்திரத்தின் அக்ஷரங்களைக் கொண்டோ ஷடங்க நியாஸம். தியான வடிவம் - கருமேக வண்ணர், வீராஸனத்தில் அமர்ந்தவர், ஞான முத்ரையைக் கையில் கொண்டவர், மற்றொருகை முழங்கால் மீது . தாமரையைக் கையில் கொண்ட மின்னல் ஒளிபோன்ற அருகிலுள்ள ஸீதையைப் பார்க்கின்ற ராமன், மகுடம் அங்கதம் போன்ற பல ஆபரணங்களை ஒளியுடன் சூடியவர். இவரை வழிபடுகிறேன் என. (16- 24)

रामश्च चन्द्रभद्रान्तो ङेन्तो नतियुतो द्विधा ।
सप्ताक्षरो मन्त्रराजः सर्वकामफलप्रदः ॥ २५

तारादिसहितः सोऽपि द्विविधोऽष्टाक्षरो मतः ।
तारं रामश्चतुर्थ्यन्तं क्रोडास्त्रं वह्नितल्पगा ॥ २६

अष्टार्णोऽयं परो मन्त्रो ऋष्यादिः स्यात् षडर्णवत् ।
पुनरष्टाक्षरस्याथ राम एव ऋषिः स्मृतः ॥ २७

गायत्रं छन्द इत्यस्य देवता राम एव च ।
तारं श्रीबीजयुग्मौ च बीजशक्त्यादयो मताः ॥ २८

षडङ्गं च ततः कुर्यान्मन्त्रार्णैरेव बुद्धिमान्।
तारं श्रीबीजयुग्मं च रामाय नम उच्चरेत्॥ २९

ग्लौमों बीजं वदेन्मायां हृद्रामाय पुनश्च ताम्।
शिवोमाराममन्त्रोऽयं वस्वर्णस्तु वसुप्रदः॥ ३०

ऋषिः सदाशिवः प्रोक्तो गायत्रं छन्द उच्यते।
शिवोमारामचन्द्रोऽत्र देवता परिकीर्तितः॥ ३१

दीर्घया माययाङ्गानि तारपञ्चार्णयुक्तया।
रामं त्रिणेत्रं सोमार्धधारिणं शूलिनं परम्।
भस्मोद्धूलितसर्वाङ्गं कपर्दिनमुपास्महे॥ ३२

रामाभिरामां सौन्दर्यसीमां सोमावतंसिकाम्।
पाशाङ्कुशधनुर्बाणधरां ध्यायेत् त्रिलोचनाम्॥ ३३

ध्यायन्नेवं वर्णलक्षं जपतर्पणतत्परः।
बिल्वपत्रैः फलैः पुष्पैस्तिलाज्यैः पङ्कजैर्हुनेत्॥ ३४

स्वयमायान्ति निधयः सिद्धयश्च सुरेप्सिताः।
पुनरष्टाक्षरस्याथ ब्रह्मगायत्रराघवाः॥ ३५

ऋष्यादयस्तु विज्ञेयाः श्रीबीजं मम शक्तिकम्।
तत्प्रीत्यै विनियोगश्च मन्त्रार्णैरङ्गकल्पना॥ ३६

केयूराङ्गदकङ्कणैर्मणिगणैर्विद्योतमानं सदा
रामं पार्वणचन्द्रकोटिसदृशच्छत्रेण वै राजितम्।
हेमस्तम्भसहस्रषोडशयुते मध्ये महामण्डपे
देवेशं भरतादिभिः परिवृतं रामं भजे श्यामलम्॥ ३७

किं मन्त्रैर्बहुभिर्विनश्वरफलैरायाससाध्यैर्वृथा
किंचिल्लोभवितानमात्रविफलैः संसारदुःखावहैः ।
एकः सन्नपि सर्वमन्त्रफलदो लोभादिदोषोज्झितः
श्रीरामः शरणं ममेति सततं मन्त्रोऽयमष्टाक्षरः ॥ ३८

एवमष्टाक्षरः सम्यक् सप्तधा परिकीर्तितः ।
रामसप्ताक्षरो मन्त्र आद्यन्ते तारसंयुतः ॥ ३९

नवार्णो मन्त्रराजः स्याच्छेषं षड्वर्णवन्न्यसेत् ।

*7-8-9 அக்ஷரமந்திரங்கள் - ராம சந்த்ராய நம: ராமபத்ராய நம: என இரண்டு ஏழக்ஷரமந்திரங்கள். பிரணவத்தை முதலில் சேர்க்க இரண்டு எட்டக்ஷரமந்திரங்கள். பிரணவத்தைப் போல் ஹ்ரீம், ஸ்ரீம், க்லீம், ஐம், ராம் என்ற பீஜங்களைச் சேர்க்கலாம். ஏழக்ஷரத்தில் ருஷி முதலிய நியாஸங்கள். ஓம் ராமாய ஹூம் பட் ஸ்வாஹாஎன ஒரு மந்திரம். இதற்கு காயத்ரீ சந்தஸ், ராமன் தேவதை.*

*ஓம் ஸ்ரீம் ஸ்ரீம் ராமாய நம:. க்லௌம் ஓம் ஹ்ரீம் நமோ ராமாய என இரண்டு. இது உமாமஹேச்வர ராம மந்திரம். செல்வம் பெருகும். ஸதாசிவர் ருஷி, காயத்ரீ சந்தஸ். சிவ-உமா-ராம சந்திரர்கள் தேவதை. ஹ்ராம் ஓம் ராமாய நம;, ஹ்ரீம் ஓம் ராமாய நம: என்றவாறு ஷடங்கங்கள். தியானம் - ராமன் முக்கண்ணர், பாதிசந்திரன் சூடியவர் சூலம் ஏந்தியவர், விபூதியை உடல்முழுவதும் பூசியவர், சடைமுடி கொண்ட சிவனைத் தியானிக்கிறேன். அருகில் மிக மிக அழகி, அழகின் எல்லை, சந்திரனை சூடியவள், பாசம் அங்குசம் வில் அம்பு ஏந்திய நான்குகைகள் கொண்டவள், மூன்று கண்கள் கொண்ட உமை, இவ்வாறு தியானித்து மந்திரத்தை 8 லக்ஷம் தடவை ஜபிக்கவும், வில்வஇலை, வில்வக்காய், புஷ்பம், எள்ளு, நெய், தாமரை இவற்றால் ஹோமம் செய்யவும். தேவர் விரும்புகிற நிதிகளும் ஸித்திகளும் கூடும். எட்டக்ஷரமந்திரத்திற்கு பிரும்மா ருஷி, காயத்ரீ சந்தஸ், ராமன் தேவதை, ஸ்ரீம் சக்தி, ராமனது திருப்தி பெற ஜபம். மந்திரா க்ஷரங்களால் அங்க நியாஸம் முதலியவை.*

*தியானம் - 16 ஆயிரம் தங்கத் தூண்கள் கொண்ட மஹா மண்டபத்தில், கேயூரம், அங்கதம், காப்புகள் பூண்டவராக, பௌர்ணமி சந்திர ஒளி கொண்ட வெண்குடையின் கீழ் பரதன் முதலானவர் சூழ அமர்ந்துள்ள மேகவண்ணனை ராமனை வழிபடுகிறேன் என.*

*ஸ்ரீ ராம: சரணம் மம என ஒரு எட்ட க்ஷரமந்திரம் .மற்ற எட்டக்ஷர மந்திரங்கள் ஜபிக்க இதைப்போல் எளிதானவையல்ல. குறையற்ற இந்த மந்திரம் மற்ற மந்திரங்கள் தருகிற பலனைத் தர வல்லது.*

*ராமனின் ஏழக்ஷரமந்திரத்துடன் முன்னரும் பின்னரும் பிரணவம் சேர்க்க ஒன்பதக்ஷரமந்திரம். மற்ற முறைகள் ஷடக்ஷரத்திற்கு உள்ளவை.(25-39)*

जानकीवल्लभं ङेन्तं वह्नेर्जाया हुमादिकम् ।। ४०

दशाक्षरोऽयं मन्त्रः स्यात् सर्वाभीष्टफलप्रदः ।
दशाक्षरस्य मन्त्रस्य वसिष्ठोऽस्य ऋषिर्विराट् ।। ४१

छन्दोऽस्य देवता रामः सीतापाणिपरिग्रहः ।
आद्यो बीजं द्विठः शक्तिः कामेनाङ्गक्रिया मता ।। ४२

शिरोललाटभ्रूमध्ये तालुकर्णेषु हृद्यपि ।
नाभ्यूरुजानुपादेषु दशार्णान् विन्यसेन्मनोः ।। ४३

अयोध्यानगरे रत्नचित्रे सौवर्णमण्डपे ।
मन्दारपुष्पैराबद्धविताने तोरणाञ्चिते ।। ४४

सिंहासने समासीनं पुष्पकोपरि राघवम् ।
रक्षोभिर्हरिभिर्देवैर्दिव्ययानगतैः शुभैः ।। ४५

संस्तूयमानं मुनिभिः प्रह्वैश्च परिसेवितम् ।
सीतालङ्कृतवामाङ्गं लक्ष्मणेनोपसेवितम् ।। ४६

श्यामं प्रसन्नवदनं सर्वाभरणभूषितम् ।
ध्यायन्नेवं जपेन्मन्त्रं वर्णलक्षमनन्यधीः ॥ ४७

रामं ङेन्तं धनुष्पाणयेऽन्तः स्याद्वह्निसुन्दरी ।
दशाक्षरोऽयं मन्त्रः स्यान्मुनिर्ब्रह्मा विराट्स्मृतः ॥ ४८

छन्दस्तु देवता प्रोक्तो रामो राक्षसमर्दनः ।
शेषं तु पूर्ववत् कुर्याच्चापबाणधरं स्मरेत् ॥ ४९

तारमायारमानङ्गवाक्स्वबीजैश्च षड्विधः ।
दशार्णो मन्त्रराजः स्याद्रुद्रवर्णात्मको मनुः ॥ ५०

शेषं षडर्णवज्ज्ञेयं न्यासध्यानादिकं बुधैः ।

*10-11 அக்ஷரமந்திரங்கள் - ஹூம் ஜானகீ வல்லபாய ஸ்வாஹா என பத்தக்ஷரமந்திரம். விரும்பியதைத் தரவல்லது. வஸிஷ்டர் ருஷி, விராட்சந்தஸ், ஸீதாபாணி பரிக்ரஹனுன ராமன் தேவதை. (ஸீதையைக் கையில் பிடித்த ராமன் என விவாஹ காலத்து கோலம்) ஹூம்பீஜம், ஸ்வாஹா சக்தி, க்லாம் க்லீம் என்றவாறு காமபீஜத்தால் ஷடங்க நியாஸம். தலை, நெற்றி, புருவநடுப்பகுதி, தாடை, காது, இதயம், தொப்புள், துடை, முழங்கால், கால் எனப் பத்து அங்கங்களில் மந்திராக்ஷரம் ஒவ்வொன்றுலும் நியாஸம். தியானம் - அயோத்தி நகரில் ரத்தினங்களால் அழகுற்ற தங்கமண்டபம். மந்தாரபூக்களாலான மேல் விதானம், தோரணம், புஷ்பகவிமானத்தில் அமர்ந்த ராமன், அரக்கர், வானரர், வானவிமானங்களில் அமர்ந்த தேவர், முனிவர் வணங்க, ஸீதை இடதுமடியில், லக்ஷ்மணனின் பணிவிடையை ஏற்கிற கார்மேக வண்ணனுன ராமன் தெளிந்தமுகம், பல அணிகள் பூண்டவன் என. இவ்வாறு தியானித்து 10 லக்ஷம் ஜபம் செய்யவும்.*

*ராமாய தனுஷ்பாணயே ஸ்வாஹா எனப் பத்த க்ஷரமந்திரம். பிரும்மா ருஷி. விராட் சந்தஸ், ராக்ஷஸ மர்த்தனனுன ராமன் தேவதை. வில்லும் பாணமும் ஏந்திய*

ராமனது தியானம். இந்த பத்தக்ஷரமந்திரத்துடன் முதலில் ஓம், ஹ்ரீம், ஶ்ரீம், க்லீம், ஐம் ராம் என பீஜங்களில் ஒன்றைச் சேர்த்த பத்தக்ஷர மந்திரம் 11 அக்ஷரமந்திரங்கள் ஆறு ஆகும். தியானம் நியாஸம் முதலியவை ஷடக்ஷரமந்திரத்தில் கூறியதே. (40-50)

## द्वादशाक्षरमन्त्रः

द्वादशाक्षरमन्त्रस्य श्रीरामो ऋषिरुच्यते ॥ ५१

जगती छन्द इत्युक्तं श्रीरामो देवता मतः ।
प्रणवो बीजमित्युक्तः क्लीं शक्तिर्ह्रीं च कीलकम् ॥ ५२

मन्त्रेणाङ्गानि विन्यस्य शिष्टं पूर्ववदाचरेत् ।
तारं मायां समुच्चार्य भरताग्रज इत्यपि ॥ ५३

रामक्लींवह्निजायान्तं मन्त्रोऽयं द्वादशाक्षरः ।
ओं हृद्भगवते रामचन्द्रभद्रौ च ङेयुतौ ॥ ५४

अर्कार्णो द्विविधोऽप्यस्य ऋषिध्यानादि पूर्ववत् ।
छन्दस्तु जगती चैव मन्त्रार्णैरङ्गकल्पना ॥ ५५

12 அக்ஷரமந்திரம்- இதற்கு ராமன் ருஷி. ஜகதீ சந்தஸ், ஸ்ரீராமன் தேவதை, ஓம் பீஜம், க்லீம் சக்தி, ஹ்ரீம் கீலகம், மந்திரப்பகுதியால் அங்கநியாஸம். ஓம் ஹ்ரீம் பரதாக்ரஜ ராம க்லீம் ஸ்வாஹா என. ஓம் நமோ பகவதே ராம சந்த்ராய, ஓம் நமோ பகவதே ராமபத்ராய என்றும் மந்திரங்கள் இரண்டு உண்டு. நியாஸங்கள் முன் போல். (51-55)

### त्रयोदश-चतुर्दश-पञ्चदशाक्षरमन्त्रः

श्रीरामेति पदं चोक्त्वा जयराम पदं ततः ।
जयद्वयं वदेत् प्राज्ञो रामेति मनुराजकः ॥ ५६

त्रयोदशार्ण ऋष्यादि पूर्ववत् सर्वकामदः ।
पदद्वयैर्द्विरावृत्तैरङ्गन्यासं दशार्णवत् ॥ ५७

तारादिसहितः सोऽपि स चतुर्दशवर्णकः ।
त्रयोदशार्णमुच्चार्य पश्चाद्रामेति योजयेत् ॥ ४८

स वै पञ्चदशार्णस्तु जपतां कल्पभूरुहः ।

*13-14-15 அக்ஷரமந்திரங்கள். ஸ்ரீராம ஜய ராம ஜய ஜய ராம என. ஸ்ரீராம, ஜய ராம - ஜய ஜய ராம என மந்திரத்தை மூன்றாகப் பிரித்து இருதடவை கூறி அங்கநியாஸம். பிரணவம் முதலியவற்றில் ஒவ்வொரு பீஜம் சேர்த்து 14 அக்ஷரமந்திரம். ஸ்ரீராம - ஜயராம- ஜய ஜய ராம - ராம என 15 அக்ஷரமந்திரம். விரும்பியதைத் தரவல்லது. (56- 58)*

## षोडश-सप्तदशाक्षरमन्त्रः

नमश्च सीतापतये रामायेति हनद्वयम् ॥ ५९

ततस्तु कवचास्त्रान्तः षोडशाक्षर ईरितः ।
तस्यागस्त्य ऋषिश्छन्दो बृहती देवता च सः ॥ ६०

रां बीजं शक्तिरस्त्रं च कीलकं हुमितीरितम् ।
द्विपञ्चत्रिचतुर्वर्णैः सर्वैरङ्गं न्यसेत् क्रमात् ॥

तारादिसहितः सोऽपि मन्त्रः सप्तदशाक्षरः ।

*16-17 அக்ஷரமந்திரங்கள்- நம: ஸீதாபதயே ராமாய ஹந ஹந ஹூம் பட் எனப்பதினாறு அக்ஷரங்கள். அகஸ்தியர் ருஷி பிருஹதீ சந்தஸ், ராமன் தேவதை, ராம் பீஜம். பட் சக்தி, ஹூம் கீலகம் மந்திரத்தை, 2,5,3,4, என நான்காகவும் முழுவதாகவும் நியாஸங்கள். இதேமந்திரத்தில் பிரணவம் முதலியவற்றில் ஒவ்வொன்றைச் சேர்க்க ஆறுவகை பதினேழு அக்ஷரமந்திரங்கள். (59-61)*

तारं नमो भगवते रामं ङेन्तं महा ततः ॥ ६२

पुरुषाय पदं पश्चाद्धृदन्तोऽष्टादशाक्षरः ।
विश्वामित्रो मुनिश्छन्दो गायत्रं देवता च सः ॥ ६३

कामादिसहितः सोऽपि मन्त्र एकोनविंशकः ।
तारं नमो भगवते रामायेति पदं वदेत् ॥ ६४

सर्वशब्दं समुच्चार्य सौभाग्यं देहि मे वदेत् ।
वह्निजायां ततोच्चार्य मन्त्रो विंशार्णको मतः ॥ ६५

*18-19 அக்ஷரமந்திரங்கள் -ஓம் நமோ பகவதே ராமாய மஹா புருஷாய நம: என 18 அக்ஷரமந்திரம். விசுவாமித்ரர் ருஷி. காயத்ரீ சந்தஸ், ராமன் தேவதை. ஓம் க்லீம் என்ற ஆறு பீஜங்களில் ஒன்றுடன் இணைக்க 6 பதினெட்டக்ஷரமந்திரங்கள். (62-63)*

20 *அக்ஷரமந்திரம் - ஓம் நமோ பகவதே ராமாய ஸர்வஸௌபாக்யம் தேஹிமே ஸ்வாஹா என்பது (64-65)*

तारं नमो भगवते रामाय सकलं वदेत् ।
आपन्निवारणायेति वह्निजायां ततो वदेत् ॥ ६६

एकविंशार्णको मन्त्रः सर्वाभीष्टफलप्रदः ।

*21 அக்ஷரமந்திரம்- ஓம் நமோ பகவதே ராமாய ஸகலாபந்நிவாரணாய ஸ்வாஹா என. விரும்பியதனைத்தையும் தருவது. (66)*

तारं रमां खबीजं च ततो दाशरथाय च ॥ ६७

ततः सीतावल्लभाय सर्वाभीष्टपदं वदेत् ।
ततो दाय हृदन्तोऽयं मन्त्रो द्वाविंशदक्षरः ॥ ६८

22 *அக்ஷரமந்திரம்- ஓம் ஶ்ரீம் ராம் தாசரதாய ஸீதா வல்லபாய ஸர்வா பீஷ்டதாய நம: என (67-68)*

तारं नमो भगवते वीररामाय सं वदेत् ।
कलशत्रून् हनद्वन्द्वं वह्निजायां ततो वदेत् ॥ ६९

त्रयोविंशाक्षरो मन्त्रः सर्वशत्रुनिबर्हणः ।
विश्वामित्रो मनिः प्रोक्तो गायत्रं छन्द उच्यते ॥ ७०

देवता वीररामोऽसौ बीजाद्याः पूर्ववन्मताः ।
मूलमन्त्रविभागेन न्यासान् कृत्वा विचक्षणः ॥ ७१

शरं धनुषि सन्धाय तिष्ठन्तं रावणोन्मुखम् ।
वज्रपाणिरथारूढं रामं ध्यात्वा जपेन्मनुम् ॥ ७२

23 அக்ஷரமந்திரம் - ஓம் நமோ பகவதே வீரராமாய ஸகலசத்ருன் ஹநஹந ஸ்வாஹா என. சத்ருக்களை அழிப்பது. விச்வாமித்ரர் ருஷி. காயத்ரீ சந்தஸ். வீரராமன் தேவதை. பீஜம் முதலியவை முன் போல். மந்திரத்தை ஆறுகப்பிரித்து நியாஸங்கள். தியானவடிவம் ராவணனை எதிர்நோக்கி வில்லில் அம்பைப் பூட்டி நிற்பவர். இந்திரனின் தேரில் அமர்ந்தவரான ராமன். *(69-72)*

तारं नमो भगवते श्रीरामाय पदं वदेत् ।
तारकब्रह्मणे चोक्त्वा मां तारय पदं वदेत् ॥ ७३

नमस्तारात्मको मन्त्रश्चतुर्विंशतिवर्णकः ।
बीजादिकं यथापूर्वं सर्वं कुर्यात् षडर्णवत् ॥ ७४

*24 அக்ஷரமந்திரம் -ஓம் நமோ பகவதே ஸ்ரீ ராமாய தாரகப்ரம்ஹணே மாம் தாரய நம: ஓம் என. (73-74)*

कामस्तारो नतिश्चैव ततो भगवतेपदम् ।
रामचन्द्राय चोच्चार्य सकलेति पदं वदेत् ॥ ७५

जनवश्यकरायेति स्वाहा कामात्मको मनुः ।
सर्ववश्यकरो मन्त्रः पञ्चविंशतिवर्णकः ॥ ७६

आदौ तारेण संयुक्तो मन्त्रः षड्विंशदक्षरः ।
अन्तेऽपि तारसंयुक्तः सप्तविंशतिवर्णकः ॥ ७७

*25-26-27 அக்ஷரமந்திரங்கள் -க்லீம் ஓம் நமோ பகவதே ராமசந்த்ராய ஸகலஜன வச்யகராய ஸ்வாஹா என 25*

*அக்ஷரமந்திரம் .முதலில் பிரணவம் சேர்க்க 26 அக்ஷரமும் முதலிலும் கடைசியிலும் பிரணவம் சேர்க்க 27 அக்ஷரமுமாகும். (75-77)*

तारं नमो भगवते रक्षोघ्नविशदाय च ।
सर्वविघ्नान् समुच्चार्य निवारयपदद्वयम् ॥ ७८

स्वाहान्तो मन्त्रराजोऽयमष्टाविंशतिवर्णकः ।
अन्ते तारेण संयुक्त एकोनत्रिंशदक्षरः ॥ ७९

आदौ स्वबीजसंयुक्तस्त्रिंशद्वर्णात्मको मनुः ।
अन्तेऽपि तेन संयुक्त एकत्रिंशात्मकः स्मृतः ॥ ८०

*28-29-30-31 அக்ஷரமந்திரங்கள்- ஓம் நமோ பகவதே ரக்ஷோக்ன விசதாய ஸர்வவிக்நான் நிவாரய நிவாரய ஸ்வாஹா என 28 அக்ஷரமந்திரம் .கடைசியில் பிரணவம் சேர்க்க 29 அக்ஷரம். முதலில் ராம் சேர்க்க 30 அக்ஷரம். கடைசியிலும் ராம் சேர்க்க 31 அக்ஷரம். (78-80)*

रामभद्र महेष्वास रघुवीर नृपोत्तम ।
भो दशास्यान्तकास्माकं श्रियं दापय दापय ॥ ८१

आनुष्टुभ ऋषी रामश्छन्दोऽनुष्टुप्स देवता ।
रां बीजमस्य यं शक्तिरिष्टार्थे विनियोजयेत् ॥ ८२

पादं हृदि च विन्यस्य पादं शिरसि विन्यसेत् ।
शिखायां पञ्चभिर्न्यस्य त्रिवर्णैः कवचं न्यसेत् ॥ ८३

नेत्रयोः पञ्चवर्णैश्च दापयेत्यस्त्रमुच्यते ।
चापबाणधरं श्यामं ससुग्रीवविभीषणम् ॥ ८४

हत्वा रावणमायान्तं कृतत्रैलोक्यरक्षणम् ।
रामभद्रं हृदि ध्यात्वा दशलक्षं जपेन्मनुम् ॥ ८५

ராம அனுஷ்டுப் - ராமபத்ர மஹேஷ்வாஸ ரகுவீர ந்ருபோத்தம போ தசாஸ்யாந்தகாஸ்மாகம் ச்ரியம் தாபய தாபய என. ராமனே ருஷியும் தேவதையும். அனுஷ்டுப் சந்தஸ். ராம் பீஜம். யம் சக்தி. விரும்பியதைப் பெற என விநியோகம். (இஷ்டப்ராப்த்யர்த்தே விநியோக:) முதல் பாதம் ஹ்ருதய நியாஸம். 2ம் பாதம் சிரோ நியாஸம். போ தசாஸ்யாந்தக சிகா நியாஸம். அஸ்மாகம் கவசம், ச்ரியம்தாபய - நேத்ரநியாஸம், தாபய அஸ்திரம். தியானம்- வில்லும் அம்பும் ஏந்தியவர். கார்மேகவண்ணர், ஸுக்ரீவனோடும் விபீஷணனோடும் கூடியவர். ராவணனைக் கொன்ற பின் போர் முனையிலிருந்து திரும்பி வருபவர். மூவுலகையும் காத்த ராமபத்ரர் என. பத்து லக்ஷம் தடவை ஜபிக்கவும். *(81-85)*

वदेद्दाशरथायेति विद्महेति पदं ततः ।
सीतापदं समुद्धृत्य वल्लभाय ततो वदेत् ॥ ८६

धीमहीति वदेत् तन्नो रामश्चापि प्रचोदयात् ।
तारादिरेषा गायत्री मुक्तिमेव प्रयच्छति ॥ ८७

मायादिरपि वैदुष्यं रामादिश्च श्रियः पदम् ।
मदनेनापि संयुक्ता संमोहयति मेदिनीम् ॥ ८८

पञ्च त्रीणि षडर्णैश्च त्रीणि चत्वारि वर्णकैः ।
चत्वारि च चतुर्वर्णैरङ्गन्यासं प्रकल्पयेत् ॥ ८९

बीजध्यानादिकं सर्वं कुर्यात् षड्वर्णवत् क्रमात् ।

ராம காயத்ரீ -தாசரதாய வித்மஹே ஸீதா வல்லபாய தீமஹி. தந்நோ ராம: ப்ரசோதயாத் என. ஓங்காரத்தை முதலில் கொண்டது முக்தி தரும். ஹ்ரீம் என முதலில் கொண்டது பேரறிவைத் தரும். ராம் என முதலில் கொண்டது செல்வத்தைத் தரும். க்லீம் என்பதைக் கொள்ள வசியப்படுத்தும். 5-3-6-3-4-4 என்ற எழுத்து வரிசையால் ஷடங்க நியாஸம். ஷடக்ஷரத்திற்கான பீஜம் சக்தி கீலகம் தியானம் முதலியவை. *(86-89)*

तारं नमो भगवते चतुर्थ्या रघुनन्दनम् ।। ९०

रक्षोघ्नविशदं तद्वन्मधुरेति वदेत्ततः ।
प्रसन्नवदनं ङेन्तं वदेदमिततेजसे ।। ९१

बलरामौ चतुर्थ्यन्तौ विष्णुं ङेन्तं नतिस्ततः ।
प्रोक्तो मालामनुः सप्तचत्वारिंशद्भिरक्षरैः ।। ९२

ऋषिच्छन्दोदेवतादि ब्रह्मानुष्टुभराघवाः ।
सप्तर्तुसप्तदशषड्रुद्रसंख्यैः षडङ्गकम् ।। ९३

ध्यानं दशाक्षरं प्रोक्तं लक्षमेकं जपेन्मनुम् ।

ராம மாலா மந்திரம் -ஓம் நமோ ரகுநந்தநாய ரக்ஷோக்ன விசதாய மதுரப்ரஸன்னவதநாய அமிததேஜஸே பலாய ராமாய விஷ்ணவே நம: என 47 அக்ஷரங்கள் கொண்டது. பிரும்மா ருஷி. அனுஷ்டுப் சந்தஸ். ராகவன் தேவதை. 7-6-7-10-6-11 எழுத்துக்களைக் கொண்டது ஷடங்க நியாஸம். 10 அக்ஷரமந்திரத்தின் தியானம் .ஒரு லக்ஷஜபம். (90-93)

श्रियं सीता चतुर्थ्यन्ता स्वाहान्तोऽयं षडक्षरः ।। ९४

जनकोऽस्य ऋषिश्छन्दो गायत्री देवता मनोः ।
सीता भगवती प्रोक्ता श्रीं बीजं नतिशक्तिकम् ।। ९५

कीलं सीता चतुर्थ्यन्तमिष्टार्थे विनियोजयेत् ।
दीर्घस्वरयुजाद्येन षडङ्गानि प्रकल्पयेत् ।। ९६

स्वर्णाभामम्बुजकरां रामालोकनतत्पराम् ।
ध्यायेत् षट्कोणमध्यस्थरामाङ्कोपरिसंस्थिताम् ।। ९७

ஸீதா மந்திரம் - ஸ்ரீம் ஸீதாயை ஸ்வாஹா என ஆறு அக்ஷரங்கள் கொண்டது. ஜனகர் ருஷி, காயத்ரீ சந்தஸ். பகவதீ ஸீதா தேவதை. ஸ்ரீம் பீஜம், நம: சக்தி, ஸீதா கீலகம்.

*இஷ்டப்ராப்தயே விநியோக:. ச்ராம் ஸ்ரீம் என ஷடங்க நியாஸம். தியானம் - தங்க மேனியள், தாமரையை கையில் கொண்டவள், ராமனைக் காண்பதில் ஆர்வமிக்கவள். ஷட்கோணத்தின் நடுவிலமர்ந்த ராமனின் மடிமீதமர்ந்தவள் என. (94-97)*

लकारं तु समुद्धृत्य लक्ष्मणाय नमोऽन्तकः ।
अगस्त्यऋषिरस्याथ गायत्रं छन्द उच्यते ॥ ९८

लक्ष्मणो देवता प्रोक्तो लं बीजं शक्तिरस्य हि ।
नमस्तु विनियोगो हि पुरुषार्थचतुष्टये ॥ ९९

दीर्घभाजा स्वबीजेन षडङ्गानि प्रकल्पयेत् ।
द्विभुजं स्वर्णरुचिरतनुं पद्मनिभेक्षणम् ॥ १००

धनुर्बाणधरं वन्दे रामाराधनतत्परम् ।

*லக்ஷ்மண மந்திரம் -லம் லக்ஷ்மணாய நம: என .அகஸ்தியர் ருஷி. காயத்ரீ சந்தஸ், லக்ஷ்மணன் தேவதை. லம்பீஜம். நம: சக்தி. புருஷார்த்த சதுஷ்டய ஸித்தயே விநியோக: நான்கு புருஷார்த்தங்களும் பெற என விநியோகம். லாம் லீம் என்றவாறு ஷடங்கம். தியானம்- இருகைகளுள்ளவர், தங்க வண்ண மேனியர், தாமரை போன்ற கண்களுள்ளவர். வில்லும் அம்பும் ஏந்தியவர், ராமனுக்குப் பணிவிடை புரிவதில் ஆர்வமிக்கவர். (98-100)*

भकारं तु समुद्धृत्य भरताय नमोऽन्तकः ॥ १०१

अगस्त्य ऋषिरस्याथ शेषं पूर्ववदाचरेत् ।
भरतं श्यामलं शान्तं रामसेवापरायणम् ॥ १०२

धनुर्बाणधरं वीरं कैकेयीतनयं भजे ।

*29. பரத மந்திரம்- பம் பரதாய நம:. அகஸ்தியர் ரிஷி. மற்றவை லக்ஷ்மணனுடையது போல். தியானம்- கார்மேகவண்ணர், அமைதி மிக்கவர். ராமனுக்குப் பணிவிடை*

புரிவதில் அக்கரை கொண்டவர், வில்லும் அம்பும் ஏந்தியவர், கைகேயியின் புதல்வர் என. 101-102

शं बीजं तु समुद्धृत्य शत्रुघ्नाय नमोऽन्तकः ।
ऋष्यादयो यथापूर्वं विनियोगोऽरिनिग्रहे ।। १०३

द्विभुजं स्वर्णवर्णाभं रामसेवापरायणम् ।
लवणासुरहन्तारं सुमित्रातनयं भजे ।। १०४

சத்ருக்ன மந்திரம் -சம் சத்ருக்நாய நம:. ருஷிமுதலியவை முன் போல். சத்ரு நிக்ரஹே விநியோக:- சத்ருவை அடக்குவதற்கென விநியோகம். இருகைகளுள்ளவர், தங்கவண்ணர், ராம ஸேவையில் கருத்தூன்றியவர், லவணாஸுரனை அழித்தவர், ஸுமித்ரையின் மகன் என த்யானம். (103-104)

हं हनूमांश्चतुर्थ्यन्तं हृदन्तो मन्त्रराजकः ।
रामचन्द्र ऋषिः प्रोक्तो योजयेत् पूर्ववत् क्रमात् ।। १०५

द्विभुजं स्वर्णवर्णाभं रामसेवापरायणम् ।
मौञ्जीकौपीनसहितं मां ध्यायेद्रामसेवकम् ।। इति १०६

ஹனுமான் மந்திரம்- ஹம் ஹனுமதே நம:. ராமசந்திரன் ருஷி. மற்றவை முன்போல். தியானம் - இருகைகளுள்ளவர், தங்கமேனியர், ராமனின் ஸேவையை முக்கியமாகக் கருதுபவர். கௌபீனமும் முஞ்சைப் புல்லாலான அரைஞாணும் பூண்டவர். ராம ஸேவகர் என என்னைத் தியானிப்பாய் என்றார் ஆஞ்ஜநேயர். (105-106)

—★—

## तृतीयोऽध्यायः - மூன்றும் அத்தியாயம்

सनकाद्या मुनयो हनूमन्तं पप्रच्छुः — आञ्जनेय महाबल पूर्वोक्तमन्त्राणां पूजापीठमनुब्रूहीति ।। १

हनूमान् होवाच– आदौ षट्कोणम् । तन्मध्ये रामबीजं सश्रीकम्। तदधोभागे द्वितीयान्तं साध्यम्। बीजोर्ध्वभागे षष्ठ्यन्तं साधकम् । पार्श्वे दृष्टिबीजे । तत्परितो जीवप्राण-शक्तिवश्यबीजानि। तत्सर्वं संमुखोन्मुखाभ्यां प्रणवाभ्यां वेष्टनम्। अग्नीशासुरवायव्यपुरः पृष्ठेषु षट्कोणेषु दीर्घभाजि हृदयादिमन्त्राः क्रमेण। रां रीं रूं रैं रौं रः इति दीर्घभाजि तद्युक्तहृदयाद्यस्त्रान्तम्। षट्कोणपार्श्वे रमामायाबीजे । कोणाग्रे वाराहं हुमिति । तद्बीजान्तराले कामबीजम् । परितो वाग्भवम् । ततो वृत्तत्रयं साष्टपत्रम् । तेषु दलेषु स्वरान् षड्(नष्ट)वर्गान् । प्रतिदलं मालामनुवर्णषट्कम्। अन्ते पञ्चाक्षरम्। तद्दलकपोलेष्वष्टवर्गान्। पुनरष्टदलपद्मम्। तेषु दलेषु नारायणाष्टाक्षरीमन्त्रः। तद्दलकपोलेषु श्रीबीजम् । ततो वृत्तम्। ततो द्वादशदलम् । तेषु दलेषु वासुदेवद्वादशाक्षरी-मन्त्रः । तद्दलकपोलेष्वादिक्षान्तान् । ततो वृत्तम्। ततः षोडशदलम्। तेषु दलेषु हुं फट् नतिसहितराम-द्वादशाक्षरम्। तद्दलकपोलेषु मायाबीजम्। सर्वत्र प्रतिकपोलं द्विरावृत्त्या ह्रं स्रं भ्रं व्रं ज्रं अं श्रं ज्रं । ततो वृत्तम् । ततो द्वात्रिंशद्दलपद्मम्। तेषु दलेषु नृसिंहमन्त्रराजानुष्टुभमन्त्रः। तद्दल-कपोलेष्वष्टस्वेकादशरुद्रद्वादशादित्यमन्त्राः। प्रणवादिनमो-ऽन्ताश्चतुर्थ्यन्ताः क्रमेण । तद्बहिर्वषट्कारं परितः । ततो रेखात्रययुक्तं भूपुरम् । द्वादशदिक्षु राश्यादिभूषितम् । अष्टनागैरधिष्ठितम् । चतुर्दिक्षु नारसिंहबीजम् । विदिक्षु वाराहबीजम्। एतत् सर्वात्मकं यन्त्रं सर्वकामप्रदं मोक्षप्रदं च। एकाक्षरादिनवाक्षरान्तानामेतद्यन्त्रं भवति॥ २

பூஜாபீடம் - யந்திரம் ஸனகர் முதலிய முனிவர்கள் ஹனுமானிடம் வலிவுமிக்க இந்த மந்திரங்களைக் கொண்டு

வழிபட பூஜாபீட அமைப்பை விளக்குவீர் எனக் கேட்டனர்.ஹனுமான் கூறினர் - முதலில் ஷட்கோணம், அதன் நடுவில் ராம் ஸ்ரீம் என பீஜங்கள், அதன் கீழ் ஸர்வாபீஷ்டஸித்திதம் என பீஜங்களுக்கு மேல் மம என (எனக்கு), இருபுறமும் இம் ஈம் என நேத்ர பீஜங்கள், சுற்றி ஜீவபீஜமான ஹம்ஸ:, பிராண பீஜமான ஸோஹம் ,சக்தி பீஜமான ஹ்ரீம், வச்ய பீஜமான க்லீம், சுற்றி நடுப்பகுதியை நோக்குமாறு ஓங்காரம், தென் கிழக்கு- வடகிழக்கு - தென்மேற்கு - வடமேற்கு- முன் பகுதி - பின் பகுதிகளில் ராம் ரீம் ரூம் ரைம் ரௌம்: என. ஹிருதயம் முதல் அஸ்திரம் வரையிலுள்ள நியாஸ மந்திரங்கள். ஷட்கோணத்தின் இருபக்கங்களிலும் ஸ்ரீம் ஹ்ரீம் என்ற லக்ஷ்மீமாயா பீஜங்கள். கோணத்தின் நுனியில் வராஹரின் பீஜமான ஹூம். அவற்றின் இடையே க்லீம். சுற்றி ஐம் என்ற வாக்பவபீஜம். அதனைச்சுற்றி மூன்று வட்டச்சுற்றுகள் (விருத்தம்). எட்டுதளத் தாமரை. தாமரைதளத்தில் உயிர்மெய்யெழுத்துக்கள். ஒவ்வொரு தளத்திலும் (7ல்) மாலா மந்திரத்தின் 6-6 அக்ஷரங்கள், கடைசி தளத்தில் 5 அக்ஷரம். அந்த தளத்தின் விளிம்பில் 8 வர்க்கங்கள். மறுபடி எட்டு தளங்கள், அவற்றில் ஓம் நமோ நாராயணாய என்ற எட்டு அக்ஷரங்கள், தளவிளிம்புகளில் ஸ்ரீம் என. அதைச் சுற்றி வட்டம் .அதனைச் சுற்றி 12 தளங்கள். அவற்றில் ஓம் நமோ பகவதே வாஸுதேவாய என்ற 12 அக்ஷரமந்திரம் அந்த தளங்களின் விளிம்பில் அ முதல் க்ஷ வரையிலுள்ள எழுத்துக்கள். அதனைச் சுற்றி வட்டம். அதனைச்சுற்றி 16 தளங்கள். அதில் ஓம் நமோ பகவதே ராம சந்த்ராய (ராமபத்ராய) என்ற பன்னிரு அக்ஷரமந்திரம். ஹூம் பட் நம: எனக் கடைசியில் சேர்த்து. தளவிளிம்பில் ஹ்ரீம் என. ஒவ்வொரு தளத்திற்கும் இடையில் ह्रं भ्रं थ्रं त्रं अं शं श्रं ज्रं என இரண்டு தடவை திருப்பித் திருப்பி அதனைச்சுற்றி வட்டம். அதனைச்சுற்றி 32 தளபத்மம். அதில் உக்ரம் வீரம் என்ற நிருஸிம்ஹரின் அனுஷ்டுப் மந்திரம். தளவிளிம்புகளில் 8 வஸுக்கள், 11 ருத்திரர்கள், 12 ஆதித்யர்கள் இவர்களின் மந்திரங்கள் ஓம்... நம: (தேவதை நான்காம் பக்தியில் நடுவில்) அதனைச் சுற்றி வஷட். அதன் வெளியே மூன்று கோடுகளுள்ள சதுரமான பூபுரம். 12 திக்குகளில் மேஷாதி

*ராசிகள் எட்டு நாகர்கள், கிழக்கு முதலிய நான்கு திக்குகளில் நரஸிம்ஹ பீஜமான க்ஷ்ம்ர்யெளம், தென்கிழக்கு முதலிய நான்கு விதிக்குகளில் வாராஹபீஜமான ஹூம். இவ்வாறு அமைந்த யந்திரம் தேவதைகளனைவரையும் வழிபட உதவும். விரும்பியதைத் தரும். முக்தி தரும். ஏகாக்ஷரம் முதல் ஒன்பத க்ஷரங்கள் கொண்ட மந்திரம் வரை இதன் மூலம் வழிபடலாம். (2)*

**तद्दशावरणात्मकं भवति। षट्कोणमध्ये साङ्गं राघवं यजेत्। षट्कोणेष्वङ्गैः प्रथमावृतिः। अष्टदलमूले आत्माद्यावरणम्। तदग्रे वासुदेवाद्यावरणम्। द्वितीयाष्टदलमूले धृष्ट्याद्यावरणम्। तदग्रे हनूमदाद्यावरणम्। द्वादशदलेषु वसिष्ठाद्यावरणम्। षोडशदलेषु नीलाद्यावरणम्। द्वात्रिंशद्दलेषु ध्रुवाद्यावरणम्। भूपुरान्तरिन्द्राद्यावरणम्। तद्बहिर्वज्राद्यावरणम्। एवमभ्यर्च्य मनुं जपेत्॥ ३**

*'ஆவரண பூஜை' இந்த யந்திரம் 10 ஆவரணங்கள் கொண்டது (கோவில் பிராகாரம் இரு மதிற்சுவர்களுக்குள் அடங்கியிருப்பது போல் இரு வட்டக்கோடுகளினிடையே தாமரை தளங்களாக - கோணங்களாக அமைவது ஆவரணம்) முதல் ஆவரணமான ஆறுகோணங்களில் ராம் ரீம் என ஹிருதயம் முதலிய அங்க மந்திரங்களால் (ராம் ராமாய நம: ஹிருதயாய நம: என்றவாறு) அஷ்ட தளத்தின் அடியில் ஆத்மா முதலியவர், நுனியில் வாஸுதேவர் முதலியவர், இரண்டாவது அஷ்ட தளத்தின் அடியில் திருஷ்டி முதலியவர், நுனியில் ஹனுமான் முதலியவர். 12 தளங்களில் வஸிஷ்டர் முதலானோர், 16 தளங்களில் நீலன் முதலானோர். 32 தளங்களில் துருவன் முதலிய வஸு ருத்ராதித்யர்கள், பூபுரத்தினுள் இந்திரன் முதலானோர், அதன் வெளியில் இந்திரன் முதலானவரின் ஆயுதங்கள். இவர்களை முறையே வரிசையாக வழிபட்டுப் பின் மந்திரத்தை ஜபிக்கவும். (ராம தாபினீ பூர்வ - 5-7 விளக்கம் பார்க்க)*

**अथ दशाक्षरादिद्वात्रिंशदक्षरान्तानां मन्त्राणां पूजापीठमुच्यते – आदौ षट्कोणम्। तन्मध्ये स्वबीजम्। तन्मध्ये**

साध्यनामानि। एवं कामबीजवेष्टनम्। तं शिष्टेन नवार्णेन वेष्टनम्। षट्कोणेषु षडङ्गान्यग्नीशासुरवायव्यपूर्वपृष्ठेषु । तत्कपोलेषु श्रीमाये। कोणाग्रे क्रोधम्। ततो वृत्तम्। ततोऽष्टदलम्। तेषु दलेषु षट्संख्यया मालामनुवर्णान्। तद्दलकपोलेषु षोडश स्वराः। ततो वृत्तम्। तत्परितः आदिक्षान्तम्। तद्बहिर्भूपुरं साष्टशूलाग्रम्। दिक्षु विदिक्षु नारसिंहवाराहे। एतन्महायन्त्रम्। आधारशक्त्यादि-वैष्णवपीठम्॥ ४

10-32 அக்ஷரமந்திரங்களுக்கான பூஜா யந்திரம்' முதல் ஆறு கோணம். அதன் நடுவே ராம் என்ற ராம பீஜம். அதனைச் சுற்றி 'மம ஸர்வா பீஷ்ட ஸித்த்யர்த்தே' என்ற ஸாத்தியம். அதனைச் சுற்றி க்லீம் என்ற காம பீஜச் சுற்று. அதனைச் சுற்றி ஒன்பத க்ஷரம். ஷட் கோணங்களில் தென் கிழக்கு, வடகிழக்கு, தென்மேற்கு, வடமேற்கு, கிழக்கு, மேற்கு என்ற வரிசையில் ராம் ரீம் ரூம் ரைம் ரௌம் ர: என்ற ஆறு பீஜங்களால் ஹ்ருதயாதி அங்கம். கோணத்தின் இருபுறங்களிலும் ஸ்ரீம் ஹ்ரீம் என. கோண நுனியில் ஹூம், சுற்றி வட்டம், அதன் மேல் எட்டுதளம், அதில் 6-6 எழுத்தாக மாலா மந்திரம். அந்த தளங்களில் இருபுறங்களில் 16 உயிர் எழுத்துகள். சுற்றி அகாராதி க்ஷகாரம் வரை. வெளியில் பூபுரம். 8 திக்கிலும் சூலநுனி, திக்குகளில் நாரஸிம்ஹமான க்ஷ்ம்ர்யௌம், விதிக்குகளில் வராஹரின் ஹூம். ஆதார சக்தி முதல் விஷ்ணு வரை ஆராதிக்கிற மஹாயந்திரம். (4)

अङ्गैः प्रथमावृतिः। मध्ये रामं वामभागे सीताम्। तत्पुरतः शार्ङ्गं शरं च। अष्टदलमूले हनूमदादि द्वितीयावरणम्। धृष्ट्यादि तृतीयावरणम् । इन्द्रादिभिश्चतुर्थी। वज्रादिभिः पञ्चमी । एतद्यन्त्राराधनपूर्वकं दशाक्षरादिमनून् जपेत्॥ ५

ஹ்ருதயாதி அங்கமந்திரங்களால் முதலாவரண பூஜை. நடுவில் ராமன். அவரது இடப்புறத்தில் ஸீதை, முன் சார்ங்கம் என்ற வில்லும் அம்பும். 8 தளங்களில் அடியில் ஹனுமான் முதலியவர்கள் 2வது ஆவரணமாக. திருஷ்டி முதலியவர்கள்

மூன்ருவது ஆவரணமாக. இந்திரன் முதலானவர் நான்காவது ஆவரணமாக. அவர்களது ஆயுதங்களான வஜ்ரம் முதலியவை ஐந்தாவது ஆவரணமாக .இந்த யந்திர வழிபாட்டுடன் தசாக்ஷரம் முதலிய மந்திரங்களை ஜபித்து வரலாம். (5)

## चतुर्थोऽध्यायः

### "நான்காம் அத்யாயம்"

### श्रीराममन्त्रपुरश्चरणविधिः

सनकाद्या मुनयो हनूमन्तं पप्रच्छुः – श्रीराममन्त्राणां पुरश्चरणविधिमनुब्रूहीति । हनूमान् होवाच—

नित्यं त्रिषवणस्नायी पयोमूलफलादिभुक् ।
अथवा पायसाहारो हविष्यान्नाद एव च ॥ १

षड्रसैश्च परित्यक्तः स्वाश्रमोक्तविधिं चरन् ।
वनितादिषु वाक्कर्ममनोभिर्निस्पृहः शुचिः ॥ २

भूमिशायी ब्रह्मचारी निष्कामो गुरुभक्तिमान् ।
स्नानपूजाजपध्यानहोमतर्पणतत्परः ॥ ३

गुरूपदिष्टमार्गेण ध्यायन् राममनन्यधीः ।
सूर्येन्दुगुरुदीपादिगोब्राह्मणसमीपतः ॥ ४

श्रीरामसन्निधौ मौनी मन्त्रार्थमनुचिन्तयन् ।
व्याघ्रचर्मासने स्थित्वा स्वस्तिकाद्यासनक्रमात् ॥ ५

'ஸ்ரீ ராம மந்திர புரச்சரணமுறை' ஸனகர் முதலானோர் ஹனுமானிடம் மந்திரங்கள் ஸித்தியாகச் செய்யப்படுகிற புரச்சரணமுறை பற்றிக் கேட்டனர். ஹனுமான் கூறுகிறார் - தினம் மூன்று வேளைகளிலும் நீராடி, பால், கிழங்கு, பழம் முதலியவற்றையோ பாலாலானதை மட்டுமோ ஹவிஸ்ஸாகப் பயன்படுகிற அன்னமீதியை மட்டுமோ உண்டு, அறுசுவை உணவைத் தவிர்க்க வேண்டும். தன் தன் ஆசிரம

நடைமுறையைப் பின்பற்ற வேண்டும். வாக்காலோ மனத்தாலோ உடலாலோ ஆண்- பெண் இன்பம் நாடக் கூடாது. தூய்மை, தரையில் படுக்கை, பிரும்மசரிய,ம் பற்றின்மை, குருபக்தி. நீராடல் - பூஜை - ஜபம்- தியானம், ஹோமம் - தர்பணம் என்றவற்றில் ஈடுபாடு, குரு காட்டிய வழியில் ராமனைத் தியானம். சூரியன், சந்திரன், குரு, தீபம், பசு , அந்தணர் இவர்களின் அருகில் வாஸம், மௌனம், மந்திரப் பொருளைத் தியானித்தல், புலித் தோலாலான ஆஸனம் ஸ்வஸ்திகாஸனம் முதலிய மனநிலை தடுமாறுதிருக்க உதவுகிற ஆஸனம் என இவை ஏற்றவை. (1-5)

तुलसीपारिजातश्रीवृक्षमूलादिकस्थले।
पद्माक्षतुलसीकाष्ठरुद्राक्षकृतमालया॥ ६

मातृकामालया मन्त्री मनसैव मनुं जपन्।
अभ्यर्च्य वैष्णवे पीठे जपेदक्षरलक्षकम्॥ ७

तर्पयेत्तद्दशांशेन पयसा तद्दशांशतः।
जुहुयाद् गोघृतेनैव भोजयेत् तद्दशांशतः॥ ८

ततः पुष्पाञ्जलिं मूलमन्त्रेण विधिवच्चरेत्।
ततः सिद्धमनुर्भूत्वा जीवन्मुक्तो भवेन्मुनिः॥ ९

अणिमादिर्भजत्येनं यूनं वरवधूरिव।
ऐहिकेषु च कार्येषु महापत्सु च सर्वदा॥ १०

नैव योज्यो राममन्त्रः केवलं मोक्षसाधकः।

துளஸி, பாரிஜாதம், வில்வம் முதலியவற்றின் அடியில் அமர்ந்து, பத்மாக்ஷம், துளஸிக் கட்டை, ருத்திராக்ஷம் இவற்றாலான ஜபமாலை அல்லது மாத்ருகாக்ஷரமாலை என்ற மனனத்தால் எண்ணுகிற முறை இவற்றைக் கொண்டு மனத்தளவில் மந்திரத்தை உச்சரிக்க வேண்டும். முன் கூறியவாறு பீடத்தில் ராமனை வழிபடவேண்டும். மந்திரத்தின் ஓர் எழுத்திற்கு ஒரு லக்ஷம் என்ற விகிதத்தில் ஜபம் முடித்து, அதில்

*பத்தில் ஒரு பங்கு பாலால் தர்ப்பணமும், அதில் பத்தில் ஒரு பங்கு நெய்யால் ஹோமமும், அதில் பத்தில் ஒரு பங்கு அந்தணர்களுக்கு உணவிடவும் வேண்டும். பின்னர் மூல மந்திரத்தால் புஷ்பாஞ்ஜலி செய்ய வேண்டும். இவ்வாறு செய்ய மந்திரஸித்தி கிட்டும். ஜீவன் முக்தனுவான். அணிமாதிஸித்திகள் வசப்படும். இது முக்திக்கான ஸாதனம். அன்றாட வாழ்க்கை நலனுக்கு இதனைப் பயன் படுத்தக் கூடாது. (6-10)*

ऐहिके समनुप्राप्ते मां स्मरे द्रामसेवकम्। ११

यो रामं संस्मरेन्नित्यं भक्त्या मनुपरायणः।
तस्याहमिष्टसंसिद्ध्यै दीक्षितोऽस्मि मुनीश्वराः॥ १२

वाञ्छितार्थं प्रदास्यामि भक्तानां राघवस्य तु।
सर्वथा जागरूकोऽस्मि रामकार्यधुरन्धरः॥ १३

*அன்றாட நலனுக்கெனில் ராமஸேவகனை என்னை (ஹனுமானை) நினையுங்கள். ராம மந்திர ஜபம் செய்பவனது இம்மைச் சுகத்திற்கான விருப்பத்தை நான் நிறைவுறச் செய்கிறேன். ராமனின் பணிகளில் முன்நிற்கிற நான் ராமபக்தரது விருப்பத்தை நிறைவுறச் செய்கிறேன். (11-13)*

## पञ्चमोध्यायः

*''ஐந்தாம் அத்தியாயம்''*

### रामषडक्षरस्य मन्त्रराजत्वम्

सनकाद्या मुनयो हनूमन्तं पप्रच्छुः – श्रीराममन्त्रार्थमनुब्रूहीति। हनूमान् होवाच—

सर्वेषु राममन्त्रेषु मन्त्रराजः षडक्षरः।
एकधा द्विविधा त्रेधा चतुर्धा पञ्चधा तथा। १

षट्सप्तधाष्टधा चैव बहुधाऽयं व्यवस्थितः।
षडक्षरस्य माहात्म्यं शिवो जानाति तत्त्वतः॥ २

श्रीराममन्त्रराजस्य सम्यगर्थोऽयमुच्यते ।
नारायणाष्टाक्षरे च शिवपञ्चाक्षरे तथा ।। ३

सार्थकार्णद्वयं रामो रमन्ते यत्र योगिनः ।

*'ராமனின் ஷடக்ஷரமந்திரப் பெருமை' ஸனகர் முதலானோர் ராமனின் ஷடக்ஷரமந்திரத்தைப் பற்றி விளக்கக்கோரினர். ஹனுமான் விளக்குகிறார். ராம மந்திரங்களில் ஷடக்ஷரம் சிறந்தது. 1-2-3-4-5-6-7-8- என அட்சரங்கள் கொண்ட பலமந்திரங்கள் உள்ளன. நாரயணனின் அஷ்டாக்ஷரமான ஓம் நமோ நாராயணாய விலிருந்தும் சிவபஞ்சாக்ஷரமான நம: சிவாய என்பதிலிருந்தும் பொருட் செறிவு மிக்க இரு (ரா-ம) அக்ஷரங்களின் உட்பொருளான ராமனிடம் யோகிகள் லயித்து ஆனந்த மடைகின்றனர். (1-3)*

रकारो वह्निवचनः प्रकाशः पर्यवस्यति ।। ४

सच्चिदानन्दरूपोऽस्य परमात्मार्थ उच्यते ।
व्यञ्जनं निष्कलं ब्रह्म प्राणो मायेति च स्वरः ।। ५

व्यञ्जनैः स्वरसंयोगं विद्धि तत्प्राणयोजनम् ।
रेफे ज्योतिर्मये तस्मात् कृतमाकारयोजनम् ।। ६

मकारोऽभ्युदयार्थत्वात् स मायेति च कीर्त्यते ।
सोऽयं बीजं स्वकं यस्मात् समायं ब्रह्म चोच्यते ।। ७

सबिन्दुः सोऽपि पुरुषः शिवसूर्येन्दुरूपवान् ।
ज्योतिस्तस्य शिखारूपं नादः सप्रकृतिर्मतः ।। ८

प्रकृतिः पुरुषश्चोभौ समायाद् ब्रह्मणः स्मृतौ ।
बिन्दुनादात्मकं बीजं वह्निसोमकलात्मकम् ।। ९

अग्नीषोमात्मकं रूपं रामबीजे प्रतिष्ठितम् ।
यथैव वटबीजस्थः प्राकृतश्च महान् द्रुमः ।। १०

तथैव रामबीजस्थं जगदेतच्चराचरम्।
बीजोक्तमुभयार्थत्वं रामनामनि दृश्यते॥ ११

बीजं मायाविनिर्मुक्तं परं ब्रह्मेति कीर्त्यते।

'ராம் என்ற பீஜத்தின் பொருள்' *ர என்பது அக்னியின் பீஜாக்ஷரம் - பேரொளி அதன் வடிவம். ஸத்- சித்- ஆனந்தமான பரமாத்மா எனப்பொருள். ர என்ற மெய்யெழுத்து 17 கலை களற்ற பரபிரும்மம். அதன் மீதுள்ள 'ஆ' பிராணன்.மாயை. மெய்யெழுத்தை உயிர் எழுத்துடன் இணைப்பது பிராணனுடன் சேர்ப்பதாகும். பேரொளிமயமான 'ர' உடன் 'ஆ' என்று உயிரூட்டி 'ம' என்ற மங்களகரமான மாயை சேர்க்க ராம் என்ற பீஜம் -மாயையுடன் கூடிய பரப்பிரும்மம் என்றுகும். சிவன் ஸூரியன், சந்திரன் என்ற மூவர் வடிவிலுள்ள புருஷன். அதன் பேரொளி என்ற பிரகிருதியுடன் கூடியவன் எனலாம். பிரகிருதியும் புருஷனும் மாயையுடன் கூடிய பிரும்மத்தின் விகல்ப வடிவம். பிந்துவும் நாதமும், அக்னி- ஸூரிய கலைகள், அக்னியும் ஸோமனுமான ஜகத் என அனைத்தும் ராம பீஜத்தில் நிலை பெற்றுள்ளன. ஆலம் விதையினுள் பெரும் ஆலமரம் விரிவடைய இருப்பது போல் சராசரமான இந்த உலகமும் ராம பீஜத்தினுள் அடங்கியுள்ளது மாயை கலப்பில்லாத ராம பீஜம் பரம் பொருளே. (4-11)*

मुक्तिदं साधकानां च मकारो मुक्तिदो मतः॥ १२

मारूपत्वादतो रामो भुक्तिमुक्तिफलप्रदः।
आद्यो रा तत्पदार्थः स्यान्मकारस्त्वंपदार्थवान्॥ १३

तयोः संयोजनमसीत्यर्थे तत्त्वविदो विदुः।

*ராம என்ற இரண்டக்ஷரமந்திரத்தில் மகாரம் லக்ஷ்மீரூபம் முக்தி தரும். ராம என்பது புக்தி எனும் இம்மைச் சுகத்தையும் முக்தியையும் தரவல்லது. தத்த்வமஸி என்ற மஹா வாக்யத்தில் 'ரா' என்பது 'தத்' 'ம' என்பது 'த்வம்' இரண்டையும் இணைக்க 'அஸி' நேரும். அது நீயாக உள்ளாய் என்பது நிரூபிக்கப் பெறும். (12-13)*

नमस्त्वमर्थो विज्ञेयो रामस्तत्पदमुच्यते ॥ १४

असीत्यर्थे चतुर्थी स्यादेवं मन्त्रेषु योजयेत् ।
तत्त्वमस्यादिवाक्यं तु केवलं मुक्तिदं यतः ॥ १५

भुक्तिमुक्तिप्रदं चैतत्तस्मादप्यतिरिच्यते ।
मनुष्वेतेषु सर्वेषामधिकारोऽस्ति देहिनाम् ॥ १६

मुमुक्षूणां विरक्तानां तथा चाश्रमवासिनाम् ।
प्रणवत्वात् सदा ध्येयो यतीनां च विशेषतः ॥
राममन्त्रार्थविज्ञानी जीवन्मुक्तो न संशयः ॥ १७

*ராமாய நம: எனும் போது த்வம் என்பதன் பொருள் கொண்டது நம: . 'அஸி' என்பதை நான்காம் வேற்றுமை (ராமாய) குறிக்கும். தத்வமஸி என்ற வாக்யம் முக்தி மட்டும் தரும். ராமாய நம: என்பது பக்தியையும் முக்தியையும் தரும். இந்த மந்திரங்களில் மனிதனுகப் பிறந்தவரனைவருக்கும் தகுதி உண்டு. முக்தியை நாடுபவர், பற்றற்றவர், துறவிகள் என அனைவரும் பிரணவமாக இதனை மனனம் செய்வர். ராம மந்திரத்தைப் பொருளறிந்து ஜபிப்பவன் ஜீவன் முக்தனுவான். (14-17)*

विद्याध्ययनफलम्

य इमामुपनिषदमधीते सोऽग्निपूतो भवति । स वायुपूतो भवति । सुरापानात् पूतो भवति । स्वर्णस्तेयात् पूतो भवति । ब्रह्महत्यायाः पूतो भवति । स राममन्त्राणां कृतपुरश्चरणो रामचन्द्रो भवति ॥ १८ ॥ तदेतदृचाभ्युक्तम्—

सदा रामोऽहमस्मीति तत्त्वतः प्रवदन्ति ये ।
न ते संसारिणो नूनं राम एव न संशयः ॥
ॐ सत्यमित्युपनिषत् ॥ १९

இந்த உபனிஷத்தை ஓதியவன் நெருப்பாலும் வாயுவாலும் தூய்மை பெறுகிறான். கள்குடி, தங்கத்திருட்டு, பிரும்மஹத்தி, முதலிய பாபங்கள் நீங்கப் பெறுகிறான். ராம மந்திரத்தை புரச்சரணம் செய்து ஸித்தி பெற்றவன் ராமனே ஆகிறான் வேதமும் இதை விளக்குகிறது. ராமோ ஹம் -ராமனே நான் என எப்போதும் மெய்யாகக் கூறுபவன் ராமனேயாவான். பிறவித்துயர் அவனுக்கு இல்லை. இது ஸத்யமே என உபநிஷத் கூறுகிறது.

—★—



# श्रीरामधामस्तवः

## श्रीतारकब्रह्मानन्दसरस्वती विरचितः

# ஸ்ரீ ராம தாமஸ்தவம்

### ஸ்ரீ தாரகப்ரும்ஹானந்த ஸரஸ்வதி இயற்றியது

*இந்த துதியை இயற்றியவர் தென்னாட்டில் 18வது நூற்ருண்டில் வாழ்ந்தவர். இவரது குரு ஸ்ரீ ராம சந்திராச்ரமீ. இவர் சிறந்த அத்வைத வேதாந்த பண்டிதர். ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ர ராம ஸ்தோத்திரத்தின் ஸ்ரீ சங்கரபாஷ்யத்தின் மீது உரை எழுதியவர். கல்பதரு - பரிமளம் என்ற பிரும்ம ஸூத்ர விரிவுரைகளைச் சுருக்கித் தந்தவர். தைத்திரீய உபநிஷத்தின் வித்யாரண்ய பாஷ்யத்தின் உட்பொருளைச் சுருக்கி எழுதியவர். ஸ்ரீ ராமனை பரப்பிரும்மமாக ஸகுண - நிர்க்குண நிலைகளிலும் வேறுபட்ட நிலையிலும் ஒரே பொருளாகத் தான் கண்டு, தைத்திரீயோபநிஷத்தின் உட்பொருளைத் தெளிவாக உணர்ந்ததை 38 சுலோகங்களில் தானே விரிவுரையும் அளித்து விளக்குகிறுர்.*

*வேதாந்தரீதியில் ராமாயணத்தின் மீது அவர் தருகிற விளக்கம் பின் வருமாறு-*

*1. ஸீதை - ஜீவாத்மா. ஸ்ரீ ராமன் பரமாத்மா. ஜீவன் பரமாத்மாவை உணர்ந்து அவருடன் இணைந்து ஒருமை உணர்ந்த நிலையிலும் மாயை மானைக்கண்டு மயங்கி தன் நிலை இழந்து பரமாத்மா விடமிருந்து பிரிகிறுள்.*

*2. ஸீதை ராவணனுல் பறிக்கப்படுவது- தன் நிலை இழந்த ஜீவன் தன் பகுத்தறிவென்ற விவேகமிழந்து ராவணனை இனம் காணுமல் அவனது பிடியில் சிக்குகிறுள்.*

*3. ராவணனது பிடியில் சிக்கிய ஸீதையை ஜடாயு எவ்வளவு முயன்றும் காக்க முடியவில்லை. ஆத்மா இது, ஆத்மா அல்லாதது அது என்ற விவேகத்தை இழந்த ஜீவன் கருமங்களின் உதவியால் தன்னை விடுவித்துக் கொள்ள முடிவதில்லை.*

*4. அசோக வனத்தில் ஸீதை துயருற்றுள். இயற்கையின் விரிவான ஐந்து பூதங்களாலான உடலில் உள்நுழைந்து, அதுவே*

தான் என மயங்கிய ஜீவன் ஸம்ஸாரத்துயரனைத்திற்கும் உட்பட நேர்கிறது.

5. அசோக வனத்தில் அரக்கிகள் சீதைக்குக் கேடுநேரா வண்ணம் காக்கின்றனர். கண்காது முதலிய பொறிகள் ஜீவனுக்கு தன்னை வெளிப்படுத்திக் கொள்ள உதவி, ஜீவன் தான் வெளிப்படாமல். உணரப்பெறுமல் இருக்கும் நிலை இது. ஆதி பௌதிக தாபத்திற்கு உட்படும் நிலை.

6. சில ராக்ஷஸிகள் ஸீதையை மிரட்டிக்கலக்குவது ஜீவனுக்கு ஆத்யாத்மிக துயரத்தை தருவதாகும்.

7. ஸ்ரீ ராமன் ஸீதையைத் தேடிக் காண முயல்வது தன்னிலை பெறத் துடிக்கிற ஜீவனுக்காக பரப்பிரும்மமே கருணையால் ஏற்கிற ஸங்கல்பமாகும்.

8. ஸீதையின் இருப்பிடத்தைக் கண்டு பிடித்த ஹனுமான் அவளது அருகில் வருவது, பரப்பிரும்ம நிலை உணர அக்கரை கொண்டவனருகே பிரும்மத்தின் நிலை அறிந்த ஆசாரியன் வருகையாகும்.

9. ஸீதைக்கு ஹனுமான் ஆறுதலளிப்பது, ஆசாரியன் ஜீவ - பரமாத்ம நிலை பற்றித் தருகிற தத்துவ விளக்கம்.

10. ஹனுமான் அசோக வனத்தை அழித்தது, பிரும்ம உணர்விற்கெதிரான முன்வினை அழித்தலாகும்.

11. ஹனுமான் அரக்கர்களை அழித்தது, முன் வினைப்பயனுக உள்ளத்தில் பதிந்த துர்வாஸனை -துஷ்டஸம்ஸ்காரத்தை அகற்றியது.

12. ஸேநாபதிகளை அழித்தது, நிலையின்றிப்பரவி ஓடுகிற இந்திரியங்களை அடக்கியதாகும்.

13. மந்திரி குமாரர்களை அழித்தது, எல்லையற்று விரிந்திருந்த ஸம்ஸார பந்தத்தை விலக்கியதாகும்.

14. அக்ஷகுமாரன் தான் உள்ளத்தில் வேர் ஊன்றிய காமம்.

இவற்றை ஆசாரியனுன ஹனுமான் தன் தனித்த வழிகாட்டு முறையால் விலக்குகிருர்.

15. இந்திரஜித், கோபம் பேராசை மதிமயக்கம் முதலியவற்றின் மாற்றுருவம். ராவணன் தான் எல்லாவற்றிற்கும் மூலமான அறியாமை. விபீஷணன் அறியாமை அகன்று ஆத்மா - அநாத்மா பற்றிய விவேகம் பெற்ற நிலை.

16. ஸீதா ராம பட்டாபிஷேகம் என்பது ஜீவன் தான் பிரும்மமே என்று பெற்ற ஸாக்ஷாத்கார உணர்வால் பேரானந்தப் பெருநிலை பெறுவது.

இந்த அடிப்படையில் தைத்திரீய உபநிஷத்தின் சிக்ஷாவல்லீ, பிருகுவல்லீ, ஆனந்த வல்லீ என்ற பகுதிகளின் விளக்கமாக இந்த ஸ்தவம் அமைந்துள்ளது. சிறிதளவேனும் அப்பகுதிகளில் பயிற்சி பெற்றவருக்கு இது இனியது.

நூலாசிரியரே இங்கு உரையாசிரியர். உரைக்கு விநாயகரை மங்களம் அளிக்க வேண்டுகிறார்.

यस्यैकदन्तस्य परात्ममूर्तेः सङ्कल्पमात्रेण भवन्त्यभीष्टाः ।
तस्मै नमः सोमशिवैकभक्तिध्यानैकनिष्ठाय जगद्धिताय ॥ १

யஸ்யைகதந்தஸ்ய பராத்மமூர்தே: ஸங்கல்பமாத்ரேண பவந்த்யபீஷ்டா: ।
தஸ்மை: நம: ஸோமசிவைகபக்தித்யானைகநிஷ்டாய ஜகத்திதாய ॥ 1

ஒரு தந்தமுள்ள விநாயகர் பரபிரும்ம வடிவினர். அவரது ஸங்கல்பமே நாம் விரும்பியதைப் பெறுவதற்கான உபாயம். அவர் உலகிற்கு நலம் புரிபவர். அம்பிகையுடன் கூடிய சிவபெருமானிடம் தனித்த பக்தி கொண்டு அவர்களைத் தியானிப்பதிலேயே முழுவதும் ஈடுபட்டவர். அவருக்கு நமஸ்காரம்.

சிவனே பரப்பிரும்மம். அவரை அக்னி வாயு இந்திரன் முதலானவருக்குச் சுட்டிக் காட்டியவள் உமை என்ற அம்பிகை. உலகின் நன்மை உலகின் மூலப்பொருள் உருவிலுள்ள உமாமகேச்வரர் அருளால் பெறத் தக்கது. உலகின் நன்மைக்காக ஒரு தந்தத்தை இழந்து மற்றொரு தந்தத்தால் உலகைக் காக்கிற அந்த ஏகதந்தர். அவர் மனம் உலகம் நலம் பெற வேண்டுமென்ற திட எண்ணம் (ஸங்கல்பம்) கொண்டது. உலகம் தான் விரும்புவதனைத்தையும் பெற்று விடுகிறது. மங்களம் திசது நோ விநாயக:

*இது உரையாசிரியராகத் தாரகப் பிரும்மானந்தர் இயற்றிய மங்கள சுலோகம்.*

**आलिङ्ग्य सीतामखिलात्मकां स्वां**
**संविन्मयीं भास्वरवर्ग गात्राम् ।**
**आनन्दयन् लोकगुरुः प्रशान्तः**
**श्रीरामचन्द्रो जयति प्रभुर्नः ॥ १**

**ஆலிங்க்ய ஸீதாமகிலாத்மகாம் ஸ்வாம்**
**ஸம்விந்மயீம் பாஸ்வரவர்க காத்ராம் ।**
**ஆநந்தயந் லோககுரு: ப்ரசாந்த:**
**ஸ்ரீராமசந்த்ரோ ஜயதி ப்ரபுர்ந: ॥ 1**

*குரு வந்தனத்துடன் நூலைத் துவக்குகிறார். ராமரே குரு. யோகிகள் எப்போதும் பேரானந்தமும் பேருணர்வும் வடிவாகக் கொண்ட பரப் பிரும்மத்திடம் மனோலயம் கொண்டு ஆனந்திப்பதால் 'ராம' எனப் பரபிரும்மத்தைப் பெயரிட்டு அழைப்பர். மனத்திற்கு இதமளிப்பதில் சந்திரனாக இருப்பதால் அவர் சீர்மிக்க ராம சந்திரர். (ஸ்ரீ ராமசந்த்ரர்) அவரே எங்களது மேலாளுனர் (பிரபு) .அவர் தன் சித் - ஸம்வித் எனும் பேருணர்வு என்ற சக்தி வடிவினளான ஸீதையை அணைத்து அமர்ந்துள்ளார். ஸீதை பரப்பிரும்மத்தின் வெளிப்பாடானதனைத்தின் வடிவினள். பிரும்மத்தை விட்டு அவரது சக்தி பிரிந்திருக்க மாட்டாள். பிரபு என்று தன் விருப்பப்படி ஆக்கி அழித்து மாற்றுபவரானதால் அவரது பிரபு சக்தியாக மந்திரசக்தியாக உத்ஸாஹ சக்தியாக, இச்சா சக்தியாக, ஜ்ஞானசக்தியாக, கிரியா சக்தியாகப் பல வடிவங்களேற்றவள் ஸீதை. ராக்ஷஸர்கள் தன் கர்வத்தால் இவருடன் மோதி மரணத்தை அடைவதால் ராமரான பிரபுவிற்கு சக்தி அவள்.*

*தர்ம மார்க்கத்திற்கு வழிகாட்டி நடைமுறை பழக்கி தெளிந்த உள்ளத்தில் ஆத்மாவைக் காணச் செய்து, பக்தியுடன் தியானிக்க பரப்பிரும்மம் எடுத்த ஸீதாராம வடிவம் பற்றின்மையையும் பேராற்றலையும் அளித்து கடைத் தேற 'கரையேற'ச் செய்வதால் ராமனின் நாமம் தாரகமாகிறது. அவ்வகையில் அவர் லோககுரு ஆகிறார். ஸம்ஸாரம் எனும்*

ஆழ்கடலிலிருந்து மீண்டும் கரையேறச் செய்கிறார். குரு- நன்மை தருகிற அரும் பெரும் பொருளை, அறியாமையை அகற்றி வழிகாட்டிக் காணச் செய்கிறார்.

ஸீதை ஆசாரியரின் தக்ஷிணா என்ற உபதேசசக்தியாக இணைந்து அமர்ந்துள்ளாள். அதற்காகப் பேரொளிமிக்க அக்ஷரவடிவினளாகிறாள் - பாஸ்வரவர்ணகாத்ரா. மாத்ருகா வர்ண ரூபிணீ என்று அம்பிகையைக் குறிப்பிடுவர். விளக்கவிருக்கிற பொருளுக்கு ஆதாரமே சொல் (சப்தம்) தானே! சொல் வடிவில் தான் விளக்கவிருப்பதைச் சீடனின் மனத்தில் பதிப்பர். உபதேசித்ததைப் புரிந்து கொள்வதும் சப்த வடிவில் தான். உள்ளுணர்விலும் ஓரளவு சப்தம் துலங்கும். அதனால் சப்தத்தைச் சக்தியாக பொருளைச் சிவனாக (பரம்பொருளாக) இணைந்திருப்பதை वागर्थाविव संपृक्तौ எனக் கவிகள் உணர்ந்தானந்திப்பர்.

ஸீதை வித்யாஸ்வரூபிணீ. சீர்மிக்க ராமனாகிய சந்திரன் (ஸ்ரீ ராம சந்த்ர:) ஸீதையை அணைத்திருப்பதால் பேரமைதி கொண்டுள்ளார். அறிய வேண்டியதோ அடைய வேண்டியதோ ஏதுமில்லை என நன்கு உணர்ந்ததால் உள்ளம் அமைதி நிறைந்துள்ளது. (ப்ரசாந்த:)அவர் எனது பிரபு.குரு. அவர் சீருடன் விளங்குகிறார். (1)

इन्दुकोटिसदृशाननद्युतिं
बिम्बकान्ति रुचिराधरं गुरुम् ।
अङ्गगामिमिथिलाधिपात्मजं
रामचन्द्रमहमाश्रये परम् ॥ २

இந்துகோடிஸத்ருசாநநத்யுதிம் பிம்பகாந்தி ருசிராதரம் குரும் ।
அங்ககாமிமிதிலாதிபாத்மஜம் ராமசந்த்ரமஹமாச்ரயே பரம் ॥ 2

குரு வந்தனம் தொடர்கிறது. அவர் அருளால் அவர் தாள் பணிகிறவனே அவரை உணரமுடியும். அவரது அருள் பெற உள்ளத்தில் அவரைக் கண்டு வணங்க வேண்டும். அவரது தோற்றத்தை முன்னதாகக் கண்டவனே உருவகப்படுத்த முடியும். இவ்வகையான நடைமுறை எளிதல்ல. குருவாக

உள்ளத்தில் அவரது வரைபடம் அமைப்போம். அது செயற்கையானதெனினும் எளிய உபாயம்.

கோடிக் கணக்கான சந்திரர்களின் இனிய பேரொளி கொண்ட முகம் கொண்டவர். கோவைப் பழத்தை வெல்கிற - ஒளியால் மனத்தைக் கவர்கிற உதட்டழகர், மாட்சிமையால் பெரியவர் - குரு. மிதிலை நகரத்ததிபரான ஜனகரின் மகளை - ஸீதையை, மடியில் அமர்த்திக் கொண்டவர். இவரே தான் எண்ணத்திற்கும் வாக்கிற்கும் அப்பாற்பட்ட பரமபுருஷன். அந்த ராமசந்திரரைச் சரணடைகிறேன்.

பெருவெளியில் பேரொளியாகத் துலங்குகிற வெளிச்சத்தைக் காண இயலாது. அதனையே பிரதிபலிப்பால் தன் வீட்டறையினுள் உள்ள பொருளைத் துலக்கக் காணும் போது வெளிச்சத்தைக் கண்டேன் என உணர்ந்து வெளிச்சத்தை உருவகப்படுத்த முடிகிறது. அந்த வெளிச்சத்தை மேலும் தெளிவாக உணர சிகப்பும் மஞ்சளுமான நிறம் கொண்ட பொருள் நன்கு காண்பதால் வெளிச்சத்தைப் பற்றிய உருவகம் திடப்படுகிறது.

ராமனிடம் முக சந்திர ஒளி, அவரது உதட்டின் செவ்வொளி, மடியில் அமர்ந்த பல நிறத்து ஆடை அணிகளால் துலங்குகிற ஸீதையின் நிற ஒளி என உருவகப்படுத்தி இது தான் அந்த குரு என்று காணலாம்.( 2)

चन्द्ररश्मिसदृशाननप्रभं सुन्दरं मदनमोहनं प्रभुम् ।
कण्ठलम्बिवरहार भूषणं चिन्तयामि रघुनाथविग्रहम् ।। ३

சந்த்ரரச்மிஸத்ருசாநநப்ரபம் ஸுந்தரம் மதநமோஹநம் ப்ரபும் ।
கண்டலம்பிவரஹார பூஷணம் சிந்தயாமி ரகுநாதவிக்ரஹம் ॥ 3

ராமன் அயோத்தியில் தசரதரின் புதல்வராக ரகு குலத்தின் நாதனாக வடிவெடுத்தவர் எனக் கேட்டு உள்ளம் அந்நிலையை ஊகித்துக் காண்கிறது. அவரது முக ஒளி சந்திரனின் கதிர்களின் ஒளியோடு ஒத்துள்ளது. அழகியது.அழகு என்பது மனம் காண்கிற சித்திரம். அதனை வரைந்து காட்ட முடியாது. என் மனம் அவரை அழகானவரென ஏற்று விட்டது. அவ்வழகு

*மன்மதனையும் காமவசப்படுத்தும். அந்தப் பேராளுமை (பிரபுத் தன்மை) நன்கு உணர முடிகிறது. அணிக்கு அணி சேர்ப்பது போல் சிறந்த ஹாரங்களும் கழுத்தில் தொங்குகின்றன. அந்த மனம் வரைந்த சித்திர வடிவை உள்ளத்தில் காண்கிறேன்.( 3)*

इन्द्रवन्द्यवरपादपङ्कजं भक्तहृद्गत तमोरविं प्रभुम् ।
सन्ततं शरणमात्मदं परं चिन्तयामि रघुनन्दनं गुरुम् ।। ४

இந்த்ரவந்த்யவரபாதபங்கஜம் பக்தஹ்ருத்கத தமோரவிம் ப்ரபும் ।
ஸந்ததம் சரணமாத்மதம் பரம் சிந்தயாமி ரகுநந்தநம் குரும் ॥ 4

*மனித இனத்தைச் சேர்ந்தவர் என்ற நினைவிற்கிடையே, என் உள்ளத்தில் குடியிருக்கிற ராமனின் திருவடித் தாமரைகளை இந்திரன் வணங்கி நிற்பதும் தெரிகிறது. அவரைக் காணப் பல பக்தர்கள் - முன் இவரது திருவடிகளைச் சார்ந்திருக்கிற பக்திச் சுவை கண்டவர்கள் - தன் உள்ளத்து இருட்டைப் போக்குகிற சூர்யனாக, அதில் பேராளுமை பெற்றவராக இவரைக் காண்கின்றனர். தன்னை அண்டியவரைப் பாதுகாப்பவரான அந்த ரகு வம்சத்தை ஆனந்தமடையச் செய்கிற குருவை உள்ளத்தில் காண்கிறேன்.( 4)*

माहात्म्यं तस्य रामस्य यस्यैवेदं जगद्गुरो ।
स गुरुः स परं ब्रह्म सोऽहमस्मि सदाशिवः ।। ५

மாஹாத்ம்யம் தஸ்ய ராமஸ்ய யஸ்யைவேதம் ஜகத்குரோ ।
ஸ குரு: ஸ பரம் ப்ரஹ்ம ஸோऽஹமஸ்மி ஸதாசிவ: ॥ 5

*இவ்வுலகம் ராமனைச் சார்ந்தது. அதன் தோற்றமும் காப்பும் மறைவும் அவர் வசமுள்ளன. அவரே பெருமான். அவரே பரப்பிரும்மம். அந்த ஸதா சிவர். மூலப்பொருளே நான் (என் ஆத்மா). சிறப்பும் செயலும் குறிப்பீடுமற்றிருந்த அந்த பரப்பொருள், என்றோ எதற்காகவோ செயல்படத் தொடங்கியது. அந்த ஸங்கல்பம் கொண்டதன் வடிவே ஸதாசிவர் - என்றும் எதிலும் எப்போதும் மங்களமானவர்.*

*இஷ்டதைவமான ராமனையே குருவாகக் கண்டு வணங்கிய கவி துதிக்க உதவுகிற வாக்கு - பொருள் இணைப்பைச் சீரமைக்கிற ஸரஸ்வதியை வாக்குதேவியை வணங்குகிறார்.*

यस्याः प्रसादेन परोऽवबुद्धः
स्वात्माऽपि देवात्मतयाऽनुभूतः ।
तस्यै नमो वेदशिरोऽवगम्य-
ब्रह्मात्मिकायै श्रुतिशास्त्रदेव्यै ।। ६

யஸ்யா: ப்ரஸாதேந பரோऽவபுத்த:
ஸ்வாத்மாऽபி தேவாத்மதயாऽநுபூத: ।
தஸ்யை நமோ வேதசிரோऽவகம்ய-
ப்ரஹ்மாத்மிகாயை ச்ருதிசாஸ்த்ரதேவ்யை ॥ 6

*வாக்கிற்கெட்டாததை வாக்கிற்கு எட்டும்படி அருகில் கொணர்பவள் சப்தமும் பொருளுமான வாக்தேவி. உலகம் தோன்று முன்னரே வேதமும் உபநிஷத்தும் சாஸ்திரங்களுமாகத் தோன்றி சப்தபிரபஞ்சத்தைத் தன் வடிவமாகக் கொண்ட பரம் பொருள். தன்னை உணரத் தன்னால் தன்னிடமிருந்து தானாகத் தோன்றவிருக்கிற உலகிற்கு வழி காட்டியது. வேத சாஸ்திரங்களாகத் தோன்றிய தேவசக்தியே (தேவியே) பரம்பொருளின் ஒரு வெளிப்பாடு. காணப்பெறுகிற உலகத்தை விட வேறுபட்ட ஜீவன் என்ற பரமாத்ம நிலையின் பிரதிபலிப்பு உணரப் பெற்றது. உடலும் இந்திரியங்களும் மனமும் புத்தியுமே ஜடசேதனப் பொருட்களின் உண்மை நிலை என்று பரவலாக இருந்த அறியாமையை "தேவனான ஆத்மா என்று ஒன்று உண்டு அதுவே நித்யப் பொருள்" என்ற உள்ளறிவு அகற்றியது. இதனை உபநிஷத் தெளிவாக உணரச் செய்தது. அந்தத் தூய அறிவே பிரும்மஜ்ஞானமாகும். அவ்வடிவில் வேதம் சாஸ்திரம் என உருக் கொண்ட தேவ சக்திக்கு வணக்கம். இது பிரும்ம வித்யையாகிற வேதமாதாவிற்குச் செய்கிற வணக்கம்.6*

अङ्के यस्याः शयानस्य मृत्युर्नास्तीति निश्चयः ।
श्रुतिं तां सन्ततं देवीं ध्यायामि परमात्मना ।। ७

அங்கே: யஸ்யா: சயாநஸ்ய ம்ருத்யுர்நாஸ்தீதி நிச்சய: ।
ச்ருதிம் தாம் ஸந்ததம் தேவீம் த்யாயாமி பரமாத்மநா ॥ 7

இந்த பிரும்ம வித்யையைத் தனித்துப் போதிப்பது உபநிஷத் என்ற வேதப்பகுதி. உபநிஷத்தை நன்கு ஆராய்ந்து ஆழ்ந்த உண்மை நிலையைக் கண்டவன் உபநிஷத் என்ற தாயின் மடியில் பயமின்றி படுத்திருக்கிற பாலன். அந்தத் தாயின் பாதுகாப்பால் மரணம் அவனை நெருங்குவதில்லை. அந்த உபநிஷத் எனும் தாயை பரபிரும்மம் என்ற உள்ளுணர்வுடன் தியானிக்கிறேன்.

மரணம் என்பது அறியாமையின் விளைவே, ஆத்மா தான் நான்; இந்த உடலோ மனமோ மற்றதோ அல்ல என்ற உண்மையை அறியாததால் ஆத்மாவான தான் அழிவற்றவன் என உணராமல் உடல் முதலியவை அழிந்ததும் தான் அழிந்து விட்டதாக உணர்ந்து துயருக்குள்ளாவது அறியாமை தானே. நானே பிரும்மம் என்ற உணர்வு அழிவின்மையை உணர்த்தும். *(7)*

நூல் நன்மை பயப்பதாக இடையூறின்றி நிறைவுற உதவுபவர் விக்னேசுவரர்.

**यस्य प्रसादेन भवन्ति लोकाः ऐश्वर्यशास्त्रार्थपरात्मसिद्धाः ।**
**तस्मै नमो विश्वहिते रताय विघ्नेश्वरायाखिललोककर्त्रे ॥ ८**

**யஸ்ய ப்ரஸாதேந பவந்தி லோகா: ஐச்வர்யசாஸ்த்ரார்தபராத்மஸித்தா: ।**
**தஸ்மை நமோ விச்வஹிதே ரதாய விக்நேச்வராயாகிலலோககர்த்ரே ॥8**

செய்கிற செயலின் நிறைவே ஸித்தியாகும். நிறைவுறத் தடையாகப் பல இடையூறுகள் தோன்றலாம். அவை முன் செய்த வினையின் பின் விளைவாகலாம். அவை காரியத்தைக் கெடுப்பவை (விக்னங்கள்). அவை பரப்பொருளின் பேராளுமையையும் அவற்றை விளக்குகிற சாஸ்திர நுட்பத்தையும் பெறுவதில் இடையூறாகி பரமாத்மாவை உணர முடியாமற் செய்கின்றன. உலகை ஆட்டிப்படைக்கிறவர் விக்னேசுவரர். அதனால் உலகிற்கு நலம் புரிவதில் ஆர்வ மிக்கவர். அவர் அருளால் உலகம் பரமாத்மாவை இடையூறின்றி காணும். அவருக்கு வந்தனம். *(8)*

ஸ்ரீ ராமசந்திராச்ரமீ என்ற ராமன் பெயரைக் கொண்டவர் தான் இந்த நூலாசிரியரின் குரு. அவருடைய பெயரை

*நேரிடையாகக் குறிப்பிடாமல் ராகவா நந்த குரு எனக் குறிப்பிட்டு வணங்குகிறார்.*

**सिद्धासनं प्राप्य जितेन्द्रिया ये**
**सत्यात्मबुद्ध्या सकलं विलाप्य ।**
**तिष्ठन्ति तत्वे सहजप्रबोधे**
**तान् राघवानन्दगुरून्नमामि ॥ ९**

**ஸித்தாஸநம் ப்ராப்ய ஜிதேந்த்ரியா யே**
**ஸத்யாத்மபுத்த்யா ஸகலம் விலாப்ய ।**
**திஷ்டந்தி தத்வே ஸஹஜப்ரபோதே**
**தாந் ராகவாநந்தகுரூந்நமாமி ॥ 9**

*இந்திரியங்களின் போக்கைக் கட்டுப்படுத்தி வென்றவர் என் குரு ஸ்ரீ ராகவா நந்த குரு (ஸ்ரீ ராமசந்திரர்) ஸித்தா ஸனத்தில் அமர்ந்து ஸத்யமான பரமாத்மாவைத் தெளிவுடன் உணர்ந்து காட்சிப் பொருளான உடல், இந்திரியம் முதலியவற்றையும் வெளியே உள்ள காட்சிப் பொருளையும் அவற்றின் விரிவுடன் ஆத்மதத்துவத்தில் எவ்வகை வேறுபாடுமற்றதாக, லயமடையச் செய்தவர். நம் அறிவைப் போன்று அவரது அறிவு செயற்கையாக பண்படுத்தப்பட்டதல்ல. இயல்பாக அமைந்த தத்வஜ் ஞானத்தில் நிலை கொண்டவர். அவரை வணங்குகிறேன். (9)*

**जन्मकोटिभिरनुष्ठिताखिलध्यानकर्मपरमेश्वरेक्षणैः ।**
**कृत्स्नदृश्यगतदोषचिन्तनं बुद्धिमानथ करोति तत्त्वतः ॥ १०**

**ஜந்மகோடிபிரநுஷ்டிதாகிலத்யாநகர்மபரமேச்வரேக்ஷணை: ।**
**க்ருத்ஸ்நத்ருச்யகததோஷசிந்தநம் புத்திமாநத கரோதி தத்த்வத: ॥ 10**

*ஸ்ரீ ராம பரமாத்மாவைக் காணத் தகுதிதேவை. கோடிக்கணக்கான பிறவிகளில் தியானம், வழிபாடு, பரமேசுவரனை உணர்கிற தெளிவு முதலியவற்றால் காட்சிப் பொருளனைத்திலும் உள்ள பிரும்மநிலைக்கு உதவாத குறைகளிருப்பதை ஆராய்தலே இந்த அறிவாளி செய்வான்.*

காட்சிக்கு உட்படுகிற வெளிப் பொருளனைத்திலும் மாறுபாடடைதல், துயர் விளைவித்தல், பிறவி - மரணத் தொடரைத் தொடரச் செய்தல் முதலிய குறைகள் எப்போதும் உண்டு. இவற்றைத் தவிர்க்க தியானம், ஜபம், பரமேசுவர தரிசனம் முதலியவை எப்போதும் உதவும். நுண்ணறிவுள்ளவன் இவற்றின் உதவியால் தத்துவ ஜ்ஞானம் பெறுவான்.(10)

यद्यदल्पमिह किञ्चिदीक्षते तत्तदेव परिणामि नश्वरम्।
निश्चिनोति परिमार्गयत्यतो नित्यवस्तु किमिहेति तत्त्वतः ॥ ११

யத்யதல்பமிஹ கிஞ்சிதீக்ஷதே தத்ததேவ பரிணாமி நச்வரம்।
நிச்சிநோதி பரிமார்கயத்யதோ நித்யவஸ்து கிமிஹேதி தத்த்வத: ॥ 11

நாம் பழகிவருகிற உலகில் நாம் காண்பது மிக அல்பமே. அவையனைத்தும் மாறுபாட்டிற்கு உட்படுகிறது. மாறுபாட்டின் எல்லையாக அழிவை அடைகிறது. இவற்றில் ஏதேனும் நிலைத்து - நாசமடையாத - மாறுபாடடையாத பொருள் உள்ளதா எனத் தேடி அந்த நித்யப்பொருள் எது எனக் கண்டு பிடிக்கிறான். தத்வ ஆராய்ச்சி முறையில் நித்யாநித்ய வஸ்து விசாரம் என்ற முதற்படி இது.

ஆகாசம் காலம் திக்குகள் ஆத்மா என்ற சில நித்தியப் பொருட்கள் உள்ளன. ஆனால் ஆத்மாவிடமிருந்து ஆகாசம் தோன்றிற்று. ஆகாசத்திலிருந்து வாயு, வாயுவிடமிருந்து அக்னி அக்னியிடமிருந்து ஜலம். ஜலத்திலிருந்து பூமி, பூமியிடமிருந்து பயிர்கள் என தைத்திரீய உபநிஷத் கூறும் (2-1) இவற்றின் கூட்டால் உலகம் தோன்றுகிறதெனில் ஆத்மாவைத் தவிர மற்றதனைத்தும் மாறுபாட்டிற்கு உட்படுவதே. அதனால் நிலைத்த இருக்கை கொண்டதல்ல. அந்த ஆத்மா எது என அறிஞன் ஆராயத் தொடங்குகிறான். தன் அறிவும் ஆராய்வும் அளவிற்குட்பட்டதென உணர்ந்து வழிதேடுகிறான். 11

आत्मज्ञानं कारणं वेदवाक्यात्
श्रुत्वा बन्धध्वंससाध्यस्य सिद्ध्यै।
तच्च ज्ञानं वेदवाक्यैकलभ्यं
मत्वा धीरो देशिकेन्द्रं वरिष्ठम्॥ १२

गत्वा शान्तस्तस्य सेवां प्रयुञ्जन्
तिष्ठेत्तस्मै देशिको वाक्यजातम् ।
आदिश्यादौ बोधयेत्तत्त्वमर्थं
श्रुत्या युक्त्या स्वानुभूत्या तथैव ।। १३

ஆத்மஜ்ஞாநம் காரணம் வேதவாக்யாத்
ச்ருத்வா பந்தத்வம் ஸஸாத்யஸ்ய ஸித்த்யை ।
தச்ச ஜ்ஞாநம் வேதவாக்யைகலப்யம்
மத்வா தீரோ தேசிகேந்த்ரம் வரிஷ்டம் ॥ 12

கத்வா சாந்தஸ்தஸ்ய ஸேவாம் ப்ரயுஞ்ஜந்
திஷ்டேத்தஸ்மை தேசிகோ வாக்யஜாதம் ।
ஆதிச்யாதௌ போதயேத்தத்த்வமர்தம்
ச்ருத்யா யுக்த்யா ஸ்வாநுபூத்யா ததைவ ॥ 13

*பிறப்பிறப்புத் தொடரில் சிக்கிக் கொள்வது ஸம்ஸார பந்தமாகும். அந்த சிக்கலிலிருந்து விடுபடுவதே முக்தி - மோக்ஷம் என்பது .சிக்கலிலிருந்து விடுபட வேதம் கூறுகிற ஒரே உபாயம்- அவ்வழி உணர நல்ல குருவை நாடுவாய் என முண்டகோபநிஷத் கூறும். (1-2-12) அந்த விடுதலை செயற்கையாக அமையப் பயன் தராது. அது தாற்காலிகம். நிலைத்த விடுதலையே (முக்தியே) நாம் தேடுகிற ஸித்தி. அதற்கான உபாயம் உபநிஷத்துகளில் பொதிந்துள்ளது. அங்கு மட்டுமே கிட்டக் கூடியது. அதனை நாமே படித்து அறிய இயலாது. அதற்கென அதனை வழிவழியாக குருபரம்பரை முறையில் கற்றுணர்ந்து அனுபவிக்கிற சிறந்த வழிகாட்டியை அடைய வேண்டும்.12*

*அறிவை நல்வழியில் செலுத்த வல்லவனே தீரன். புலனடக்கமும் மன அடக்கமும் பயின்று தேர்ந்ததன் விளைவாக சாந்தி என்ற அமைதி பெற்றவனே குரு காட்டுகிற வழியைப் பின்பற்றுவான். குருவிற்குச் செய்கிற பணிவிடையால் அவரது உபதேசத்தில் அக்கரை அதிகமாகும். அவ்வுபதேசம் தன் உள்ளத்தில் பதிகிறவரை அவன் குருவின் அருகில் வசிக்க வேண்டும். அக்கரையும் பக்தியும் மிகுந்து தன்னை அணுகி நிற்கிற*

*சிஷ்யனிடம் அவருக்குப் பரிவு மிகுந்து உபதேசிப்பார். உபநிஷத்துகளைக் கசடறக் கேட்டறிந்து (சிரவணம்) அதனை முன்னும் பின்னும் தன் அறிவைக் காட்டி (யுக்தி) ஆராய்வான். அவ்வாறு ஆராய்ந்து கண்டது தன் அனுபவத்திற்கு வருவதை (ஸ்வாநுபூதி) உணர்வான். அந்தப் பேருணர்வு பெற்று கண்ட பிரும்மமே ராமன் எனும் தாம -பேரிருக்கை எனக் காண்பான். அந்த தாம -பேரிருக்கையாக, பேருணர்வாக, பேரானந்தமாகக் காட்சி தருவதைக் காண்பான். இருக்கிற பொருள் மறையும். இருக்கை (ஸத்) மறையாது. உணரப் பெறுவது மாறும். உணர்வு (சித்) மாறுபாடு அடையாது. ஆனந்தம் தரும் பொருள் மாறும், மறையும். ஆனந்தம் மாறாது. மறையாது. அந்த ஸத் - சித் - ஆனந்தமே ''பரம் தாம''. உலகில் ''பரந்தாமன்'' எனச் செல்லப் பெயரிட்டு ஸ்ரீ ராமனை அழைப்போம். 13*

*(தைத்திரீய உபநிஷத்தின் சிக்ஷாவல்லி என்ற பகுதியின் உட்பொருளை ஸ்ரீ ராமனிடம் இதுகாறும் பொறுத்திப் பார்த்தோம். இனி ஆனந்தவல்லி என்ற இரண்டாம் பகுதியை ராமனோடு பொறுத்திப் பார்போம்)*

**श्रुतं ब्रह्म सत्यं यदादौ प्रधानं**
**तदन्ते पुनर्ब्रह्मवाक्ये महेशम् ।**
**परं श्रूयते सेन्द्रदेवाद्यवेद्यं**
**समस्तं यतो यच्च सर्वं यदन्तम् ॥ १४**

**ச்ருதம் ப்ரஹ்ம ஸத்யம் யதாதௌ ப்ரதாநம்**
**ததந்தே புநர்ப்ரஹ்மவாக்யே மஹேசம் ।**
**பரம் ச்ரூயதே ஸேந்த்ரதேவாத்யவேத்யம்**
**ஸமஸ்தம் யதோ யச்ச ஸர்வம் யதந்தம் ॥ 14**

*வேதம் (உபநிஷத்) மூலம் நாம் கேட்டறிந்த பிரும்மம் முக்காலத்திலும் அழிவுறாத ஸத்யப் பொருள். ஸத்யம், ஜ்ஞானம், அநந்தம் என அதனைக் குறிப்பிடுவர். அது தான் நாம் அறிய வேண்டிய முக்கியப் பொருள் (பிரதானம்). அதனை உணர்வதாலேயே அதாகிவிடுவர். அந்த ஆத்மாவிடமிருந்து தான் ஆகாசம், வாயு, அக்கினி, ஜலம், பூமி என அனைத்தும்*

வெளியாயின. அவை அனைத்துமே அந்த பிரும்மத்தால் வாழ்ந்து உலகமாக விரிந்து பல தோற்றங்களைப் பெற்றன. பின் ஒவ்வொன்றும் தன் மூலப்பொருளில் அடங்க ஆகாசமும் பராகாசமான பிரும்மத்தில் ஒடுங்கியது. பேருண்மையும் பேருணர்வும் வரையற்ற நிலையுமான (அந்த ஒடுக்கத்திற்கும் அப்பாலுள்ள) பெருநிலையே பிரும்மம். அது தான் பேராளுமை பெற்றது (மஹேசம்). இந்திரனும் அக்னியும் வாயுவும் ஏனைய தேவர்களும் கூடத்தம் தமது (அளவிற்குட்பட்ட) பேரறிவால் அதை உணர முடியவில்லை என ஒதுங்கி நின்றனர். காட்சிக்கு உட்படுவதும் உட்படாததுமான அனைத்தும் அதிலிருந்து தான் தோன்றின (யத:). ஜ்ஞானியின் உணர்வில் காணப்படுவதனைத்தும் பிரும்மமே (யத்ச). எனக் காணப்படுவது .தோன்றிய பொருளனைத்தும் கரைந்து மறைவது அதனிடமே (யதந்தம்). அறிஞரின் உள்ளத்திலும் ஸூரிய மண்டலத்தினுள்ளும் அதுவே தியானிக்கப் பெறுகிறது. அன்னமய கோசத்தை நன்கு முழுவதும் ஆராய்ந்த பிறகும் ஆராய்ந்தறிய இயலாத பகுதி (புச்சம்- வால் ) உள்ளதெனக் கண்டு, வரிசையாக அன்னமய கோசத்தினுள் படல் படலாக உள்ள பிராணமய கோசம், மனோமயகோசம் விஜ்ஞானமய கோசம், ஆனந்த மயகோசம் என அனைத்தையும் ஆராய்ந்த பிறகும் கண்டுபிடிக்க இயலாதெனக் கண்ட வால் (புச்சம்) உண்டெனக் கண்டு தளர்ந்து அது தான் பிரும்மம்; அது தான் ஆராய்வின் இறுதிநிலை என உபநிஷத் கூறும். (14)

यद्ब्रह्मादौ सूचितं ब्रह्मवाक्ये
यद्व्याख्यातं सत्यभूतं यदृग्भिः ।
प्रत्यग्भूतं यच्च सर्वस्य जन्तोः
तद्भूमाख्यं रामधाम प्रपद्ये ॥ १५

தத்ப்ரஹ்மாதௌ ஸூசிதம் ப்ரஹ்மவாக்யே
யத்வ்யாக்யாதம் ஸத்யபூதம் யத்ருக்பி: ।
ப்ரத்யக்பூதம் யச்ச ஸர்வஸ்ய ஜந்தோ:
தத்பூமாக்யம் ராமதாம ப்ரபத்யே ॥ 15

பிரும்மம் என்பது என்ன? என்பது ஆராய்விற்கு எடுத்துக் கொண்ட விஷயம். உபநிஷத் அதனை விளக்க ''ஸத்யம் ஜ்ஞானம் அனந்தம் பிரும்ஹ'' என முதல் குறிப்பு தருகிறது. அந்த ஸத்தியப் பொருள் எது என ஆராய்கையில் அன்னமயம் பிராணமயம், மனோமயம், விஜ்ஞான மயம், ஆனந்த மயம் என்ற முடிவுகள். ஒவ்வொன்றிலும் குறைகண்டு அவற்றிற்கு அப்பாற்பட்டதொன்றே பிரும்மம் எனக் காண்கிறான். அன்னமயம் முதலியவற்றிலுள்ள குறை - அது ஸத்யமல்ல; முக்காலத்திலும் பாதிப்புறாதது அல்ல. அறியாமையின் கலப்பிருப்பதால் ஜ்ஞானமுமல்ல. இறுதி- முடிவு காணப்படுவதால் அநந்தமுமல்ல என ஒதுக்கி ஸத்யமாயும் ஜ்ஞானமாயும் அநந்தமாயுமுள்ளதே பிரும்மமாக இருக்கமுடியும் எனத் தேரும். அது வெளிப்படையான இந்திரியம் முதலியவற்றின் காட்சிக்கு உட்படாதது; உணர்ச்சிகளனைத்தையும் அகற்றிப் பழகியவனது உள்ளுணர்வில் மட்டும் துலங்குவது அது; உயிரினமனைத்திலும் அது உள்ளது. ஆனால் ஓரிரு ஜ்ஞானிகள் மட்டும் அது இருப்பதை உணர்வர்.

உயிரினமனைத்திலும் சேதனசக்தியாகக் காணப்படுவது போல் ஜடப்பொருளிலும் ஜடசக்தியாக அது உள்ளது. ஆக அது எல்லாமாயுமுள்ள பெரும்பொருள். அதனைத் தவிர வேறொன்றில்லை. அதனை பூமா என உபநிஷத் கூறும்.

உலகில் உள்ள பொருட்களனைத்திலும் ஐந்து நிலைகள் உண்டு. அது இருக்கிறது (அஸ்தி). அது தன் தனித் தன்மையால் தானே புலப்படுகிறது. (பாதி). அது உயிரினத்தை ஈர்க்கிறது. (ப்ரியம்). அதற்கு ஒரு உருவம் (ரூபம்) உண்டு. அதற்கொரு பெயர் (நாமம்) உண்டு. அந்த உருவமும் பெயரும்மாறுபடக் கூடியதானதால் பிரும்மத்தைக் குறிப்பிடுபவை அல்ல. முதலிலுள்ள மூன்றும் (அஸ்தி பாதி ப்ரியம்) பிரும்மத்தின் நிலை. ஆக அனைத்தும் பிரும்மமாக ஜ்ஞானிகளால் காணப்பெறுகிறது. அதுவே ''பூமா''. அதுவே ஸ்ரீ ராமன் என்ற தாம. அதனை நான் அண்டி நிற்கிறேன். 15

यद्विज्ञानात्सर्वकामाप्तिरुक्ता यस्माज्जातं सूक्ष्मभूतं समस्तम् ।
यद्बोधार्थं कल्पिताः पञ्च कोशाः कोशातीतं रामधाम प्रपद्ये ।। १६

**யத்விஜ்ஞாநாத் ஸர்வகாமாப்திருக்தா**
**யஸ்மாஜ்ஜாதம் ஸூக்ஷ்மபூதம் ஸமஸ்தம் ।**
**யத்போதார்தம் கல்பிதா: பஞ்ச கோசா:**
**கோசாதீதம் ராமதாம ப்ரபத்யே ॥** 16

பிரும்மத்தை உணர்பவன் விரும்பியதனைத்தையும் பெறுவான் என உபநிஷத் கூறும். "सोऽश्नुते सर्वान् कामान् सह । ब्रह्मणा विपश्चितेति" என விரும்புவதைப் பெறுவேன் என முனைபவனுக்கு அந்தந்த விருப்பம் நிறைவுறலாம். இனி எதனையும் விரும்பாதிருக்கிற மனநிறைவு கிட்டாது. ஆனால் பிரும்மத்தை உணர்ந்தவனுக்கு எல்லாமான தொன்றைத்தானாகக் கண்டதால் விருப்பம் என ஒன்று தோன்றுவதற்கே இடமில்லை. அதனால் நிலைத்த மன நிறைவு கொண்டவன் அவன். பூமா என்ற பெரும் பொருளிலிருந்தே அனைத்தும் வெளிப்பட்டது. ஆராய ஆராய நுட்பமானது அனைத்தும் அதன் நுட்பமான மேனிலையை உணரும் போது தன் நுட்பத்தன்மையை இழந்து ஸ்தூலப் பொருளாகி விடுகிறது. நுட்பத்திலும் நுட்பமெனக் கண்டுணர்ந்த ஆனந்தமயனும் பிரும்மத்தை உணர்ந்ததும் ஸ்தூலப் பொருளாகி விடுவான். பிரும்மத்தை விட மேலானதோ நுட்பமானதோ எதுவுமில்லை.

பரம ஸூக்ஷ்ம நிலையைக் கண்டறிவதற்கே அன்னமயம் முதலிய ஐந்து கோசங்களை ஆராய்வர். இவை படிகளே தவிர அடைய வேண்டிய உயர்நிலை அல்ல. இந்த ஐந்து கோசங்களுக்கும் அப்பாற்பட்டது அந்த பிரும்மம். திருமணத்தன்று வானில் நட்சத்திர மண்டலத்திற்கப்பாற்பட்ட ஸப்தருஷி மண்டலத்தின் இடையே வஸிஷ்ட நட்சத்திரத்திற்கருகே அவரது பத்தினியான அருந்ததியைக் காண்பது முக்கியச் சடங்காகும். எல்லாமே நட்சத்திர வடிவிலிருப்பதால் அருந்ததியை வேறுபடுத்திக் காண்பது எளிதல்ல. அதனால் ஏழு நட்சத்திரக்குவியலைக்காட்டி இது அல்ல; இது அல்ல என விலக்கிக் கடைசியில் அருந்ததியைச் சுட்டிக் காணச் செய்வர். அது போன்று ஓரளவு அறிமுகமாயுள்ள அன்னமய கோசத்தையே பிரும்மமாகக் காட்டிப்பின் அக்கோசத்தை விட வேறுபட்டதும் கோசத்தால் பாதுகாக்கப்

*பெறுவதுமான உட்பொருளைப் பிராணமயனுக உபநிஷத் அறிமுகப்படுத்தும். எல்லாவற்றிற்கும் மூலமான பிரும்மத்தை உணர்ந்ததும் அதனை மறைக்க ஆடை சட்டை உறை போன்றதே ஆனந்தம் விஜ்ஞானம் மனம் பிராணன் அன்னமயன் என்ற ஐந்து கோசங்கள் என தெளிவாக உணர்ந்ததும் பிரும்மத்தை உணர அமைக்கப்பட்ட படிகளே என்பது உணரப் பெறும். இது கோசம் என இதனை அகற்றியதும் இதுவரை காணப்படாதிருந்த அது புலப்படும். அந்தப் பேரொளியை- பெரும் பொருளை ஸ்ரீ ராமனைச் சரணடைகிறேன்.*

*காதணி, வளை, காப்பு, சிலம்பு, மோதிரம் என்று எளிதில் தனித் தனியாகத் தன்னை அடையாளம் காட்டிக் கொண்டிருந்த நகைகள் மூசையிலிட்டு நெருப்பில் காய்ச்சி உருக்கியதும் உருவகம் பெறாத தங்கம் என்ற மூல நிலையைப் பெறுவது போல கோசங்களுக்கப்பாற்பட்ட பிரும்ம நிலை உணரப் பெறுகிறது.16*

सत्तास्फूर्ती यत्र विभ्रान्तिमेतः
    यस्मिन्नेतद्बंभ्रमीतीह विश्वम् ।
यच्चादृश्यं नीडशून्यं न सङ्कि
    दृष्टे यस्मिन् बाध्यते भीतिहेतुः ।
यस्याज्ञानाद्भीतियुक्ताश्च देवाः
    तद्भूमाख्यं रामधाम प्रपद्ये ॥ १७

ஸத்தாஸ்பூர்தீ யத்ர விப்ராந்திமேத:
    யஸ்மிந்நேதத் பம்ப்ரமீதீஹ விச்வம் ।
யச்சாத்ருச்யம் நீடசூந்யம் ந ஸங்கி
    த்ருஷ்டே யஸ்மிந் பாத்யதே பீதிஹேது: ।
யஸ்யாஜ்ஞாநாத்பீதியுக்தாச்ச தேவா:
    தத்பூமாக்யம் ராமதாம ப்ரபத்யே ॥ 17

*பிரும்மம் என்பது பரமமான ஸத். நான் உள்ளேன். குடம் உள்ளது. அக்னி உள்ளதென உணரும் போது நானும் குடமும் அக்னியும் குறுகிய அபர ஸத். அவ்வாறு நேரிடையாகவோ ஊகம் முதலியவற்ருலோ உணர்வது ஸ்பூர்த்தி (காட்சி)*

எனப்படும். இவை பிரும்ம உணர்வை நேரிடையாகப் பெற்றவனிடம் பயன்பாடின்றி ஓய்வடைகின்றன. பிரும்ம உணர்வில் அது இது என்ற வேறுபாட்டுணர்வு இடம்பெறுது. இந்த உலகம் நேரிடைக் காட்சி முதலியவற்றால் மெய்யானதெனக் கண்டதனைத்தும் பிரும்மானுபவத்தில் நிலை பெறுமல் ஆட்டம் கண்டு விடும். தோற்றத்தில் மெய்ப் பொருளாயிருந்ததும் காணுமற் போகும்.

மனத்தாலோ புத்தியாலோ சித்தத்தாலோ அஹங்காரத்தாலோ எட்ட முடியாதது. மனமும் ஏனையதும் அதது அததாகச் செயலாற்ற உதவுவது அது. நம் உள்ளறிவிற்கு எட்டாதது. நாம் காண்கிற பொருளனைத்திற்கும், உருவம், சுவை, மணம் முதலியதற்கும் ஆதாரமாக ஒரு பொருள் தேவை. ஆதாரமின்றி அவை உணரப் பெறுவதில்லை. சுவையையும், மணத்தையும், நிறத்தையும் உணர ஒரு மாம்பழம் தேவை. சுவை முதலியவற்றிற்கு அது ஆதாரம். பிரும்மத்திற்கு ஒரு ஆதாரமில்லை. அது எதனுடனும் ஒட்டுவதில்லை. அதனைக் குறிப்பிட்டு உருவகப்படுத்த சொல் இல்லை. (அநிருக்தம்) அதனைக் கண்டுணர்ந்தவனுக்கு மரணம் ஜனனம் முதலியவை பயம் தருவதில்லை. அதனைச்சரியாக உணராத வாயுவும் ஸூரியனும் அக்னியும் இந்திரனும், ஏன் யமனும்! கூடப் பயந்து நடுங்குகின்றனர். தம்மை யாரோ ஆட்டிப் படைக்கின்றனரே என. அந்தப் பெருநிலையாகிய ராமனைச் சரணடைகிறேன். 17

यस्यानन्दस्यांशमग्राश्च देवाः
यस्यानन्दो भुज्यते वीत तृष्णैः ।
यच्चैतन्यं सर्वभूतान्तरस्थं
यश्चादित्ये गीयते वेदवाक्यैः ।
यच्चैकत्वं ब्रह्मणः साक्षिणोक्तं
तद्ब्रह्माख्यं रामधाम प्रपद्ये ॥ १८

**யஸ்யாநந்தஸ்யாம்சமக்நாச்ச தேவா:**
**யஸ்யாநந்தோ புஜ்யதே வீத த்ருஷ்ணை: ।**
**யச்சைதந்யம் ஸர்வபூதாந்தரஸ்தம்**
**யச்சாதித்யே கீயதே வேதவாக்யை: ॥**

**யச்சைகத்வம் ப்ரஹ்மண: ஸாக்ஷிணேக்தம்**
**தத்பூமாக்யம் ராமதாம ப்ரபத்யே ॥ 18**

*பெருங்கடலில் ஆழ்ந்த மீன்களும் ஏனையவையும் கடலின் அம்சமே. அவ்வாறு பிரும்மத்தின் அம்சங்களே தேவர்கள். பிரும்மத்தின் உருவகம் அது ஆனந்தமென அந்த ஆனந்தத்தின் திவிலைகளையே தேவர்கள் பெறுகின்றனர் உபநிஷத் இவ்வாறு விளக்கம் தரும். வாலிபம் நல்ல கல்வி, அழகு, நினைத்ததை நிறைவுறச் செய்கிற ஆற்றல், உடல்வலிவு, திடம் முதலியவை பெறுவதே மனிதனின் ஆனந்தநிலை. நற்கருமங்களைப் புரிந்து தேவர் நிலை பெற்றவர் (கர்ம தேவர்) இதனை விட நூறுமடங்கு பெறுவர். தேவர் தேவ குருவான பிருஹஸ்பதி பிரஜாபதி பிரும்மா என வரிசையில் மேன் மேல் நிலைபெற்றவர் இதே வரிசையில் நூறு நூறு மடங்கு அதிக ஆனந்தம் பெறுவர். ஆனால் வேதமோதி அதன் படி நடந்து பண்பட்டு காமத்தின் வசப்படாத அந்தணரும் பன்மடங்கு பெருகிய பிரும்மாவின் ஆனந்தத்தைப் பூமியில் வாழ்ந்தவாறே பெறுவார் என உபநிஷத் விளக்கும். அந்தப் பேரானந்தமே பிரும்மம்.*

*அந்த பேரானந்த நிலையே உயிரின மனைத்திற்கும் உள்ளே உள்ள உள்ளுணர்வு (சைதன்யம்) ஆகும். இதுவே ஸூரியனிடமுள்ளது என உபநிஷத் கூறும். ஸூரியனை இயக்குகிற சித்சக்தியே பூச்சி - புழுக்களையும் இயக்குகிறது. அதுவே அனைத்திற்கும் அததை அததாக இயக்குகிற அந்தர்யாமி. பூமியைப் பூமியாக ஜலத்தை ஜலமாகச் செயல்பட உள்ளிருந்து அதனதன் இயல்பாக நின்று கட்டுப்படுத்துகிறது. அவ்வியல்பால் நடைபெறுகிற செயலனைத்தின் ஸாக்ஷி அதுவே. அதுவே பூமா. அதுவே ஸ்ரீ ராமன். அவரைச் சரணடைகிறேன். 18*

यस्माच्छब्दाः शक्तिशून्या निवृत्ताः ।
तद्भूमाख्यं रामधाम प्रपद्ये ॥ १९

**யஸ்மாச்சப்தா: சக்திசூந்யா நிவ்ருத்தா: ।**
**தத்பூமாக்யம் ராமதாம ப்ரபத்யே ॥ 19**

*மனத்தால் நாம் நினைப்பதே வாக்கால் சொல் வடிவில் வெளிப்படுகிறது. அதுவே உடலின் செயலாக நிறைவுறுகிற*

*தென்பர். மனமே அதனை உருவகப்படுத்த முடியாது என்ற நிலையில் சொல்லும் செயலிழந்து தோற்றுத் திரும்புகிறது. குறிப்பிட்ட அளவில் குறிப்பிட்ட காலவரைக்குட்பட்டதைத் தான் மனமும் சொல்லும் தீண்டும். அதற்கப்பாற்பட்டதை இவ்விரண்டும் எட்டிப் பார்ப்பதில்லை. அந்த பூமா- அந்த ராமனை அண்டி நிற்கிறேன். (19)*

यत्राम्नायो वर्ततेऽमुख्यवृत्त्या
यच्चाग्राह्यं बुद्धिवृत्त्यात्मभूतम् ।
यं चानन्दं प्राप्य विद्वानभीतः
तद्भूमाख्यं रामधाम प्रपद्ये ।। २०

**யத்ராம்நாயோ வர்ததேऽமுக்யவ்ருத்த்யா**
**யச்சாக்ராஹ்யம் புத்திவ்ருத்த்யாத்மபூதம் ।**
**யம் சாநந்தம் ப்ராப்ய வித்வாநபீத:**
**தத்பூமாக்யம் ராமதாம ப்ரபத்யே ॥ 20**

*வேதமும் தன்னால் நேரிடையாக பிரும்மத்தைச் சுட்டிக் காட்ட முடியாதெனக் கூறுகிறது. சொல்லின் நேர்ப்பொருளாக இல்லாமல் மேனேக்காகக் கூறும். அப்படி வேதத்தால் விளக்கப் பெறுகிற பரம் பொருளை ஆத்மாவாக இந்த ஸ்தூல அறிவாற்றல் உணரச் செய்யாது. ஆனால் அது தான் ஆனந்தம் என ஜ்ஞானி உணர்வான். அவனிடமுள்ள பேருணர்வாகிய பிரஜ்ஞானம் அதற்கு உதவுகிறது அவ்வுணர்வைப் பெற்றவன் தானும் பிரும்மமாகி விடுவதால் எதனிடமும் பயப்படுவதில்லை. அதுவே பூமா எனும் ஸ்ரீ ராமனாகிய பெருநிலை. அதனைச் சார்ந்துள்ளேன். 20*

यस्मिन् ज्ञाते पुण्यपापे च न स्तः
यस्मिन्दृष्टे विश्वमेतद्धि दृष्टम् ।
ध्येयं यच्च ब्रह्मविद्भिः प्रशान्तैः
तद्भूमाख्यं रामधाम प्रपद्ये ।। २१

**யஸ்மிந் ஜ்ஞாதே புண்யபாபே ச ந ஸ்த:**
**யஸ்மிந்த்ருஷ்டே விச்வமேதத்தி த்ருஷ்டம் ।**

த்யேயம் யச்ச ப்ரஹ்மவித்பி: ப்ரசாந்தை:
　　தத்பூமாக்யம் ராமதாம ப்ரபத்யே ॥ 21

*அந்த ராமன் என்ற பெருநிலையுணர்ந்தவனுக்கு உடலும் உள்ளமும் ஆத்மநிலையிழந்து ஜடநிலை பெறுவதால் அவற்றின் செயல் புண்ணியமாகவோ பாபமாகவோ மாறுவதில்லை. முன் புரிந்த புண்ய பாபங்களும் இவனிடம் ஒட்டுவதில்லை. அதனால் இன்ப துன்ப உணர்வில்லை. நீர் என்ற ஆதார நிலை உணர்ந்ததும், பனி, மேகம், ஆறு, குளம், குட்டை, கடல் என்ற வேற்றுமைகள் மறைவது போல், ராமன் என்ற பிரும்மத்தைக் கண்டதும் எல்லாம் கண்டதாயிற்று. உடல் உள்ள அமைதி பெற்ற பிரும்ம ஜ்ஞானிகள் ராமனையே பிரும்மமாக பிரும்மத்தையே ராமனாக உள்ளத்தில் உருவகப்படுத்துகின்றனர். அந்த ராமன் என்ற பேரொளியை- பூமாவைச் சரணடைகிறேன். (21)*

त्यागो यस्मै वर्तते वेदवाक्ये यद्विज्ञाने साधनं योगमाहुः ।
केचित्सांख्याः सांख्यमेवाद्रियन्ते तद्भूमाख्यं रामधाम प्रपद्ये ।।२२

த்யாகோ யஸ்மை வர்ததே வேதவாக்யே
　　யத்விஜ்ஞாநே ஸாதநம் யோகமாஹு: ।
கேசித்ஸாங்க்யா: ஸாங்க்யமேவாத்ரியந்தே
　　தத்பூமாக்யம் ராமதாம ப்ரபத்யே ॥ 22

*எந்தச் செயலிலும் தன் நலனை குறித்து ஈடுபடாமல் ஈசன் காட்டிய வழி என அவனுக்கு அர்பணமாக ஈடுபடுவது என்ற தன்னலத் தியாகமே பிரும்மத்தை உணர ஸாதனம் என்பர். சித்தத்தைச் சலியாமல் யோகப்பயிற்சியால் நிலை நிறுத்தி உள்ளத்தில் பிரும்மத்தை உணர்வதாகிய யோகமே பிரும்ம உணர்வின் ஸாதனம் என்பர். சிரவணம், மனனம், நிதித்தியாஸனம் என்ற பிரும்ம வித்தைக்கான பயிற்சி முறைகளால் பிரும்மத்தை உணரலாம் என்பர். எவ்வகையிலேனும் அந்த பிரும்மம் ஒன்றைத் தவிர வேறொன்றைக் காணாத பூமதிருஷ்டியே உருவான ஸ்ரீ ராமன் என்ற பெருநிலையைச் சார்ந்துள்ளேன். (22)*

अन्यो माता मेयमन्यद्धि यत्र पश्यन्नेवेत्येवमुक्तं हि लक्ष्म ।
विश्रम्यास्ते यत्र सत्ये परस्मिन् तद्भूमाख्यं रामधाम प्रपद्ये ॥ २३

அந்யோ மாதா மேயமந்யத்தி யத்ர
பச்யந்நேவேத்யேவமுக்தம் ஹி லக்ஷ்ம ।
விச்ரம்யாஸ்தே யத்ர ஸத்யே பரஸ்மிந்
தத்பூமாக்யம் ராமதாம ப்ரபத்யே ॥ 23

*ஒன்றை அளவிட அளவிடுபவனும் அளவிடப்படுவதும் அளவீடும் தேவை. (திரிபுடீ) அளவிடுபவனுக்கும் அளவீட்டிற்கும் வேறுபட்டதே அளவிடப்படுவது. தனிப்பட்டு வேறொன்றிருப்பதை உணராதிருப்பதே- எல்லாம் அதே என்பதே பூமநிலே. இங்கே காண்பவனே காணப்படுபவனுதலால் காட்சியும் அதுவே ஆகித் திரிபுடி மறைகிறது. அந்தப் பேருண்மைப் பொருளே பூமா என்ற ஸ்ரீ ராமன் என்ற பேரொளி. அதனேச் சரணடைகிறேன. 23*

यद्विज्ञानात्सत्यवादित्वमेति
यस्मात्सत्याज्जायते चातिवादी ।
यस्मिंल्लब्धे नास्ति कर्तव्य बुद्धिः
तद्भूमाख्यं रामधाम प्रपद्ये ॥ २४

யத்விஜ்ஞாநாத்ஸத்யவாதித்வமேதி
யஸ்மாத்ஸத்யாஜ்ஜாயதே சாதிவாதீ ।
யஸ்மிம்ல்லப்தே நாஸ்தி கர்தவ்ய புத்தி:
தத்பூமாக்யம் ராமதாம ப்ரபத்யே ॥ 24

*பிரும்மத்தை உணர்ந்தவன் அதைத் தவிர வேறொன்றில் ஈடுபடமாட்டான். அவன் கூறுவதனைத்தும் பிரும்மத்தைப் பற்றியே இருக்கும். அதனுல் அவன் ஸத்யத்தையே பேசுவான். அதனுல் பாமரனுலும் உணரப் பெறுகிற ஸ்தூல - ஸூக்ஷ்ம - காரணப் பொருளேப் பற்றிப் பேசாமல் இவற்றைக் கடந்த மெய்ப்பொருளேப் பற்றி மட்டும் பேசுவான். பிரும்மத்தை அறிந்தவன் பெறத்தக்கவற்றில் மேலானதை ஏற்கனவே பெற்றுள்ளதால் மற்றொன்றை நாடிச் செயல் புரியமாட்டான். அந்த பூமாவான ராமதாமத்தைச் சரணடைகிறேன். 24*

कोशजातमपनीय बुद्धिमान्ब्रह्मरूपमनवद्यमीक्षते ।
सादरं सकलमानशेषिणा ब्रह्म पुच्छमिति वाक्यमानतः ॥ २५

கோசஜாதமபநீய புத்திமாந்
ப்ரஹ்மரூபமநவத்யமீக்ஷதே ।
ஸாதரம் ஸகலமாநசேஷிணா
ப்ரஹ்ம புச்சமிதி வாக்யமாநத: ॥ 25

*அன்னம் முதலிய ஐந்து கோசங்களிலும் ஆத்மாவின் பிரதிபலிப்புண்டு. அன்னமயன் பிராணமயன் என்றவாறு பெயர்க் குறிப்பீடும் உண்டு. ஆனால் அந்த பிரதிபலிப்பு உணர்கிறவரை மெய்ப்பொருள். முக்காலத்திலும் மெய்ப்பொருளல்ல. கோச ஆராய்வில் ஈடுபட்ட அறிஞன் குறைகாண இயலாத கடைப்பொருளும் மெய்ப்பொருளுமான பிரும்மத்தைக் காண்கிறான். அது தான் அன்னமய ஆத்மா என்றவாறு அந்தந்த கோசத்தில் பிரதிபலித்தது. அவற்றில் குறைகள் (அவத்யம்) காணப்பட்டது. ஐந்து கோசங்களுக்கும் அப்பாற்பட்ட நிலையில் அதில் குறையேதுமில்லை. (அநவத்யம்). தன்னுள் ஸாக்ஷியாக, அந்தர்யாமியாகக் காணப்படுவதும் அதுவே. உடலிலிருந்து தனிப்பட்டது போன்று வால் வெளியே நீட்டிக் கொண்டிருக்கும் பிரும்மமே இது காறும் உடல் முதலியவையாகக் காட்சிதந்து, அதற்குப்புறம்பாகவும் தானுள்ளதைத் தானே காட்டிக் கொள்கிறது. உபநிஷத்தும் இதனையே பல வாக்கியங்களால் நம்மிடம் கரிசனத்தால் அடிக்கடி நினைவூட்டுகிறது. (25)*

अन्नं बाह्यं नाहमस्मीति सिद्धं
तद्वद्देहो नाहमस्म्यन्नकार्यम् ।
नाहं देही तत्र यच्च प्रसिद्धं
तेषां साक्षी सद्घनोऽहं परात्मा ॥ २६

அந்நம் பாஹ்யம் நாஹமஸ்மீதி ஸித்தம்
தத்வத்தேஹோ நாஹமஸ்ம்யந்நகார்யம் ।
நாஹம் தேஹீ தத்ர யச்ச ப்ரஸித்தம்
தேஷாம் ஸாக்ஷீ ஸத்கநோऽஹம் பராத்மா ॥ 26

नाहं श्रोत्रं त्वक् च चक्षुर्न चाहं
जिह्वा घ्राणं पाणिपादं तथैव ।
पायूपस्थं वाङ्मनः प्राणवर्गो
नाहं तेषां दृश्यतुच्छत्वहेतोः ॥ २७

நாஹம் ச்ரோத்ரம் த்வக் ச சக்ஷுர்ந சாஹம்
ஜிஹ்வா க்ராணம் பாணிபாதம் ததைவ ।
பாயூபஸ்தம் வாங்மந: ப்ராணவர்கோ
நாஹம் தேஷாம் த்ருச்யதுச்சத்வஹேதோ: ॥ 27

नाहंकारो वापि वृत्तिस्तदीया
विद्याविद्ये नापि सत्वं रजश्च ।
मूलाविद्या नापि माया तथैव
तेषामेषामागमापाय हेतोः ॥ २८

நாஹம்காரோ வாபி வ்ருத்திஸ்ததீயா
வித்யாவித்யே நாபி ஸத்வம் ரஜச்ச ।
மூலாவித்யா நாபி மாயா ததைவ
தேஷாமேஷாமாகமாபாய ஹேதோ: ॥ 28

*உணவாலான இரத்தம், தசை, கொழுப்பு, எலும்பு என்ற பொருட்களாலான உடலைத்தவிரத் தான் தனித்தில்லை என்று அன்னமய கோசத்தைத் தானாக நினைத்த நான், பின்னர் ஆராய்ந்து இந்த உடலைக் கொண்டு பார்வை மணம் முதலியவற்றை உணரச் செய்கிற கண்ணும் காதும் மூக்கும் இயங்குமாறு செய்கிற பிராணனே நான் என நினைத்தேன். உயிரிருந்தும் இந்த இந்திரியங்களையும் உடலையும் இயக்குகிற மனமே நான் என்றேன். பின்னர் மனம் நாடியதையும் சீர்தூக்கி ஏற்கத்தக்க அறிவே நான்; அறிவாளியாக இருப்பதே எனது சிறப்பெனக் கண்டேன். புலனுக்கு உட்படுவதனைத்தும் மெய்ப் பொருளல்ல. புலனை இயக்குவதே மெய்ப்பொருள். மெய்ப்பொருளல்லாதது மதிப்பிற்குரியதல்ல எனக் கண்டேன். அறிவையும் கட்டுப்படுத்துகிற அஹங்காரம் என்று ஒன்று. பற்பல முன்*

*பிறவிகளில் பெற்ற அனுபவத்தால் என் பெற்ரோர், சூழ்நிலை இவற்ருல் பாதிப்புரு தனி இயல்பது. நான் பொது மனிதனல்ல. நான் தனிமனிதன். இந்த அஹங்காரம் தனக்குரியதைத் தேர்ந்தெடுக்கத் தனித்த மமகாரத்தைக் கொண்டது. இவ்வாறு காணச் செய்த அவித்யை, அதனைக்காண உதவிய வித்யை ஸத்வஸ்வரூபமான அதைக் காண்பதில் தடுமாறச் செய்த ரஜோ குணம், வெளி உலகத் தொடர்புள்ளதே ஆத்மா என்ற தவருக எண்ணச் செய்த மூலாஜ்ஞானம், உலகிலுள்ள அனைவரையும் இந்த மூல அஜ்ஞானத்திற்குட்படச் செய்த ஈசனின் சக்தி, நான் தான் என உலகை ஆட்படுத்துகிற மாயை, அதன் விளைவாக இதுதான் நான் எனக் கொண்டிருந்ததில் இது நானல்ல என்ற மாற்றுணர்வையும் தருவது ஒன்று உண்டு எனத் தெளிவாகிறது. (26,27.28)*

दृष्टे हेयात्मन्यात्मनैवात्मभूते
सर्वं दृश्यं बाध्यते ब्रह्मरूपे ।
यत्र त्वस्येत्यस्ति चात्र प्रमाणं
सिद्धान्तः स्यादागमापायितैषाम् ॥ २९

த்ருஷ்டே ஹேயாத்மந்யாத்மநைவாத்மபூதே
ஸர்வம் த்ருச்யம் பாத்யதே ப்ரஹ்மரூபே ।
யத்ர த்வஸ்யேத்யஸ்தி சாத்ர ப்ரமாணம்
ஸித்தாந்த: ஸ்யாதாகமாபாயிதைஷாம் ॥ 29

*தன் உடலுக்குள்ளேயே தன் ஆத்மா எனக் காட்சி தருவதே பிரும்மம் என சிரவண - மனன - நிதித்யாஸன - ப்ரத்யக்தர்சனங்களால் உணர்ந்ததும் இதுவரை வேற்றுப் பொருளாகக் காட்சி தந்ததனைத்தும் மறைய - இவனது பார்வையில் அனைத்தும் ஆத்மா தான் என்ற நுண்ணறிவு நிலைபெறுகிறது, நடுவில் தோன்றியதனைத்தும் நடுவிலேயே மறைந்துவிடுகிறது. இதனை உபநிஷத்வாக்கியம் திடப்படுத்துகிறது. (பிருஹதா. 4-5-15) (29)*

मायी यद्वन्मायया विश्वमेतत्
सृष्ट्वा तच्च स्वात्मनैवात्ति काले ।

अण्डे पिण्डे तद्वदेवाभिमानी
खेलत्यात्मा संविदेकस्वभावः ॥ ३०

மாயீ யத்வந்மாயயா விச்வமேதத்
ஸ்ருஷ்ட்வா தச்ச ஸ்வாத்மநைவாத்தி காலே ।
அண்டே பிண்டே தத்வதேவாபிமாநீ
கேலத்யாத்மா ஸம்விதேகஸ்வபாவ: ॥ 30

*இந்திர ஜாலவித்யைக்காரனிடம் ஜாலம் காட்டுகிற குச்சியைத் தவிர வேறு பொருளில்லை, அதைக் கொண்டு அறிவாளியான நம் முன் பல மாயக்காட்சிகளைக் காட்டி நம்பச்செய்கிறான். அது போல இந்த ஆத்மாவும் தானே தன்னைக்காட்டிலும் வேறுபட்டதாகத் தன்னிடமிருந்தே பலவற்றை வெளிப்படுத்தி (படைத்து) தான் எல்லாவற்றின் ஸமஷ்டியான. அண்டத்தில் தனித்தவனாகக் காட்சி தந்து விளையாடுகிறான். வியஷ்டி எனும் அந்த தனிப் பொருளும் அவனே. எல்லாவற்றின் கூட்டுப்பொருள் (ஸமஷ்டி) ஆனவனுமவனே. இந்த அவனது விளையாட்டே உலகின் செயலாக உலகின் காப்பாளனான ஈசனின் செயலாக வடிவெடுக்கிறது. அண்டமெனும் சராசரத் தொகையும் பிண்டமெனும் சிறிதும் பெரிதுமான தனித்தனி ஜடசேதனப் பொருளும் அவனே. இவ்விளையாட்டில் மிகவும் ஈடுபட்டவனாயினும் சேதன சக்தியைத் தன் இயல்பாகக் கொண்டு ஒருவன் மட்டுமாகவும் அவனைக் காணலாம். அவன் எதிலும் ஒட்டுவதில்லை. படைப்பிலும், காப்பிலும், லயத்திலும் தன் விருப்பப்படி தானே செயலாற்றுகிறான். அதற்கான உபகரணங்களை அவன் எதிர்பார்க்கவில்லை. (30)*

स्वप्नद्रष्टा यद्वदेवात्मदोषात्
स्वप्ने सर्वं मानमेयादि भिन्नम् ।
पश्यन्नास्ते तद्वदेवात्र साक्षी
तिष्ठत्यात्मा सच्चिदेकस्वभावः ॥ ३१

ஸ்வப்ந த்ரஷ்டா யத்வதேவாத்மதோஷாத்
ஸ்வப்நே ஸர்வம் மாநமேயாதி பிந்நம் ।

பச்யந்நாஸ்தே தத்வதேவாத்ர ஸாக்ஷீ
திஷ்டத்யாத்மா ஸச்சிதேகஸ்வபாவ: ॥ 31

*அது கனவு. அதில் கனவு காண்பவன் வீடுகட்டுகிறான். அதில் கட்டுபவனும் அவனே. கட்டப்படுகிற வீடும் அவனே. அதற்கு உதவுகிற கொத்தனார், தச்சன், செங்கல், மரம், உளி, கரணை, அளவுகோல், அளவு, சுண்ணாம்பு, சிமெண்டு, நீர், வெயில், காற்று, மழை, கட்டுமானம் என எல்லாம் அவனே. அவனைத்தவிர அங்கு வேறொன்று எதுவுமில்லை. அந்த கனவின் அனுபவ நேரத்தில் அனைத்தும் ஸத்தியமே. விழித்தெழுந்ததும் அத்தனையும் பொய்க் காட்சி. அதே போன்று பேரிருக்கையாகவும் (ஸத்) பேருணர்வாயும் (சித்) உள்ள ஆத்மாவே எல்லாவற்றையும் ஸாக்ஷியாகத் தூர நின்று காண்பவனே (கனவுக் காட்சிப் பொருள் போல்) காட்சிப் பொருளாகவும் முன் நிற்கிறான். அவன் தான் ஸ்ரீராமன். (31)*

दृश्यदूरगतमात्मनाऽच्युतं
भावयन्नखिलमात्मनि स्वके ।
दृश्यवर्गरहितः पुनर्भवे
भूतभाविकृतवर्जितः स्वयम् ॥ ३२

த்ருச்யதூரகதமாத்மநாऽச்யுதம்
பாவயந்நகிலமாத்மநி ஸ்வகே ।
த்ருச்யவர்கரஹித: புநர்பவே
பூதபாவிக்ருதவர்ஜித: ஸ்வயம் ॥ 32

*காட்சிப் பொருளை விட்டுத் தூர விலகி, ஆத்ம நிலையிலிருந்து எவ்வகையிலும் விலகாமல் எல்லாவற்றையும் தன்னுள் துலங்குகிற ஸாக்ஷியான ஆத்மாவாகத் தெளிந்த உள்ளத்தில் பாவனை செய்து, நான் தான் அந்த எதனைவிட்டும் வழுவாத ஆத்மா என்ற உறுதியுடன் முக்காலத்திலும் வினைத்தொடர்பற்றவனாக, வேறுபாட்டுணர்வற்றவனாக ஆவான் (32)*

परमपुरुषरूपे भूम्नि भूते परेशे
परिमितमिह किञ्चिद् भाति यन्नास्ति तत्र ।
इतिमतिरहमस्मि ब्रह्म साक्षाच्चिदात्मा
विगलितमदमानी राजते सार्वभौमः ॥ ३३

பரமபுருஷரூபே பூம்நி பூதே பரேசே
பரிமிதமிஹ கிஞ்சித் பாதி யந்நாஸ்தி தத்ர ।
இதிமதிரஹமஸ்மி ப்ரஹ்ம ஸாக்ஷாச்சிதாத்மா
விகலிதமதமாநீ ராஜதே ஸார்வபௌம: ॥ 33

*இது அது என்ற வேறுபாடற்ற நிலை பூமா. ஆறும், குட்டையும், வாய்க்காலும், மழை நீரும், சாக்கடையும் என்ற நீர் நிலைகள் அனைத்தும் தம் தம் நிலை இழந்து கடலாகியது போன்றது. நகரின் வெளி, (ஆகாசம்) ஊரின் வெளி, கிராமத்தின் வெளி, வீட்டின் வெளி, தோட்டத்தின் வெளி என்றிருந்த நிலையிழந்து பெரு வெளியாக - பிரகாசமாக உள்ள வெளி இது. அளவீடும் குறுக்கீடும் தனிச்சிறப்புமற்ற பரவெளி. அவ்வாறு காண்கிற பூம நிலையில், தான் ஒருவன் என்றில்லாமல் தானே அது என்ற எண்ணம், திடமான பாவனை ஸர்வம் கலு இதம் ப்ரும்ஹ, அஹம் ப்ரம்ஹாஸ்மி என்ற பாவனை (கலப்பில்லாமல்) ஏற்பட ஸார்வபௌமனாக எல்லாமான ஸ்வப்ரகாச சைதன்யமாகிறான். (33)*

समरसपरिपूर्णः स्वच्छचैतन्यसिन्धुः
शमदमशरदिन्दुज्योतिरानन्दपूरः ।
जलनिधिशयनश्रीस्तुष्टिगाम्भीर्यशीलः
स्वयमहमिति बुद्धिर्जायते नैव देही ॥ ३४

ஸமரஸபரிபூர்ண: ஸ்வச்சசைதந்யஸிந்து:
சமதமசரதிந்துஜ்யோதிராநந்தபூர: ।
ஜலநிதிசயந ஸ்ரீஸ்துஷ்டிகாம்பீர்யசீல:
ஸ்வயமஹமிதி புத்திர்ஜாயதே நைவ தேஹீ ॥ 34

*அணுவிலும் மஹத்திலும் ஸமமாக நிறைந்துள்ளவன், ஆசை, வேட்கை, வெறுப்பு என்ற மனக்குழப்பமற்று தெளிந்த*

*கடலானவன், புலனடக்கம் உள்ளத்தடக்கம் என்ற சரத் காலத்துச் சந்திரனின் இனிய ஒளி கொண்டவன், ஆனந்த வெள்ளக்காடானவன். ஆழ்கடலில் பள்ளி கொண்ட ஸ்ரீமன் நாராயணனுகத் திகழ்பவன். உள்ளத்து நிறைவும் ஆழமும் கொண்டவன், தான் ஒரு ஜீவன் என்றெண்ணுமல் தானே பரமாத்மா என உணர்ந்தவன். இவனே ஆத்மஜ்ஞானீ. (34)*

यत्र भाति सकलं जगच्चलं भित्तिचित्रमिव बुद्बुदोपमम् ।
सद्घनं सुखचिदात्मकं परं भूमरूपमहमस्मि तत्सदा ।। ३५

**யத்ர பாதி ஸகலம் ஜகச்சலம்**
**பித்திசித்ரமிவ புத்புதோபமம் ।**
**ஸத்கநம் ஸுகசிதாத்மகம் பரம்**
**பூமரூபமஹமஸ்மி தத்ஸதா ॥** 35

*அந்த பூமானந்த அனுபவம் பெற்றவன் காண்கிற உலகக்காட்சி இது. உலகமனைத்தும் நிலையற்றது, கணத்தில் மாறுபாடடையக் கூடியது. சுவற்றில் எழுதிய சித்திரம். சுவற்றின் நிலையை ஒட்டியசித்திரம். சுவர் பூமா. ஜீவன் சித்திரம், நீர் மேல் குமிழி, காற்றில் உடைபட்டுச் சிதறிக் காற்றுடனே நீருடனே, சேர்ந்து மறையும். அதற்குப் புறம்பான நானே பேரிருக்கை செறிந்தது. அழியாதது. ஆனந்தமும் பேருணர்வுமே வடிவானது. அந்த பூமாவே நான் .எப்போதும் அப்படியே (35)*

प्रत्यक्तत्वतमोमोहतापसन्तापकृद्रविः ।
उदेति खे स्वके नित्यं सदानन्दप्रकाशकः।। ३६

**ப்ரத்யக்தத்வதமோமோஹதாபஸந்தாபக்ருத்ரவி: ।**
**உதேதி கே ஸ்வகே நித்யம் ஸதாநந்தப்ரகாசக: ॥** 36

*வெளியுலகத் தொடற்பற்ற உள்நோக்கில் புலப்படுகிற ஆத்மதத்வத்தை அறிய இயலாதபடி மறைத்த அநாதியான மூலாஜ்ஞான இருளையும் மதிமயக்கத்தையும் துயரையும் வாட்டி அகற்றுகிற சூரியன். இவனைக்கண்டதும் அறியாமை இருள் தானே விலகும். இதற்கெனத் தனி முயற்சி தேவையில்லை. அதன் ஒளி தன் பேரிருக்கை நிலையையும் பேரானந்த நிலையையும்*

*வெளியே பிரகாசிக்கச் செய்யும். அது உதிக்கிற இடம் தன் உள்ளத்துப் பரவெளி. (36)*

स्वात्मगामि तमोजालमापीयायं विधुः सदा ।
कं वर्धयन् विवेकः स्वे काशते कोशदूरतः ॥ ३७

**ஸ்வாத்மகாமி தமோஜாலமாபீயாயம் விது: ஸதா ।**
**கம் வர்தயந் விவேக: ஸ்வே காசதே கோசதூரத: ॥ 37**

*அந்த அஜ்ஞான இருள் மறையுமிடமும் அந்த ஆத்மா துலங்கும் பரவெளியே. அங்கு ஆத்ம விவேகம் என்ற சந்திரன் அந்த இருளை விழுங்கி மறைவடையச் செய்கிறுன். அந்த சந்திரன் ஐந்து கோசங்களின் வெளியே, அவற்றிற்கு அப்பாற்பட்டுத் தன் வெளியில் துலங்குகிறுன் (37)*

संपूज्य सीतापतिमाविरासीत्
स्वानन्दसाम्राज्यमनामयं तत् ।
सर्वज्ञता शान्तिरसात्मनिष्ठे
त्यागो विरागः परमः पराचि ॥ ३८

**ஸம்பூஜ்ய ஸீதாபதிமாவிராஸீத்**
**ஸ்வாநந்தஸாம்ராஜ்யமநாமயம் தத் ।**
**ஸர்வஜ்ஞதா சாந்திரஸாத்மநிஷ்டே**
**த்யாகோ விராக: பரம: பராசி ॥ 38**

*பரந்தாமனை - பூமாவான அந்தஸீதாபதியை வழிபட்டுக் கொண்டிருந்த எனக்கு ஆத்மானந்தம் என்ற ஸாம்ராஜ்யம் கிட்டியது. எல்லாமறிந்த ஸர்வஜ்ஞ நிலை கிட்டியது. எல்லாமான பிரும்மமானதால் அந்தப் பேரறிவிற் கெட்டாததெதுவுமில்லை சாந்தி எனும் உள்ளத்து நிறைவாகிற பழச்சாற்றை அனுபவிக்கிற ஆத்மானுபவம் கிட்டியது. வெளிப்பொருள் நாட்டமகன்றது. பற்றின்மையின் எல்லை கிட்டியது.(தைத்திரீயோபநிஷத்ஸாரச்சுருக்கமான ஸ்ரீ ராமன் என்ற பரந்தாமனின் துதி இது. (38)*

# श्रीरामकर्णामृतम्

## "ஸ்ரீராமகர்ணாமிருதம்"

### प्रथम आश्वासः

### முதல் ஆச்வாஸம்

श्रीरामं त्रिजगद्गुरुं सुरवरं सीतामनोनायकं
श्यामाङ्गं शशिकोटिमञ्जुवदनं वक्षोल्लसत्कौस्तुभम् ।
सौम्यं सत्वगुणोत्तमं सुसरयूतीरे वसन्तं प्रभुं
त्रातारं सकलार्थसिद्धिसहितं वन्दे रघूणां पतिम् ।। १

ஸ்ரீராமம் த்ரிஜகத்குரும் ஸுரவரம் ஸீதாமநோநாயகம்
ச்யாமாங்கம் சசிகோடிமஞ்ஜுவதநம் வக்ஷோல்லஸத்கௌஸ்துபம் ।
ஸௌம்யம் ஸத்வகுணோத்தமம் ஸுஸரயூதீரே வஸந்தம் ப்ரபும்
த்ராதாரம் ஸகலார்தஸித்திஸஹிதம் வந்தே ரகூணாம் பதிம் ॥ 1

*ரகுவம்சத்தின் தலைவனான ஸ்ரீ ராமனை வந்தனம் செய்கிறேன். அவர் மூவுலகின் குரு. தேவர்களில் சிறந்தவர், ஸீதா தேவியின் மனத்திற்குப் பிடித்த நாதன், நீலமேனியர். கோடி சந்திரர்களைப் போன்று அழகிய முகம் உள்ளவர், மார்பில் கௌஸ்துபம் துலங்குபவர், இனிய தோற்றமுள்ளவர், ஸத்வகுணத்தால் சிறந்தவர், நல்ல ஸரயூ நதிக்கரையில் உள்ள பெருமான். அனைவரையும் காப்பவர். மனம் விரும்பியதனைத்தையும் நிறைவுறச் செய்பவர்.(1)*

श्रीराघवं दशरथात्मजमप्रमेयं
सीतापतिं रघुवरान्वयरत्नदीपम् ।
आजानुबाहुमरविन्ददलायताक्षं
रामं निशाचरविनाशकरं नमामि ।। २

ஸ்ரீராகவம் தசரதாத்மஜமப்ரமேயம்
ஸீதாபதிம் ரகுவராந்வயரத்நதீபம் ।
ஆஜாநுபாஹுமரவிந்ததலாயதாக்ஷம்
ராமம் நிசாசரவிநாசகரம் நமாமி ॥ 2

*ஸ்ரீ ராகவனை வணங்குகிறேன். தசரதரின் புதல்வர், மதிப்பீட்டிற்கு உட்படாதவர். ஸீதையின் கணவர். ரகு குலத்தின் ரத்தின விளக்கு. முழங்கால் வரை நீண்ட கைகள் உள்ளவர், தாமரை இதழ் போன்ற கண்கள் கொண்டவர், இரவில் அலைகிற அரக்கரை அழித்தவர். (2)*

श्रीरामं बलवैरिनीलचिकुरं स्मेराननं श्यामलं
कर्णान्तायतलोचनं सुरवरं कारुण्यपाथोनिधिम् ।
शोणाम्भोरुहपादपल्लवयुगं क्षोणीतनूजायुतं
राजत्कुण्डलगण्डभागयुगलं रामं सदाऽहं भजे ॥ ३

ஸ்ரீராமம் பலவைரிநீலசிகுரம் ஸ்மேராநநம் ச்யாமலம்
கர்ணாந்தாயதலோசநம் ஸுரவரம் காருண்யபாதோநிதிம் ।
சோணாம்போருஹபாதபல்லவயுகம் க்ஷோணீதநூஜாயுதம்
ராஜத்குண்டலகண்டபாகயுகலம் ராமம் ஸதாऽஹம் பஜே ॥ 3

*ராமனை எப்போதும் நான் நாடி நிற்கிறேன். இந்திர நீலரத்ன ஒளி கொண்ட கேசங்கள் கொண்டவர். புன்னகைக்கிற முகமுள்ளவர். நீலமேனியர், காதுகள் வரை நீண்ட கண்கள் உள்ளவர், தேவர்களில் உத்தமர். கருணைக்கடல், செந்தாமரை போன்ற மென்மை மிக்க திருவடி கொண்டவர், பூமியின் மகளுடன் கூடியவர், குண்டலங்கள் ஒளிர்கிற இரு கன்னங்கள் உள்ளவர். (3)*

श्रीरामं जगदेकवीरममलं सीतामनोरञ्जनं
कौसल्यावरनन्दनं रघुपतिं काकुत्स्थवंशोद्भवम् ।
लोकानामभिराममङ्गलधनव्यापारपारायणं
वन्देऽहं जनघोरपापनिकरध्वंसं विभुं राघवम् ॥ ४

**ஸ்ரீராமம் ஜகதேகவீரமமலம் ஸீதாமநோரஞ்ஜநம்**
**கௌஸல்யாவரநந்தநம் ரகுபதிம் காகுத்ஸ்தவம்சோத்பவம் ।**
**லோகாநாமபிராமமங்கலதநவ்யாபாரபாராயணம்**
**வந்தேऽஹம் ஜநகோரபாபநிகரத்வம்ஸம் விபும் ராகவம் ॥ 4**

*ரகு குலத்தைச் சார்ந்த ராமனை வணங்குகிறேன். உலகில் தனிச் சிறப்புற்றவர், அப்பழுக்கற்றவர், ஸீதையின் மனத்தைக் கவர்ந்தவர், கௌஸல்யையின் சிறந்த புதல்வர், ரகுநாதர், காகுத்ஸ்த வம்சத்திலுதித்தவர், உலகம் நாடுகிற மங்களப் பொருளை அளிப்பதில் முனைந்தவர், மக்களின் கோரத் தீவினைக் கூட்டத்தை அழிப்பவர், சிறந்த பெருமான். (4)*

श्रीरामं जगदीश्वरं जनकजाजानिं जनानन्दनं
जन्तूनां जनकं जनार्तिहरणं लोकेश्वरं शाश्वतम् ।
जाबालादिमुनीश्वरैः परिवृतं जाज्वल्यमानं सदा
जङ्घालं जमदग्निसूनुहरणं जातानुकम्पं भजे ॥ ५

**ஸ்ரீராமம் ஜகதீச்வரம் ஜநகஜாஜாநிம் ஜநாநந்தநம்**
**ஜந்தூநாம் ஜநகம் ஜநார்திஹரணம் லோகேச்வரம் சாச்வதம் ।**
**ஜாபாலாதிமுநீச்வரை: பரிவ்ருதம் ஜாஜ்வல்யமாநம் ஸதா**
**ஜங்காலம் ஜமதக்நிஸூநுஹரணம் ஜாதாநுகம்பம் பஜே ॥ 5**

*ஸ்ரீ ராமன் பரிவு மிக்கவர். அவரை அண்டி நிற்கிறேன். உலகின் மேலாளர், ஜனகரின் புதல்வியின் கணவர், மக்களை மகிழ்விப்பவர், உயிரினத்தின் தந்தை, மக்களின் துயர் நீக்குபவர், உலகின் மேலாளர், நிலைத்திருப்பவர், ஜாபாலி முதலிய சிறந்த முனிவர்களால் சூழப் பெற்றவர், எப்போதும் ஒளிர்பவர், நீண்ட கணுக்கால் உள்ளவர், ஜமதக்னியின் புதல்வரான பரசுராமரை வென்றவர். (5)*

श्रीरामो रघुनायको रघुवरो राजीवनेत्राश्रितो
राजेन्द्रो रघुपुङ्गवो रघुकुलोत्तंसो रघूणां पतिः ।
रामो राक्षसनाशनोऽमितबलो राकेन्दुपूर्णाननो
राजत्किङ्किणिकङ्कणाङ्कितकरो रामस्सदा पातु नः ॥ ६

**ஸ்ரீராமோ ரகுநாயகோ ரகுவரோ ராஜீவநேத்ராஞ்சிதோ**
**ராஜேந்த்ரோ ரகுபுங்கவோ ரகுகுலோத்தம்ஸோ ரகூணாம் பதி: ।**
**ராமோ ராக்ஷஸநாசநோऽமிதபலோ ராகேந்துபூர்ணாநநோ**
**ராஜத்கிங்கிணிகங்கணாங்கிதகரோ ராமஸ்ஸதா பாது ந: ॥ 6**

*ஸ்ரீ ராமன் என்னை எப்போதும் காக்கட்டும். ரகு குலத்தின் நாயகர். அதில் சிறந்தவர், தாமரைக் கண்ணர், அரசர்களில் மேலானவர், ரகு குலத்தின் காளை போன்றவர், ரகு குலத்தின் தலையணி, ரகுக்களின் நாதர், ராக்ஷஸர்களை அழித்தவர், வலிவுமிக்கவர், பூர்ண சந்திரன் போன்ற முகம் கொண்டவர், கிங்கிணி ஒலி கொண்ட கங்கணம் பூண்டவர்.(6)*

श्रीरामचन्द्र करुणाकर राघवेन्द्र
राजेन्द्रचन्द्र रघुवंशसमुद्रचन्द्र ।
सुग्रीवनेत्रयुगलोत्पलपूर्णचन्द्र
सीतामनःकुमुदचन्द्र नमो नमस्ते ॥ ७

**ஸ்ரீராமசந்த்ர கருணாகர ராகவேந்த்ர**
**ராஜேந்த்ரசந்த்ர ரகுவம்சஸமுத்ரசந்த்ர ।**
**ஸுக்ரீவநேத்ரயுகலோத்பலபூர்ணசந்த்ர**
**ஸீதாமந: குமுதசந்த்ர நமோ நமஸ்தே ॥ 7**

*சந்திரனைப் போன்ற ராம! கருணை புரிபவரே! ரகு குலத்தவரின் தலைவரே! அரசர்களில் சிறந்தவரில் சிறந்தவரே! ரகு வம்சமெனும் கடலில் தோன்றுகிற சந்திரனே! ஸுக்ரீவனின் இருகண்களாகிய அல்லிப் பூவை மலர்விக்கிற சந்திரனே! ஸீதையின் மனமாகிய ஆம்பலை மலர்விக்கிற சந்திரனே! வணக்கம், உமக்கு வணக்கம். (7)*

श्रीरामं करुणाकरं गुणनिधिं सीतापतिं शाश्वतं
पारावारगभीरमब्जनयनं प्रावृड् (भ्राजद्)घनश्यामलम् ।
वीरश्रेष्ठमनामयं विजयिनं विश्वप्रकाशात्मकं
घोरारिप्रकराधिकप्रहरणं कोदण्डरामं भजे ॥ ८

**ஸ்ரீராமம் கருணாகரம் குணநிதிம் ஸீதாபதிம் சாச்வதம்**
**பாராவாரகபீரமப்ஜநயநம் ப்ராவ்ருட் (ப்ராஜத்) கநச்யாமலம் ।**
**வீரச்ரேஷ்டமநாமயம் விஜயிநம் விச்வப்ரகாசாத்மகம்**
**கோராரிப்ரகராதிகப்ரஹரணம் கோதண்டராமம் பஜே ॥ 8**

*கோதண்டத்தால் அழகிய ராமனை வணங்குகிறேன். கருணை புரிபவர், குணங்களின் இருப்பிடம், ஸீதையின் கணவர், எப்போதும் நிலைத்தவர். கடல் போன்று ஆழம் உணர இயலாதவர், தாமரைக் கண்ணர், கார்மேக மேனி வண்ணம் கொண்டவர், வீரர்களில் மிகச் சிறந்தவர், குறையற்றவர், வெற்றி வீரர், உலகை ஒளிரச் செய்பவர், கோரர்களான எதிரிக் கூட்டத்தை அடித்து மாய்ப்பவர்.(8)*

श्रीरामचन्द्रेति सलक्ष्मणेति नीलोत्पलश्यामलकोमलेति ।
आक्रोशतामस्त्वधुनैव जिह्वा सीतापते राघव राघवेति ॥ ९

**ஸ்ரீராமசந்த்ரேதி ஸலக்ஷ்மணேதி நீலோத்பலச்யாமலகோமலேதி ।**
**ஆக்ரோசதாமஸ்த்வதுநைவ ஜிஹ்வா ஸீதாபதே ராகவ ராகவேதி ॥ 9**

*ஸ்ரீ ராம சந்திர! லக்ஷ்மணனுடன் கூடியவரே! நீல அல்லி போன்ற மேனி வண்ணமும் மென்மையும் கொண்டவரே! ஸீதையின் கணவரே! ராகவ! ராகவ! என என் நாக்கு உரத்தகுரலில் கூப்பிடட்டும். (9)*

श्रीरामचन्द्रे रमतां मनो मे रमाङ्गवामे विपदां विरामे ।
जितारिरामे प्रणतारिरामे गुणाभिरामे भुवनैकरामे ॥ १०

**ஸ்ரீராமசந்த்ரே ரமதாம் மநோ மே ரமாங்கவாமே விபதாம் விராமே ।**
**ஜிதாரிராமே ப்ரணதாரிராமே குணாபிராமே புவநைகராமே ॥ 11**

*ஸ்ரீ ராம சந்திரனிடம் என் மனம் இன்பம் துய்க்கட்டும்! அவர் லக்ஷ்மியை (ஸீதையை) இடப்புறத்தில் கொண்டவர். நெருக்கடிகளைத் தீர்ப்பவர், எதிரிகளை வென்று மகிழ்விப்பவர், தன் திருவடிவணங்கி நிற்கிற எதிரியை மகிழ்விப்பவர்.குணங்களால் கவர்பவர். உலகைத் தனியே கவர்பவர். (10)*

श्रीरामचन्द्र रघुपुङ्गव राजवर्य
राजेन्द्रराज सुरनायक राघवेश ।
राजाधिराज रघुनन्दन रामभद्र
दासोऽस्म्यहं च भवतः शरणागतोऽस्मि ॥ ११

ஸ்ரீராமசந்த்ர ரகுபுங்கவ ராஜவர்ய
ராஜேந்த்ரராஜ ஸுரநாயக ராகவேச ।
ராஜாதிராஜ ரகுநந்தந ராமபத்ர
தாஸோऽஸ்ம்யஹம் ச பவத: சரணாகதோऽஸ்மி ॥ 11

*சந்திரனைப் போன்ற ஸ்ரீ ராம! ரகுக்களில் சிறந்தவரே! அரசர்களின் முன் நிற்பவரே! பேரசருக்கும் அரசே! தேவர்த் தலைவரே! ராகவ! ஈச! சக்ரவர்த்தியே! ரகு குலத்தவரை மகிழ்விப்பவரே! மங்களமான ராம! நான் உம்மைச் சரணடைந்துள்ளேன். தாஸனாக உள்ளேன்.(11)*

श्रीरामं सरसीरुहाक्षममलं दूर्वाङ्कुरश्यामलं
विद्युत्कोटिनिभप्रभाम्बरधरं वीरासनाधिष्ठितम् ।
वामाङ्कोपरि संस्थितां जनकजामालिङ्ग्य तां बाहुना
तत्वं चापरपाणिना मुनिगणानाज्ञापयन्तं भजे ॥ १२

ஸ்ரீராமம் ஸரஸீருஹாக்ஷமமலம் தூர்வாங்குரச்யாமலம்
வித்யுத்கோடிநிபப்ரபாம்பரதரம் வீராஸநாதிஷ்டிதம் ।
வாமாங்கோபரி ஸம்ஸ்திதாம் ஜநகஜாமாலிங்க்ய தாம் பாஹுநா
தத்வம் சாபரபாணிநா முநிகணாநாஜ்ஞாபயந்தம் பஜே ॥ 12

*தாமரைக் கண்ணரும் அப்பழுக்கற்றவரும் அருகம்புல் வண்ணம் கொண்டவரும் கோடி மின்னற் கொடிகளின் ஒளி கொண்ட ஆடையினரும், வீராஸனத்தில் அமர்ந்தவரும் தன் இடது மடியில் அமர்ந்துள்ள ஸீதையைக் கையால் அணைத்திருப்பவரும் மற்றொரு கையால் முனிவர்களுக்குத் தத்துவ விளக்கம் தருபவருமான ராமனைச் சரணடைகிறேன். (12)*

श्रीरामः सकलेश्वरो मम पिता माता च सीता मम
भ्राताऽजश्च सखा प्रभञ्जनसुतः पत्नी विरक्तिः प्रिया ।
विश्वामित्रविभीषणप्रभृतयो मित्राणि बोधः सुतो
भक्तिः श्रीहरिसङ्गता रतिसुखं वैकुण्ठमस्मत्पदम् ॥ १३

**ஸ்ரீராம: ஸகலேச்வரோ மம பிதா மாதா ச ஸீதா மம**
**ப்ராதாऽஜச்ச ஸகா ப்ரபஞ்ஜநஸுத: பத்நீ விரக்தி: ப்ரியா ।**
**விச்வாமித்ரவிபீஷணப்ரப்ருதயோ மித்ராணி போத: ஸுதோ**
**பக்தி: ஸ்ரீஹரிஸங்கதா ரதிஸுகம் வைகுண்டமஸ்மத்பதம் ॥ 13**

*ஸ்ரீ ராமன் உலகனைத்தின் ஈசன், என் தந்தை. ஸீதை என் தாய். பிரும்மா என் உடன் பிறந்தவர். ஹனுமான் என் நண்பர். விரக்தி (பற்றின்மை) யே என் இனியாள். விச்வாமித்ரர், விபீஷணன் முதலானோர் நண்பர்கள். ஜ்ஞானமே புதல்வன். ஹரியிடம் வைத்த பக்தி தான் இன்பம். வைகுண்டமே நாமடைகிற இடம்.(13)*

श्रीरामामलपुण्डरीकनयन श्रीराम सीतापते
गोविन्दाच्युत नन्दनन्दन मुकुन्दानन्द दामोदर ।
विष्णो राघव वासुदेव नृहरे देवौघचूडामणे
संसारार्णवकर्णधारक हरे कृष्णाय तुभ्यं नमः ॥ १४

**ஸ்ரீராமாமலபுண்டரீகநயந ஸ்ரீராம ஸீதாபதே**
**கோவிந்தாச்யுத நந்தநந்தந முகுந்தாநந்த தாமோதர ।**
**விஷ்ணோ ராகவ வாஸுதேவ ந்ருஹரே தேவௌகசூடாமணே**
**ஸம்ஸாரார்ணவகர்ணதாரக ஹரே க்ருஷ்ணாய துப்யம் நம: ॥ 14**

*ஸ்ரீ ராம! தூய தாமரைக் கண்ணா! ஸீதையின் கணவரே! கோவிந்த! அச்யுத! நந்தனின் புதல்வரே! முகுந்த! ஆனந்த! தாமோதர! விஷ்ணோ! ராகவ! வாஸுதேவ! நரஸிம்ஹ! தேவர் கூட்டத்தின் தலையணியே! ஸம்ஸாரக் கடலைக் கடக்கச் செய்கிற மாலுமியே! ஹரியே! கிருஷ்ண! உமக்கு வணக்கம். 14*

रामं लक्ष्मणपूर्वजं रघुवरं सीतापतिं सुन्दरं
काकुत्स्थं करुणाकरं गुणनिधिं विप्रप्रियं धार्मिकम्।
राजत्कुण्डलमण्डिताननरुचिं रात्रिंचरध्वंसिनं
शम्पाकोटिसमानकान्तिविलसन्मायामृगघ्नं भजे ॥ १५

ராமம் லக்ஷ்மணபூர்வஜம் ரகுவரம் ஸீதாபதிம் ஸுந்தரம்
காகுத்ஸ்தம் கருணாகரம் குணநிதிம் விப்ரப்ரியம் தார்மிகம் ।
ராஜத்குண்டலமண்டிதாநநருசிம் ராத்ரிம்சரத்வம்ஸிநம்
சம்பாகோடிஸமாநகாந்திவிலஸந்மாயாம்ருகக்நம் பஜே ॥ 15

*லக்ஷ்மணனின் அண்ணனான ராமன், ரகுக்களில் சிறந்தவர், ஸீதையின் கணவர், அழகர், காகுத்த வம்சத்தினர், கருணை புரிபவர், குணங்களின் சேமிப்பிடம், அந்தணரிடம் அன்பு கொண்டவர், அறவழி நடப்பவர், அழகிய குண்டலங்களால் ஒளிர்கிற முகம் உள்ளவர், அரக்கரை அழித்தவர், கோடி மின்னலொளியுடன் அலைந்த மாயமானை அழித்தவர். இவரை வழிபடுகிறேன். (15)*

रामं रत्नकिरीटकुण्डलधरं केयूरहारान्वितं
सीतालङ्कृत वामभागममलं सिंहासनस्थं प्रभुम्।
सुग्रीवादिसमस्तवानरनुतं संसेव्यमानं सदा
विश्वामित्रपराशरादिमुनिभिः संस्तूयमानं भजे ॥ १६

ராமம் ரத்நகிரீடகுண்டலதரம் கேயூரஹாராந்விதம்
ஸீதாலங்க்ருத வாமபாகமமலம் ஸிம்ஹாஸநஸ்தம் ப்ரபும் ।
ஸுக்ரீவாதிஸமஸ்தவாநரநுதம் ஸம்ஸேவ்யமாநம் ஸதா
விச்வாமித்ரபராசராதிமுநிபி: ஸம்ஸ்தூயமாநம் பஜே ॥ 16

*ரத்தின கிரிடம், குண்டலம், கேயூரம், ஹாரம் அணிந்தவர், ஸீதையால் இடது மடியை அழகுபடுத்திக் கொண்டவர், ஸிம்ஹாஸனத்தில் அமர்ந்த பிரபு, ஸுக்ரீவன் முதலிய வானரர் அனைவராலும் வழிபட்டுத் துதிக்கப் பெற்றவர், விச்வாமித்ரர் பராசரர் முதலான மஹரிஷிகளால் துதிக்கப் பெறுபவர், இவரை வழிபடுகிறேன். (16)*

रामः सीतासमेतो निवसतु हृदये सानुजं राममीडे
रामेण क्षीणपापस्त्रिविधमपि कृतं कर्म रामाय दद्याम् ।
रामादन्यं न जाने न हि किमपि महारामनाम्नः समानं
रामे पश्यामि विश्वं भुवनमनुदिनं पाहि मां वीरराम ॥ १७

ராம: ஸீதாஸமேதோ நிவஸது ஹ்ருதயே ஸாநுஜம் ராமமீடே
ராமேண க்ஷீணபாபஸ்த்ரிவிதமபி க்ருதம் கர்ம ராமாய தத்யாம் ।
ராமாதந்யம் ந ஜாநே ந ஹி கிமபி மஹாராமநாம்ந: ஸமாநம்
ராமே பச்யாமி விச்வம் புவநமநுதிநம் பாஹி மாம் வீரராம ॥ 17

*ஸீதையுடன் ராமன் என் உள்ளத்தில் வசிக்கட்டும். தம்பியான லக்ஷ்மணனுடன் கூடிய ராமனுக்குப் பணிவிடை புரிவேன். ராமனால் தீவினைகள் அழிந்தன. மனம் வாக்கு மற்றும் உடல் செய்கிற பணிகளை ராமனுக்கு அளிப்பேன். ராமனைத் தவிர வேறொருவரை அறியேன். பெரியோரான ராமனின் பெயருக்கு ஈடான எதுவுமில்லை. ராமனிடம் உலகையே காண்கிறேன். வீர ராம! என்னைத் தினமும் காப்பாய். (17)*

रामं राजशिखामणिं रघुपतिं देवारिदर्पापहं
लोकानां हितकारिणं गुणनिधिं कारुण्यपुण्योदयम् ।
मुक्ताविद्रुमरत्नशोभिततनुं सौन्दर्यहस्ताम्बुजं
कौसल्यातनयं भजामि सततं श्रीजानकीनायकम् ॥ १८

ராமம் ராஜசிகாமணிம் ரகுபதிம் தேவாரிதர்பாபஹம்
லோகாநாம் ஹிதகாரிணம் குணநிதிம் காருண்யபுண்யோதயம் ।
முக்தாவித்ருமரத்நசோபிததநும் ஸௌந்தர்யஹஸ்தாம்புஜம்
கௌஸல்யாதநயம் பஜாமி ஸததம் ஸ்ரீஜாநகீநாயகம் ॥ 18

*ராமன் அரசர்களுள் சிகாமணி, ரகு குலத் தலைவர், அரக்கரின் கொழுப்பை அடக்கியவர், உலகுக்கு இதமளிப்பவர், குணங்களின் இருப்பிடம், கருணையின் புனிதமான வெளியாகுமிடம், முத்து பவழம் முதலிய ரத்னங்களால் ஒளிர்கிற மேனியர், அழகு மிக்க தாமரை போன்ற கைகள் உள்ளவர் கௌஸல்யையின் புதல்வர், ஜானகியின் மணாளரான இவரை எப்போதும் வழிபடுகிறேன். (18)*

रामं वीरासनस्थं हृदयगतकरोदञ्चितज्ञानमुद्रं
जानुन्यासक्तहस्तं क्षितिवरतनयाभूषितं वामभागे ।
षट्कोणे व्याहरन्तं पवनसुतयुतं मानसे मानयन्तं
सुग्रीवे सेव्यमाने दृढशरधनुषा दक्षिणे लक्ष्मणेन ॥ १९

ராமம் வீராஸநஸ்தம் ஹ்ருதயகதகரோதஞ்சிதஜ்ஞாநமுத்ரம்
ஜாநுந்யாஸக்தஹஸ்தம் க்ஷிதிவரதநயாபூஷிதம் வாமபாகே ।
ஷட்கோணே வ்யாஹரந்தம் பவநஸுதயுதம் மாநஸே மாநயந்தம்
ஸுக்ரீவே ஸேவ்யமாநே த்ருடசரதநுஷா தக்ஷிணே லக்ஷ்மணேந ॥

*வீராஸனத்தில் அமர்ந்த ராமன் மார்பளவில் உயர்த்திய கையில் ஜ்ஞான முத்திரையைக் காட்டுபவர். மற்றொருகையை முழங்கால் மீது வைத்தவர், இடது புறத்தில் ஸீதையால் அழகானவர், ஆறு கோணங்களுள்ள மனத்தினுள் ஹனுமானுடன் பேசி அவரை மதிப்பவர், ஸுக்ரீவன் பணிவிடைபுரிய திடமாக வில்லேந்திய லக்ஷ்மணனை வலப்புறத்தில் கொண்ட ராமனை வணங்குகிறேன் 19*

रामं सौमित्रिमित्रं रघुपतिममलं रामचन्द्रं रमेशं
रम्यं श्रीराघवेशं शुभललितमुखं शुद्धसत्वं सुवीरम् ।
सीतासौन्दर्यपात्रं सुरमुनिविनुतं नीलमिन्दीवराभं
वन्दे वन्दारुपालं रजनिचरहरं रम्यकोदण्डरामम् ॥ २०

ராமம் ஸௌமித்ரிமித்ரம் ரகுபதிமமலம் ராமசந்த்ரம் ரமேசம்
ரம்யம் ஸ்ரீராகவேசம் சுபலலிதமுகம் சுத்தஸத்வம் ஸுவீரம் ।
ஸீதாஸௌந்த்ர்யபாத்ரம் ஸுரமுநிவிநுதம் நீலமிந்தீவராபம்
வந்தே வந்தாருபாலம் ரஜநிசரஹரம் ரம்யகோதண்டராமம் ॥ 20

*லக்ஷ்மணனின் அன்பர், ரகு நாதன், தூயவர், லக்ஷ்மியின் மணாளரே ராம சந்திரனவர், அழகர், ரகு குலத்தில் தோன்றிய ஈசன், மங்களமான அழகிய முகம் கொண்டவர், தூய ஸத்வகுண மிக்கவர், நல்லவீரன், ஸீதையின் அழகிற் கேற்றவர், தேவர் மற்றும் முனிவரால் துதிக்கப் பெற்றவர், நீல அல்லி போன்ற ஒளியுள்ளவர், வணங்கி நிற்பவரைக் காப்பவர், அரக்கர்களை*

அழிப்பவர், அழகிய வில்லால் அழகியவர். இவரை வணங்குகிறேன்.( 20)

राम चन्दनशीतलं क्षितिसुतामोहाकरं श्रीकरं
वैदेहीनयनारविन्दमिहिरं सम्पूर्णचन्द्राननम् ।
राजानं करुणासमेतनयनं सीतामनःस्यन्दनं
सीतादर्पणचारुगण्डललितं वन्दे सदा राघवम् ॥ २१

ராமம் சந்தநசீதலம் க்ஷிதிஸுதாமோஹாகரம் ஸ்ரீகரம்
வைதேஹீநயநாரவிந்தமிஹிரம் ஸம்பூர்ணசந்த்ராநநம் ।
ராஜாநம் கருணாஸமேதநயநம் ஸீதாமந: ஸ்யந்தநம்
ஸீதாதர்பணசாருகண்டலலிதம் வந்தே ஸதா ராகவம் ॥ 21

சந்தனம் போன்று குளிர்ந்தவர், பூமியின் மகளான ஸீதையின் மனத்தை மயக்கியவர், செல்வமளிப்பவர், ஸீதையின் முகத்தாமரையை மலர்விப்பவர், பூர்ண சந்திரன் போன்ற முகம் கொண்டவர், கருணை ததும்புகிற கண்களுள்ள அரசன், ஸீதையின் மனத்தை நெகிழ்விப்பவர், ஸீதையின் கண்ணாடி போன்ற கன்னத்தில் பிரதிபலிப்பவர், அந்த ராகவனை எப்போதும் வணங்குகிறேன். 21

रामं श्यामाभिरामं रविशशिनयनं कोटिसूर्यप्रकाशं
दिव्यं दिव्यास्त्रपाणिं शरमुखशरधिं चारुकोदण्डहस्तम् ।
कालं कालाग्निरुद्रं रिपुकुलदहनं विघ्नविच्छेद दक्षं
भीमं भीमाट्टहासं सकलभयहरं रामचन्द्रं भजेऽहम् ॥ २२

ராமம் ச்யாமாபிராமம் ரவிசசிநயநம் கோடிஸூர்யப்ரகாசம்
திவ்யம் திவ்யாஸ்த்ரபாணிம் சரமுகசரதிம் சாருகோதண்டஹஸ்தம் ।
காலம் காலாக்நிருத்ரம் ரிபுகுலதஹநம் விக்நவிச்சேத தக்ஷம்
பீமம் பீமாட்டஹாஸம் ஸகலபயஹரம் ராமசந்த்ரம் பஜேऽஹம் ॥ 22

கார்மேக வண்ணத்தால் அழகியவர், ஸூரியனையும் சந்திரனையும் கண்களாகக் கொண்டவர், கோடி சூர்ய ஒளி கொண்டவர். தெய்வத் தன்மை கொண்டவர், தெய்வத் தன்மை

*கொண்ட அஸ்திரங்களைக் கையில் கொண்டவர், அம்புகள் நிறைந்த அம்புறாத் தூணி கொண்டவர், அழகிய வில்லேந்தியவர், விரட்டுபவர், பிரளயகால அக்னி போல் பயம் தருபவர். எதிரிகளை அழிப்பவர், இடையூறுகளை நீக்கவல்லவர், பயம் தருபவர், பயமுறுத்துகிற அட்டஹாஸச் சிரிப்பு கொண்டவர், பய மனைத்தையும் நீக்குபவர், அந்த ராம சந்திரனை நான் வழிபடுகிறேன். (22)*

रामचन्द्र चरितं कथामृतं लक्ष्मणाग्रज गुणानुकीर्तनम् ।
राघवेश तव पादसेवनं सम्भवन्तु मम जन्मजन्मनि ।। २३

**ராமசந்த்ர சரிதம் கதாம்ருதம் லக்ஷ்மணாக்ரஜ குணாநுகீர்தநம் ।**
**ராகவேச தவ பாதஸேவநம் ஸம்பவந்து மம ஜந்மஜந்மநி ॥ 23**

*ராகவ! ஈச! ராமசந்திர! லக்ஷ்மணனின் அண்ணனே! அமுதமான கதைக் கேட்பது, உம்புகழ் பாடுவது உம் திருவடி வழிபாடு இவை எனக்கு ஒவ்வொரு பிறவியிலும் கிட்டட்டும். (23)*

रामो मत्कुलदैवतं सकरुणं रामं भजे सादरं
रामेणाखिलघोरपापरहितो रामाय तस्मै नमः ।
रामान्नास्ति जगत्त्रयैकसुलभो रामस्य दासोऽस्म्यहं
रामे प्रीतिरतीव मे कुलगुरो श्रीराम रक्षस्व माम् ।। २४

**ராமோ மத்குலதைவதம் ஸகருணம் ராமம் பஜே ஸாதரம்**
**ராமேணாகிலகோரபாபரஹிதோ ராமாய தஸ்மை நம: ।**
**ராமாந்நாஸ்தி ஜகத்த்ரயைகஸுலபோ ராமஸ்ய தாஸோऽஸ்ம்யஹம்**
**ராமே ப்ரீதிரதீவ மே குலகுரோ ஸ்ரீராம ரக்ஷஸ்வ மாம் ॥ 24**

*ராமன் என் குல தெய்வம். பரிவுமிக்க ராமனை அக்கரையுடன் வழிபடுகிறேன். ராமனால் கோரமான தீவினைகள் விலகின. அந்த ராமனுக்கு வந்தனம். ராமனை விட மூவுலகிலும் எளிதில் கிடைப்பவர் வேறெவருமில்லை. நான் ராமனின் தாஸன். எனக்கு ராமனிடம் பிரியம் அதிகம். ஸ்ரீ ராம! என்னைக் காப்பீர். (24)*

श्रीरामचन्द्र तव कीर्तिसुरद्रुमस्य
तारागणः सुमनसः फलमिन्दुबिम्बम् ।
मूलं महाफणिपदं गगनं च मध्यं
सर्वा दिशो भुवनमण्डलमालवालम् ॥ २५

ஸ்ரீராமசந்த்ர தவ கீர்திஸுரத்ருமஸ்ய
தாராகண: ஸுமநஸ: பலமிந்துபிம்பம் ।
மூலம் மஹாபணிபதம் ககநம் ச மத்யம்
ஸர்வா திசோ புவநமண்டலமாலவாலம் ॥ 25

*ஸ்ரீ ராம சந்திர! உம் புகழெனும் கற்பக மரத்திற்கு நக்ஷத்திரங்களே பூக்கள். சந்திர பிம்பமே பழம். ஆதிசேஷனிருப்பிடமே வேர். வானமே நடுப்பகுதி. எல்லா திக்குகளும் உலகனைத்தும் பாத்தி. 25*

वैदेहीं मुदिताभिजातपुलकां गाढं समालिङ्गयन्
वामेन स्तनचूचुकं पुलकितं वामं करेण स्पृशन् ।
तत्वं दक्षिणपाणिना कलितया चिन्मुद्रया बोधयन्
रामो मारुतसेवितः स्मरतु मां साम्राज्यसिंहासने ॥ २६

வைதேஹீம் முதிதாபிஜாதபுலகாம் காடம் ஸமாலிங்கயந்
வாமேந ஸ்தநசூசுகம் புலகிதம் வாமம் கரேண ஸ்ப்ருசந் ।
தத்வம் தக்ஷிணபாணிநா கலிதயா சிந்முத்ரயா போதயந்
ராமோ மாருதஸேவித: ஸ்மரது மாம் ஸாம்ராஜ்யஸிம்ஹாஸநே ॥ 26

*மகிழ்ச்சியால் புல்லரிப்பு கொண்ட ஸீதையை இறுக அணைத்துள்ளவராக, இடக் கரத்தால் புல்லரித்த வலது மார்பகத்தைத் தொடுபவராக வலது கையில் சின்முத்திரையுடன் தத்வ விளக்கம் தருபவராக ஹனுமான் வழிபட, ஸாம்ராஜ்ய ஸிம்ஹாஸனத்தில் அமர்ந்த ராமன் என்னை நினைக்கட்டும். 26*

वामाङ्कस्थितजानकीं परिल(र)सत्कोदण्डदण्डं करे
चक्रं चोर्ध्वकरेण बाहुयुगले शङ्खं शरं दक्षिणे ।
बिभ्राणं जलजातपत्रनयनं भद्राद्रिमूर्ध्नि स्थितं
केयूरादिविभूषितं रघुपतिं रामं भजे श्यामलम् ॥ २७

வாமாங்கஸ்த்திதஜாநகீம் பரில(ர)ஸத்கோதண்டதண்டம் கரே
சக்ரம் சோர்த்வகரேண பாஹு¬யுகலே சங்கம் சரம் தக்ஷிணே ।
பிப்ராணம் ஜலஜாதபத்ரநயநம் பத்ராத்ரிமூர்த்நி ஸ்திதம்
கேயூராதிவிபூஷிதம் ரகுபதிம் ராமம் பஜே ச்யாமலம் ॥ 27

*இடது மடியில் ஜானகி, அழகிய வில் இடது கையில், சக்கரமும் சங்கும் மேலிருகைகளில், அம்பு வலது கையில், இவ்வாறு பத்திராசலமலை மீது அமர்ந்தவர். கேயூரம் முதலியவற்றை அணிந்தவர், கார்மேக வண்ணரான ரகுபதியான ராமனை நான் வழிபடுகிறேன். (27)*

वामे भूमिसुता पुरस्तु हनुमान्पश्चात्सुमित्रासुतः
शत्रुघ्नो भरतश्च पार्श्वदलयोर्वाय्वादिकोणेष्वपि ।
सुग्रीवश्च विभीषणश्च युवराट् तारासुतो जाम्बवान्
मध्ये नीलसरोजकोमलरुचिं रामं भजे श्यामलम् ॥ २८

வாமே பூமிஸு¬தா புரஸ்து ஹநுமாந் பச்சாத் ஸு¬மித்ராஸு¬த:
சத்ருக்நோ பரதச்ச பார்ச்வதலயோர்வாய்வாதிகோணேஷ்வபி ।
ஸு¬க்ரீவச்ச விபீஷணச்ச யுவராட் தாராஸு¬தோ ஜாம்பவாந்
மத்யே நீலஸரோஜகோமலருசிம் ராமம் பஜே ச்யாமலம் ॥ 28

*இடது மடியில் ஸீதை, முன் ஹனுமான், பின் லக்ஷ்மணன், சத்துருக்னனும் பரதனும் இருபுறங்களில், வடமேற்கு முதலிய மூலைகளில் ஸு¬க்ரீவன், விபீஷணன், யுவராஜனான அங்கதன் மற்றும் ஜாம்பவான். நடுவில் நீல அல்லி ஒளியுடன் மேக வண்ணத்துடனுள்ள ராமனை ஸேவிக்கிறேன். (28)*

वैदेहीसहितं सुरद्रुमतले हैमे महामण्डपे
मध्ये पुष्पकमासने मणिमये वीरासने सुस्थितम् ।
अग्रे वाचयति प्रभञ्जनसुते तत्त्वं मुनिभ्यः परं
व्याख्यान्तं भरतादिभिः परिवृतं रामं भजे श्यामलम् ॥२९

வைதேஹீஸஹிதம் ஸு¬ரத்ருமதலே ஹைமே மஹாமண்டபே
மத்யே புஷ்பகமாஸநே மணிமயே வீராஸநே ஸு¬ஸ்திதம் ।
அக்ரே வாசயதி ப்ரபஞ்ஜநஸு¬தே தத்த்வம் முநிப்ய: பரம்
வ்யாக்யாந்தம் பரதாதிபி: பரிவ்ருதம் ராமம் பஜே ச்யாமலம் ॥29

*கற்பக மரத்தடியில் தங்க மண்டபத்தில் புஷ்பகத்தின் நடுவே ரத்தினங்களாலான வீராஸனத்தின் மீது ஸீதையுடன் அமர்ந்திருப்பவர், முன் ஹனுமான் அமர்ந்திருக்க முனிவருக்குத் தத்துவ விளக்கம் தருபவர். பரதர் முதலானவர் சூழ உள்ள சியாமளனை ராமனை ஸேவிக்கிறேன் (29)*

वैदेहीं परिरभ्य जातपुलकां लज्जावतीं सुस्मितां
काञ्चीनूपुरहारकङ्कणलसत्कर्णावतंसोज्ज्वलाम् ।
कस्तूरीघनसारचर्चितकुचां चन्द्राननां श्यामलं
कन्दर्पाधिकसुन्दरं रघुपतिं श्रीरामचन्द्रं भजे ॥ ३०

வைதேஹீம் பரிரப்ய ஜாதபுலகாம் லஜ்ஜாவதீம் ஸுஸ்மிதாம்
காஞ்சீநூபுரஹாரகங்கணலஸத்கர்ணவதம்ஸோஜ்ஜ்வலாம் ।
கஸ்தூரீகநஸாரசர்சிதகுசாம் சந்த்ராநநாம் ச்யாமலம்
கந்தர்பாதிகஸுந்தரம் ரகுபதிம் ஶ்ரீராமசந்த்ரம் பஜே ॥ 30

*புல்லரிப்புடன் வெட்கப்புன்னகையுடன் இடுப்பணி, காலணி, ஹாரம், வளை, காதணி இவற்றால் அழகுற்றவளும், மார்பில் கஸ்தூரி பச்சை கற்பூரங்களால் பூசப் பெற்றவளுமான ஸீதையை அணைத்தவராக கார்மேக வண்ணராக, மன்மதனை விட அழகராக விற்றிருக்கிற ரகுபதியான ஸ்ரீ ராம சந்திரனை ஸேவிக்கிறேன். 30*

वैदेहीरमणं विभीषणविभुं विष्णुस्वरूपं हरिं
विश्वोत्पत्तिविपत्तिपोषणकरं विद्याधरैरर्चितम् ।
वैरिध्वंसकरं विरिञ्चिजनकं विश्वात्मकं व्यापकं
व्यासाङ्गीरसनारदादिविनुतं वन्दामहे राघवम् ॥ ३१

வைதேஹீரமணம் விபீஷணவிபும் விஷ்ணுஸ்வரூபம் ஹரிம்
விச்வோத்பத்திவிபத்திபோஷணகரம் வித்யாதரைரர்சிதம் ।
வைரித்வம்ஸகரம் விரிஞ்சிஜநகம் விச்வாத்மகம் வ்யாபகம்
வ்யாஸாங்கீரஸநாரதாதிவிநுதம் வந்தாமஹே ராகவம் ॥ 31

*ஸீதையை மகிழ்விப்பவர், விபீஷணனின் யஜமானன் விஷ்ணுவின் வடிவம், பாபத்தைப் போக்குபவர், உலகைத்*

सौमित्रिमानार्णवपूर्णचन्द्र सीतालसल्लोचनपूर्णचन्द्र ।
मारारिवक्त्राम्बुधिपूर्णचन्द्र संरक्ष मां राघव रामचन्द्र ॥ २८

ஸௌமித்ரிமாநார்ணவபூர்ணசந்த்ர ஸீதாலஸல்லோசநபூர்ணசந்த்ர ।
மாராரிவக்த்ராம்புதிபூர்ணசந்த்ர ஸம்ரக்ஷ மாம் ராகவ ராமசந்த்ர ॥ 28

*லக்ஷ்மணனின் பெருமதிப்பாகிய கடலைப்பூரிக்கச் செய்கிற பூர்ண சந்திரரே! ஸீதையின் ஒளிமிக்க கண்களுக்கு இதமளிக்கிற சந்திரனே! சிவனின் முகமாகிற கடலைப் பொங்கச் செய்கிற சந்திரனே! ராமசந்திர! ராகவ! என்னைக் காப்பீர். (28)*

यस्य किञ्चिदपि नो हरणीयं कर्म किञ्चिदपि नो चरणीयम् ।
रामनाम च सदा स्मरणीयं लीलया भवजलं तरणीयम् ॥ २९

யஸ்ய கிஞ்சிதபி நோ ஹரணீயம் கர்ம கிஞ்சிதபி நோ சரணீயம் ।
ராமநாம ச ஸதா ஸ்மரணீயம் லீலயா பவஜலம் தரணீயம் ॥ 29

*எவருக்கும் உபகாரப் பொருள் கொணர வேண்டாம். எவருக்காகவும் தனிப்பணி புரிய வேண்டாம், ராமனின் நாமத்தை எப்போதும் நினைக்க வேண்டும், பிறவிக் கடலை எளிதில் கடக்க வேண்டும். (29)*

रिङ्गमाणमभितो गृहाङ्गणे भृङ्गनीलमलकावृताननम् ।
मङ्गलप्रदममङ्गलापहं संगृहाण दशरथात्मजं हृदि ॥ ३०

ரிங்கமாணமபிதோ க்ருஹாங்கணே ப்ருங்கநீலமலகாவ்ருதாநநம் ।
மங்கலப்ரதமமங்கலாபஹம் ஸங்க்ருஹாண தசரதாத்மஜம் ஹ்ருதி ॥ 30

*தசரதரின் புதல்வரான பாலராமன், மாளிகையின் அங்கணத்தில் ஊர்ந்து வருகிறார், கருவண்டு போன்ற நிறமுள்ளவர், முன்னுச்சிமயிரால் முகம் மறைக்கப் பெற்றவர், மங்களமளிப்பவர், அமங்களத்தை அகற்றுபவர், இவரை உள்ளத்தில் கொள்வாய். (30)*

दनुजतिमिरभानुं तापसैश्चिन्त्यमानं
शमितकलुषचारं सेवके दुष्टदूरम् ।

दलितविषमसालं दण्डितारातिजालं
प्रणम शिखरिशत्रुं भव्यपाथोदगात्रम्॥ ३१

**தநுஜதிமிரபாநும் தாபஸைச்சிந்த்யமாநம்**
**சமிதகலுஷசாரம் ஸேவகே துஷ்டதூரம் ।**
**தலிதவிஷமஸாலம் தண்டிதாராதிஜாலம்**
**ப்ரணம சிகரிசத்ரும் பவ்யபாதோதகாத்ரம் ॥ 31**

*அஸுர இருட்டை அகற்றுகிற ஸூரியன், தவம் செய்பவரால் தியானிக்கப் பெறுபவர், தனக்குப் பணிவிடை புரிபவரிடம் பாபத்தின் பின்விளைவை நீக்கியவர், துஷ்டருக்குத் தூரத்தில் இருப்பவர், வரிசையற்றிருந்த ஸாலமரங்களைச் சிதைத்தவர், எதிரிக் கூட்டத்தைத் தண்டித்தவர், மலைக்கு எதிரி, மங்களமான மேகம் போன்ற வடிவினர், இவரை வணங்குகிறேன். (31)*

हे गोपालक हे दयाशरनिधे हे शम्भुचापाकृ(वृ)ते
हे दैत्यान्तक हे विभीषणदयापारीण हे भूपते ।
हे वैदेहसुतामनोज्ञविहृते हे कोटिमाराकृते
हे नव्याम्बुजनेत्र पालय परं जानामि न त्वां विना ॥ ३२

**ஹே கோபாலக ஹே தயாசரநிதே ஹே சம்புசாபாக்ரு(வ்ரு)தே**
**ஹே தைத்யாந்தக ஹே விபீஷணதயாபாரீண ஹே பூபதே ।**
**ஹே வைதேஹஸுதாமநோஜ்ஞவிஹ்ருதே ஹே கோடிமாராக்ருதே**
**ஹே நவ்யாம்புஜநேத்ர பாலய பரம் ஜாநாமி ந த்வாம் விநா ॥32**

*ஏ கோபால! தயைக் கடலே! சிவனின் வில்லைத் துண்டித்தவரே! அஸுரரின் யமனே! விபீஷணரிடம் எல்லையற்ற பரிவுள்ளவரே! அரசே! வைதேஹியுடன் மனமகிழ்ந்து விளையாடுபவரே! கோடி மன்மதவடிவினரே! புதிய தாமரை போன்று கண்களுள்ளவரே! உம்மைத் தவிர வேறொரு காப்பாளரை அறியேன். (32)*

साकेते प्रणवाब्ज रत्नखचिते सिंहासने संस्थितं
विश्वामित्रवशिष्ठगालवमुखैराशीर्भिरामोदितम् ।
पूज्यं पार्श्वगताब्जचारुनयनं विद्युच्चलच्चामरं
वन्दे कोमलसस्मिताननमिलारक्षावतीर्णं हरिम् ॥ ३३

ஸாகேதே ப்ரணவாப்ஜ ரத்நகசிதே ஸிம்ஹாஸநே ஸம்ஸ்திதம்
விச்வாமித்ரவசிஷ்டகாலவமுகைராசீர்பிராமோதிதம் ।
பூஜ்யம் பார்ச்வகதாப்ஜசாருநயநம் வித்யுச்சலச்சாமரம்
வந்தே கோமலஸஸ்மிதாநநமிலாரக்ஷாவதீர்ணம் ஹரிம் ॥ 33

*ஸாகேதத்தில் ஓங்கார பத்மத்தின் மீது ரத்னம் பதித்த ஸிம்ஹாஸனத்தில் அமர்ந்து விச்வாமித்ரர், வஸிஷ்டர், காலவர் முதலிய முனிவரால் வாழ்த்தப் பெற்று, இடதுபுறத்தில் கண்ணழகியான ஸீதையைக் கொண்டவராக, மின்னல் போன்று சாமரம் வீசப்பெற, மென்மைமிக்க புன்னகையுள்ள பூமியைக் காக்கவந்த ஹரியை வணங்குகிறேன். (33)*

नित्यं निर्जितपङ्कसम्भवमहोनेत्रश्रियं राघवं
रामं पर्वणि चन्द्रचारुवदनं दिक्पालकैः सेवितम् ।
कर्पूरागरुचन्दनार्द्रहृदयं मन्दारमालाङ्कितं
विद्युत्पुञ्जनिभाम्बरावृततनुं रामं भजे श्यामलम् ॥ ३४

நித்யம் நிர்ஜிதபங்கஸம்பவமஹோநேத்ரச்ரியம் ராகவம்
ராமம் பர்வணி சந்த்ரசாருவதநம் திக்பாலகை: ஸேவிதம் ।
கர்பூராகருசந்தநார்த்ரஹ்ருதயம் மந்தாரமாலாங்கிதம்
வித்யுத்புஞ்ஜநிபாம்பராவ்ருததநும் ராமம் பஜே ச்யாமலம் । 34

*தாமரையின் ஒளியை வென்ற கண்ணழகர், பூர்ண சந்திரன் போன்ற முகமுள்ளவர், திக்பாலர்களால் வழிபடப் பெற்றவர், கர்பூரம், சந்தனம் இவற்றின் ஈரமான பூச்சுள்ளவர், மந்தாரமாலே பூண்டவர், மின்னல் குவியல் போன்ற ஆடை அணிந்தவர், கார்மேகவண்ணர், அந்த ராகவனே எப்போதும் வழிபடுகிறேன். (34)*

श्रीरामं कुशिकात्मजस्य वचनेनाकृष्य बाणासनं
मारीचं च सुबाहुकं शरयुगेनैवाहवे लीलया ।
घ्नन्तं सुन्दरकाकपक्षरुचिरं सौमित्रिणा संस्तुतं
पश्यामः कमलामुखे सकरुणं कालाम्बुदश्यामलम्।। ३५

ஸ்ரீராமம் குசிகாத்மஜஸ்ய வசநேநாக்ருஷ்ய பாணாஸநம்
மாரீசம் ச ஸுபாஹுகம் சரயுகேநைவாஹவே லீலயா ।
க்நந்தம் ஸுந்தரகாகபக்ஷருசிரம் ஸௌமித்ரிணா ஸம்ஸ்துதம்
பச்யாம: கமலாமுகே ஸகருணம் காலாம்புதச்யாமலம் ॥ 35

*விச்வாமித்ரரின் சொல்படி, வில்லை இழுத்து, இருபாணங்களால் போரில் மாரீசனையும் ஸுபாஹுவையும் விளையாட்டாகத் தாக்கியவர், அழகிய காக்கை சிறகு போன்று கேசத்தைப் பின்னிக் கொண்டவர், லக்ஷ்மணரால் பாராட்டப் பெற்றவர், லக்ஷ்மியின் (ஸீதையின்) முகத்தில் பரிவு மிக்கவர், கார்மேக நீல வண்ணர், அந்த ராமரைக் காண்போம்.(35)*

आनन्दरूपं वरदं प्रसन्नं सिंहासने सेवितपारिजातम् ।
नीलोत्पलाङ्गं भुवनैकमित्रं रामं भजे राघवरामचन्द्रम् ।। ३६

ஆநந்தரூபம் வரதம் ப்ரஸந்நம் ஸிம்ஹாஸநே ஸேவிதபாரிஜாதம் ।
நீலோத்பலாங்கம் புவநைகமித்ரம் ராமம் பஜே ராகவராமசந்த்ரம் ॥ 36

*ஆனந்த வடிவினர், விரும்பியதை வழங்குபவர், தெளிந்தவர், ஸிம்ஹாஸனத்தில் பாரிஜாத மரத்தடியில் உள்ளவர், நீல அல்லிமேனியர், உலகின் ஒரே நண்பர், ராகவன், ராமசந்திரன், அந்த ராமரை வழிபடுகிறேன். (36)*

युद्धे वसन्तमृदुरद्भुत बाणवर्षैः
रामःप्रहारसमये रजनीचराणाम् ।
रक्षानुकूल समयाय विभीषणाय
लङ्काधिपत्यमदिशद्रघुरामचन्द्रः ।। ३७

யுத்தே வஸந்தம்ருதுரத்புத பாணவர்ஷை:
ராம: ப்ரஹாரஸமயே ரஜநீசராணாம் ।
ரக்ஷாநுகூல ஸமயாய விபீஷணாய
லங்காதிபத்யமதிசத்ரகுராமசந்த்ர: ॥ 37

*வஸந்த ருது போன்ற மென்மையுள்ள ராமன் போரில் அற்புதமான அம்பு மழையால் ராக்ஷஸர்களை அழித்தார். அனுகூல நேரத்தில் விபீஷணனுக்கு லங்கையின் ஆட்சியை அளித்தார். (37)*

वेदान्तनादं सुकृतैक दासं हृताभिमानं त्रिदशप्रधाने ।
गजे(ते)न्द्रयानं विगतावसानं श्रीरामचन्द्रं सततं नमामि ॥ ३८

வேதாந்தநாதம் ஸுக்ருதைக தாஸம் ஹ்ருதாபிமாநம் த்ரிதசப்ரதாநே ।
கஜே(தே)ந்த்ரயாநம் விகதாவஸாநம் ஶ்ரீராமசந்த்ரம் ஸததம் நமாமி ॥38

*உபநிஷத்தை ஒலிப்பவர், புண்யச் செயலுக்கு தாஸர், இந்திரனிடத்தில் மதிப்பிழந்தவர், யானை மீது உலா வருபவர், முடிவற்றவர், அந்த ஶ்ரீ ராமசந்திரனை எப்போதும் வணங்குகிறேன். (38)*

श्रीरामचन्द्रं धृतचापसायकं नीलोत्पलाभं नलिनायतेक्षणम् ।
सौमित्रिणा सेवितपादपङ्कजं सीतासमेतं शरणं भजेऽहम् ॥ ३९

ஶ்ரீராமசந்த்ரம் த்ருதசாபஸாயகம்
நீலோத்பலாபம் நலிநாயதேக்ஷணம் ।
ஸௌமித்ரிணா ஸேவிதபாதபங்கஜம்
ஸீதாஸமேதம் சரணம் பஜேऽஹம் ॥ 39

*வில்லும் அம்பும் ஏந்தியவர், நீல அல்லிபோன்ற மேனிவண்ணம் கொண்டவர், தாமரை இதழ் போன்ற விரிந்த நீண்ட கண்களுள்ளவர், லக்ஷ்மணனால் திருவடியில் வழிபடப் பெறுபவர், ஸீதையுடன் கூடிய அந்த ராமனை சரணமடைகிறேன். (39)*

श्रीरामचन्द्र करुणाकर दीनबन्धो
सीतासमेत भरताग्रज राघवेश ।
पापार्तिभञ्जन भयातुरदीनबन्धो
पापाम्बुधौ पतितमुद्धर मामनाथम् ॥ ४०

ஸ்ரீராமசந்த்ர கருணாகர தீநபந்தோ
ஸீதாஸமேத பரதாக்ரஜ ராகவேச ।
பாபார்திபஞ்ஜந பயாதுரதீநபந்தோ
பாபாம்புதௌ பதிதமுத்தர மாமநாதம் ॥ 40

*ஸ்ரீ ராமசந்திர! கருணை புரிபவரே! எளியவருக்கு உதவுபவரே! ஸீதையுடன் கூடியவரே! பரதனின் அண்ணனே! ராகவ! ஈச! பாபத்துயர் நீக்குபவரே! பயமுற்ற எளியவருக்கு உற்றுராக உதவுபவரே! பாபக் கடலில் மூழ்கியுள்ள காப்பாரற்ற என்னைக் கைதூக்கிவிடுவீர். (40)*

इदं शरीरं शतसन्धिजर्जरं पतत्यवश्यं परिणामदुर्लभम् ।
किमौषधं पृच्छसि मूढ दुर्मते निरामयं रामकथामृतं पिब ॥ ४१

இதம் சரீரம் சதஸந்திஜர்ஜரம் பதத்யவச்யம் பரிணாமதுர்லபம் ।
கிமௌஷதம் ப்ருச்சஸி மூட துர்மதே நிராமயம் ராமகதாம்ருதம் பிப ॥

*இவ்வுடல் ஆயிரம் மூட்டுகளில் தளர்ந்தது. மாறமாற அழியக்கூடியது. முட்டாளே! கெட்டபுத்தி உள்ளவனே! இதற்கு ஏது மருந்து? நோய் நீக்குகிற ராமகதை எனும் அமுதத்தைப் பருகுவாய்.! (41)*

दशमुखगजसिंहं दैत्यगर्वादरंहं
कदन भयदहस्तं तारक ब्रह्मशास्तम् ।
मणिखचितकिरीटं मञ्जुलालापनादं
दशरथकुलचन्द्रं रामचन्द्रं भजेऽहम् ॥ ४२

தசமுககஜஸிம்ஹம் தைத்யகர்வாதரம்ஹம்
கதநபயதஹஸ்தம் தாரக ப்ரஹ்ம சஸ்தம் ।

**மணிகசிதகிரீடம் மஞ்ஜுலாலாபநாதம்**
**தசரதகுலசந்த்ரம் ராமசந்த்ரம் பஜேऽஹம் ।** 42

*ராவணன் என்ற யானைக்குச் சிங்கம், அஸுரரின் செருக்கை விழுங்குகிற வேகமுடையவர், அரக்கரை அழிக்கிற பயத்தைத் தருகிற கைகள் உள்ளவர், தாரகப் பிரும்மம் எனப் புகழப்பட்டவர், ரத்ன கிரீடமுள்ளவர், இனிது பேசுபவர், தசரதரின் குலத்தின் சந்திரன், அந்த ராமசந்திரனை நான் வழிபடுகிறேன். (42)*

लङ्काविरामं रणरङ्गभीमं राजीवनेत्रं रघुवंशमित्रम् ।
कारुण्यमूर्तिं करुणाप्रपूर्तिं श्रीरामचन्द्रं शरणं प्रपद्ये ॥ ४३

**லங்காவிராமம் ரணரங்கபீமம் ராஜீவநேத்ரம் ரகுவம்சமித்ரம் ।**
**காருண்யமூர்திம் கருணாப்ரபூர்திம் ஸ்ரீராமசந்த்ரம் சரணம் ப்ரபத்யே ॥43**

*லங்கையை முடித்தவர், போரரங்கில் பயம் தருபவர், தாமரைக் கண்ணர், ரகுகுலத்தின் நண்பர் (ஸூரியன்), கருணை வடிவினர், கருணையின் நிறைவிடம், அந்த ஸ்ரீ ராமசந்திரனைச் சரணடைகிறேன். (43)*

श्रीरामचन्द्रमनिशं हृदिस्थितं
श्रीराममिन्दुवदनं प्रविभासम् ।
भावयामि निगमान्तनिवासं
भारतीपतिनुतं भववन्द्यम् ॥ ४४

**ஸ்ரீராமசந்த்ரமநிசம் ஹ்ருதிஸ்திதம்**
**ஸ்ரீராமமிந்துவதநம் ப்ரவிபாஸம் ।**
**பாவயாமி நிகமாந்தநிவாஸம்**
**பாரதீபதிநுதம் பவவந்த்யம் ॥** 44

*எப்போதும் உள்ளத்திலிருப்பவர், சந்திரனைப் போன்ற முகமுள்ளவர், பேரொளி கொண்டவர், உபநிஷத்தில் கூறப்பெறுபவர், பிரும்மாவால் துதிக்கப் பெறுபவர், சிவனால் வணங்கப் பெற்றவர், இந்த ராமசந்திரனை தியானிக்கிறேன். (44)*

कौमारे रामचन्द्रः कमलमृदुपदा शोभयन् भूमिभागं
मातुश्चानन्दकारी मरकतनिकराकार इन्दीवराक्षः ।
उत्सङ्गे सन्निविष्टः पितुरमरवरैः स्तूयमानोपकारी
नानालङ्कारभूषः स्फुरतु मम सदा मायया राम ईशः ॥ ४५

கௌமாரே ராமசந்த்ர: கமலம்ருதுபதா சோபயந் பூமிபாகம்
மாதுச்சாநந்தகாரீ மரகதநிகராகார இந்தீவராக்ஷ: ।
உத்ஸங்கே ஸந்நிவிஷ்ட: பிதுரமரவரை: ஸ்தூயமாநோபகாரீ
நாநாலங்காரபூஷ: ஸ்புரது மம ஸதா மாயயா ராம ஈச: ॥ 45

*இளம் வயதில், ராமசந்திரன் தாமரை போன்ற மென்மை மிக்க பாதங்களால் நடந்து பூமியை அலங்கரித்தவர், தாயை ஆனந்தப்படுத்தியவர், மரகத வண்ணம் கொண்ட மேனியுள்ளவர், தாமரைக் கண்ணர், தந்தையின் மடியில் அமர்பவர், தேவர்களில் சிறந்தவர்களால் தாம் செய்த உதவிபற்றிப் புகழப் பெற்றவர், பலவித ஆபரணங்கள் பூண்டவர், அந்த ஈசனை ராமன் என் உள்ளத்தில் துலங்கட்டும். (45)*

सन्नद्धः कवची खड्गी चापबाणधरो युवा ।
गच्छन्ममाग्रतो नित्यं रामः पातु सलक्ष्मणः ॥ ४६

ஸந்நத்த: கவசீ கட்கீ சாபபாணதரோ யுவா ।
கச்சந்மமாக்ரதோ நித்யம் ராம: பாது ஸலக்ஷ்மண: ॥ 46

*கவசம் பூண்டு கத்தி ஏந்தி அம்பும் வில்லும் ஏந்தி ஆயத்தமான யுவன், என் முன் லக்ஷ்மணனுடன் நடமாடுகிற ராமன் என்னை எப்போதும் காப்பாற்றட்டும். (46)*

सुग्रीवमित्रं परमं पवित्रं सीताकलत्रं नवहेमसूत्रम् ।
कारुण्यपात्रं शतपत्रनेत्रं श्रीरामचन्द्रं शिरसा नमामि ॥ ४७

ஸுக்ரீவமித்ரம் பரமம் பவித்ரம் ஸீதாகலத்ரம் நவஹேமஸூத்ரம் ।
காருண்யபாத்ரம் சதபத்ரநேத்ரம் ஸ்ரீராமசந்த்ரம் சிரஸா நமாமி ॥47

*ஸுக்ரீவனின் நண்பர், மிகவும் தூயவர், ஸீதையின் மணாளர், புதிய தங்க உபவீதம் பூண்டவர், கருணையின் இடம், தாமரைக் கண்ணர், இந்த ஸ்ரீ ராமசந்திரனைத் தலையால் வணங்குகிறேன். (47)*

श्रीराघवेति रमणेति रघूद्वहेति
रामेति रावणहरेति रमाधवेति ।
साकेतनाथ सुमुखेति च सुव्रतेति
वाणी सदा वदतु राम हरे हरेति ॥ ४८

**ஸ்ரீராகவேதி ரமணேதி ரகூத்வஹேதி**
**ராமேதி ராவணஹரேதி ரமாதவேதி ।**
**ஸாகேதநாத ஸுமுகேதி ச ஸுவ்ரதேதி**
**வாணீ ஸதா வதது ராம ஹரே ஹரேதி ॥ 48**

*ஸ்ரீ ராகவ! ரமண! ரகுகுலத்தைத் தூக்கிநிறுத்துபவரே! ராம! ராம! ராவணனைக் கொன்றவரே! லக்ஷ்மியின் மணாளரே! ஸாகேதத்தின் அரசே! ஸுமுகமானவரே! நல்லவிரதம் பூண்டவரே! ஹரே! ஹரே! என என் நாக்கு எப்போதும் கூறிக் கொண்டிருக்கட்டும். (48)*

जयतु जयतु रामो जानकीवल्लभोऽयं
जयतु जयतु रामश्चन्द्रचूडार्चिताङ्घ्रिः ।
जयतु जयतु वाणीनाथनाथः परात्मा
जयतु जयतु रामो नाथनाथः कृपालुः ॥ ४९

**ஜயது ஜயது ராமோ ஜாநகீவல்லபோऽயம்**
**ஜயது ஜயது ராமச்சந்த்ரசூடார்சிதாங்க்ரி: ।**
**ஜயது ஜயது வாணீநாதநாத: பராத்மா**
**ஜயது ஜயது ராமோ நாதநாத: க்ருபாலு: ॥ 49**

*ஜானகியின் மணாளனான ராமன் வெல்க! வெல்க! சிவனால் வழிபடப் பெறுகிற ராமன் வெல்க! வெல்க! பிரும்மாவின் நாதனும் பரமாத்மாவுமான ராமன் வெல்க! வெல்க!*

*காப்பாளருக்கும் காப்பாளரான கருணைமிக்க ராமன் வெல்க! வெல்க! (49)*

**वरं न याचे रघुनाथ युष्मत्पादाब्जभक्तिः सततं ममास्तु ।**
**इदं प्रियं नाथ वरं प्रयच्छ पुनः पुनस्त्वामिदमेव याचे ।। ५०**

**வரம் ந யாசே ரகுநாத யுஷ்மத்பாதாப்ஜபக்தி: ஸததம் மமாஸ்து ।**
**இதம் ப்ரியம் நாத வரம் ப்ரயச்ச புந: புநஸ்த்வாமிதமேவ யாசே ॥ 50**

*ரகுநாத! வேறு வரம் வேண்டேன், உமது திருவடிகளில் எப்போதும் எனக்கு பக்தி இருக்கட்டும்! இந்த வரத்தைத் தருவீர். இதனையே உம்மிடம் மறுபடி மறுபடி வேண்டுகிறேன். (50)*

**अम्भोधिरोषैररुणायमाने नाथस्य मृष्ट्वा नयने रघूणाम् ।**
**मरुद्गणैस्तत्क्षणमा नु शङ्के मन्दाकिनीमङ्गलसूत्रभङ्गः ।। ५१**

**அம்போதிரோஷைரருணாயமாநே**
**நாதஸ்ய ம்ருஷ்ட்வா நயநே ரகூணாம் ।**
**மருத்கணைஸ்தத்க்ஷணமா நு சங்கே**
**மந்தாகிநீமங்கலஸூத்ரபங்க: ॥ 51**

*கடலிடம் கோபத்தால் ரகுநாதனின் கண்கள் சிவக்க மருத்துக்கள் கங்கையின் மாங்கல்யம் அறுபடுமோ என சந்தேகித்தனர். (51)*

**अम्भोधिस्मयबन्धनेन जगदानन्देन भूपुत्रिका-**
**स्वान्ताम्भोभवबान्धवेन नतरक्षायत्तचित्तेन मे ।**
**कर्णालम्बितकुण्डलेन दिविषत्त्राणोद्यमेनाश्रित-**
**श्रेयः कल्पलतेव मे मतिरियं रामेण संवर्धताम् ।। ५२**

**அம்போதிஸ்மயபந்தநேந ஜகதாநந்தேந பூபுத்ரிகா-**
**ஸ்வாந்தாம்போபவபாந்தவேந நதரக்ஷாயத்தசித்தேந மே ।**
**கர்ணாலம்பிதகுண்டலேந திவிஷத்த்ராணோத்யமேநாச்ரித-**
**ச்ரேய:கல்பலதேவ மே மதிரியம் ராமேண ஸம்வர்ததாம் ॥ 52**

*கடலின் செருக்கைக் கட்டிப் போட்டவர், உலகிற்கு ஆனந்தம் தருபவர், பூமியின் புதல்வியின் உள்ளத் தாமரைக்கு ஸூரியனானவர், வணங்கியவரைக் காக்க முனைந்தவர், காதில் குண்டலம் தொங்கவிட்டவர். தேவரைக் காக்க முயன்றவர், அந்த ராமன் என்ற கற்பக மரத்துடன் ஒட்டிய கற்பகக் கொடியாக என் புத்தி வளரட்டும். (52)*

रामादौ जननं कुमारगमनं यज्ञप्रतीपालनं
शापादुद्धरणं धनुर्विदलनं सीताङ्गनोद्वाहनम्।
लङ्कायां दहनं समुद्रतरणं सौमित्रिसंमोहनं
रक्षःसंहरणं स्वराज्यभवनं चैतद्धि रामायणम् ॥ ५३

ராமாதௌ ஜநநம் குமாரகமநம் யஜ்ஞப்ரதீபாலனம்
சாபாதுத்தரணம் தநுர்விதலநம் ஸீதாங்கநோத்வாஹநம் ।
லங்காயா தஹநம் ஸமுத்ரதரணம் ஸௌமித்ரிஸம்மோஹநம்
ரக்ஷ:ஸம்ஹரணம் ஸ்வராஜ்யபவநம் சைதத்தி ராமாயணம் ॥ 53

*ராமன் பிறந்தது, குமாரவயதடைந்தது, வேள்வியைக் காத்தது, சாபத்தை நீக்கியது, வில்லை ஒடித்தது, ஸீதையை மணந்தது, லங்கையை எரித்தது, கடலைக் கடந்தது, லக்ஷ்மணன் மயங்கியது, அரக்கர்களை அழித்தது, தன் அரசைக் காத்தது, இதுதான் ராமாயணம். (53)*

जन्मादौ क्रतुरक्षणं मुनिपतेः स्थाणोर्धनुर्भञ्जनं
वैदेहीग्रहणं पितुश्च वचनाद्धोराटवीगाहनम् ।
कोदण्डग्रहणं खरादिमथनं मायामृगच्छेदनं
बद्धाब्धिक्रमणं दशास्यनिधनं चैतद्धि रामायणम् ॥ ५४

ஜந்மாதௌ க்ரதுரக்ஷணம் முநிபதே: ஸ்தாணோர்தநுர்பஞ்ஜநம்
வைதேஹீக்ரஹணம் பிதுச்ச வசநாத்கோராடவீகாஹநம் ।
கோதண்டக்ரஹணம் கராதிமதநம் மாயாம்ருகச்சேதநம்
பத்தாப்திக்ரமணம் தசாஸ்யநிதநம் சைதத்தி ராமாயணம் ॥ 54

*பிறந்தது, முனிவரின் நாதரின் வேள்வியைக் காத்தது, சிவனின் வில் முறித்தல், வைதேஹியை மணந்து, தந்தையின் சொல்லால் கோரக் காட்டில் நுழைந்தது; வில்லை ஏற்றது, கரன் முதனானோரை அழித்தது, மாயமானை வெட்டியது, கடலைக் கட்டித் தாண்டியது. ராவணனை அழித்தது, இதுவே ராமாயணம். (54)*

पूर्वं रामतपोवनानुगमनं हत्वा मृगं काञ्चनं
वैदेहीहरणं जटायुमरणं सुग्रीवसम्भाषणम् ।
वालीनिग्रहणं समुद्रतरणं लङ्कापुरीदाहनं
पश्चाद्रावणकुम्भकर्णकदनं चैतद्धि रामायणम्॥ ५५

**பூர்வம் ராமதபோவநாநுகமநம் ஹத்வா ம்ருகம் காஞ்சநம்
வைதேஹீஹரணம் ஜடாயுமரணம் ஸுக்ரீவஸம்பாஷணம் ।
வாலீநிக்ரஹணம் ஸமுத்ரதரணம் லங்காபுரீதாஹநம்
பச்சாத்ராவணகும்பகர்ணகதநம் சைதத்தி ராமாயணம் ॥ 55**

*முன் ராமன் தபோவனம் சென்றது, தங்கமானைக் கொன்றது, வைதேஹியைப் பறித்தது, ஜடாயுவின் மரணம், ஸுக்ரீவனுடன் உரையாடுதல், வாலியை அடக்கியது, கடலைக் கடந்தது, லங்கை நகரை எரித்தது, ராவணனையும் கும்பகர்ணனையும் அழித்தது, இதுவே ராமாயணம். (55)*

शान्तं शारद चन्द्रकोटि सदृशं चन्द्राभिरामाननं
चन्द्रार्काग्नि विकासकुण्डलधरं चन्द्रावतंसस्तुतम् ।
वीणापुस्तक साक्षसूत्रविलसद्व्याख्यानमुद्राकरं
देवेशं भरतादिभिः परिवृतं रामं भजे श्यामलम् ॥ ५६

**சாந்தம் சாரத சந்த்ரகோடி ஸத்ருசம் சந்த்ராபிராமாநநம்
சந்த்ரார்காக்நி விகாஸகுண்டலதரம் சந்த்ராவதம்ஸஸ்துதம் ।
வீணாபுஸ்தகக ஸாக்ஷஸூத்ரவிலஸத்வ்யாக்யாநமுத்ராகரம்
தேவேசம் பரதாதிபி: பரிவ்ருதம் ராமம் பஜே ச்யாமலம் ॥ 56**

*சாந்தர், சரத் காலத்து கோடி சந்திரனுக்கு ஒப்பானவர், சந்திரனைப் போன்று மனத்தைக் கவர்கிற முகம் கொண்டவர், சந்திரனும் ஸூரியனும் அக்னியும் போன்ற குண்டலமணிந்தவர், சிவனால் பாராட்டப் பெற்றவர், வீணை புத்தகம் ஜபமாலை விரிவுரை முத்திரை ஏந்தின கைகள் உள்ளவர், பரதன் முதலியவருடன் கூடிய தேவர்களின் ஈசர், கருமேனிகொண்ட அந்த ராமனை வழிபடுகிறேன். (56)*

कृष्णं भीमधनुः कठोरनिनदं ब्रह्मादिसंवित्स्मयं
भास्वद्वाजिगतेन मार्गमनिशं शम्भोः शिरः कम्पनम्।
दिग्दन्तिस्खलनं कुलाद्रिचलनं सप्तार्णवोन्मीलनं
वैदेहीमदनं मदान्धदमनं त्रैलोक्यसम्मोहनम् ।। ५७

க்ருஷ்ணம் பீமதநு:கடோரநிநதம் ப்ரஹ்மாதிஸம்வித்ஸ்மயம்
பாஸ்வத்வாஜிகதேந மார்கமநிசம் சம்போ: சிர: கம்பநம் ।
திக்தந்திஸ்கலநம் குலாத்ரிசலநம் ஸப்தார்ணவோந்மீலநம்
வைதேஹீமதநம் மதாந்ததமநம் த்ரைலோக்யஸம்மோஹநம் ॥ 57

*கருமேனியுள்ளவர், பயங்கரமான வில்லைக் கடோரமாக ஒலிக்கச் செய்தவர், பிரும்மாதியரின் அறிவிற்கும் வியப்பளிப்பவர், ஒளிமிக்க குதிரை மீதேறி ஸூர்யனின் பாதையில் ஸஞ்சரிப்பவர், சிவனைத் தலையாட்ட (பாராட்டச்) செய்பவர், திக்கஜங்களைத் தடுமாறச் செய்பவர், குலபர்வதங்களை நடுங்கச் செய்பவர், ஏழு கடல்களையும் மோதச் செய்பவர், வைதேஹியின் மன்மதன், செருக்கால் குருடரை அடக்குபவர், மூவுலகையும் கவர்பவர், இந்த ராமரை வழிபடுகிறேன். (57)*

कञ्जातपत्रायतलोचनाय कर्णावतंसोज्ज्वलकुण्डलाय ।
कारुण्यपात्राय सुवंशजाय नमोऽस्तु रामाय सलक्ष्मणाय ।। ५८

கஞ்ஜாதபத்ராயதலோசநாய கர்ணாவதம்ஸோஜ்ஜ்வலகுண்டலாய ।
காருண்யபாத்ராய ஸுவம்சஜாய நமோऽஸ்து ராமாய ஸலக்ஷ்மணாய ।58

*தாமரை இதழ் போன்ற நீண்ட கண்களுள்ளவர், காதில் செருகிய பூவும் குண்டலமும் கொண்டவர், கருணையின் இடம்,*

*நல்ல வம்சத்தில் பிறந்தவர், லக்ஷ்மணனுடன் கூடிய ராமனுக்கு நமஸ்காரம். (58)*

**विद्युन्निभाम्भोदसुविग्रहाय विद्याधरैः संस्तुतसद्गुणाय ।**
**वीरावताराय विराधहन्त्रे नमोऽस्तु रामाय सलक्ष्मणाय ॥ ५९**

**வித்யுந்நிபாம்போதஸுவிக்ரஹாய வித்யாதரை: ஸம்ஸ்துதஸத்குணாய ।**
**வீராவதாராய விராதஹந்த்ரே நமோऽஸ்து ராமாய ஸலக்ஷ்மணாய ॥ 59**

*மின்னல் கோடிட்ட மேகம் போன்ற அழகிய மேனி உள்ளவர். வித்யாதரர்களால் நற்குணங்களுக்காகப் பாராட்டப் பெற்றவர். வீரனாகத் தோன்றியவர். விராதனைக் கொன்றவர். அந்த லக்ஷ்மணனுடனுள்ள ராமனுக்கு வந்தனம். (59)*

**संसक्तदिव्यायुधकार्मुकाय समुद्रगर्वापहरायुधाय ।**
**सुग्रीवमित्राय सुरारिहन्त्रे नमोऽस्तु रामाय सलक्ष्मणाय ॥ ६०**

**ஸம்ஸக்ததிவ்யாயுதகார்முகாய ஸமுத்ரகர்வாபஹராயுதாய ।**
**ஸுக்ரீவமித்ராய ஸுராரிஹந்த்ரே நமோऽஸ்து ராமாய ஸலக்ஷ்மணாய ॥ 60**

*திவ்ய ஆயுதங்களையும் வில்லையும் மாட்டிக் கொண்டவர், கடலின் செருக்கை ஒடுக்குகிற ஆயுதம் கொண்டவர், ஸுக்ரீவனுக்கு நண்பர், அஸுரரை அழித்தவர், அந்த லக்ஷ்மணனுடன் கூடிய ராமனுக்கு வந்தனம். (60)*

**पीताम्बरालङ्कृतमध्यकाय पितामहेन्द्रामरवन्दिताय ।**
**पित्रे स्वभक्तस्य जनस्य मात्रे नमोऽस्तु रामाय सलक्ष्मणाय ॥६१**

**பீதாம்பராலங்க்ருதமத்யகாய பிதாமஹேந்த்ராமரவந்திதாய ।**
**பித்ரே ஸ்வபக்தஸ்ய ஜநஸ்ய மாத்ரே நமோऽஸ்து ராமாய ஸலக்ஷ்மணாய ॥**

*பீதாம்பரத்தை இடுப்பில் அணிந்தவர், பிரும்மா இந்திரன் முதலிய தேவர்களால் வணங்கப் பெற்றவர், தன்பக்தனுக்குத் தாயும் தந்தையுமானவர், அந்த லக்ஷ்மணனுடன் கூடிய ராமனுக்கு நமஸ்காரம். (61)*

नमो नमस्तेऽखिलपूजिताय नमो नमश्चेन्दुनिभाननाय ।
नमो नमस्ते रघुवंशजाय नमोऽस्तु रामाय सलक्ष्मणाय ॥ ६२

நமோ நமஸ்தேऽகிலபூஜிதாய நமோ நமச்சேந்துநிபாநநாய ।
நமோ நமஸ்தே ரகுவம்சஜாய நமோऽஸ்து ராமாய ஸலக்ஷ்மணாய ॥ 62

*எல்லோராலும் பூஜிக்கப் பெற்ற ராமனுக்கு வந்தனம், வந்தனம், சந்திரன் போன்ற முகமுள்ளவருக்கு வந்தனம், வந்தனம், ரகுவம்சத்தில் தோன்றியவருக்கு வந்தனம், வந்தனம். லக்ஷ்மணனுடன் கூடிய ராமனுக்கு நமஸ்காரம், (62)*

इमानि पञ्चरत्नानि त्रिसन्ध्यं यः पठेन्नरः ।
सर्वपापविनिर्मुक्तः स याति परमां गतिम् ॥ ६३

இமாநி பஞ்சரத்நாநி த்ரிஸந்த்யம் ய: படேந்நர: ।
ஸர்வபாபவிநிர்முக்த: ஸ யாதி பரமாம் கதிம் ॥ 63

*இந்த ஐந்து (58-62) சுலோகங்களைத் தினமும் மூன்று ஸந்திவேளைகளிலும் படிப்பவன் பாபமனைத்தும் நீங்கி மேனிலை பெறுவான். (63)*

श्रीरामः कल्पवृक्षो मे विरामः सकलापदः ।
अभिरामस्त्रिलोकानां रामः क्षेमं करोतु नः ॥ ६४

ஸ்ரீராம: கல்பவ்ருக்ஷோ மே விராம: ஸகலாபத: ।
அபிராமஸ்த்ரிலோகாநாம் ராம: க்ஷேமம் கரோது ந: ॥ 64

*ஸ்ரீ ராமன் எனக்கு கற்பக மரம். எல்லா நெருக்கடிகளுக்கும் ஓய்விடம். மூவுலகுக்கும் மிக இனியவர், அந்த ராமன் நமக்கு நலம் வழங்கட்டும். (64)*

हृदय सदयचित्तं चित्तनाथं गुणानां
उदधिमुदितनिम्नं निम्नगालङ्कृताङ्घ्रिम् ।
जनकपतितनूजास्वान्तकान्तोत्पलस्य
स्फुरणकरणचन्द्रं रामचन्द्रं भजेऽहम् ॥ ६५

ஹ்ருதய ஸதயசித்தம் சித்தநாதம் குணோநாம்
உததிமுதிதநிம்நம் நிம்நகாலங்க்ருதாங்க்ரிம் ।
ஜநகபதிதநூஜாஸ்வாந்தகாந்தோத்பலஸ்ய
ஸ்புரணகரணசந்த்ரம் ராமசந்த்ரம் பஜேऽஹம் ॥ 65

*இதயமே! தயை மிக்க உள்ளம் உடையவர், சித்தத்தின் நாதர், குணக்கடல். கீழ்ப்பட்டவனை மேலோங்கச் செய்பவர், கங்கை எனும் ஆற்றால் திருவடி அலங்கரிக்கப் பெற்றவர், ஜனகரின் மகளின் உள்ளம் எனும் அழகிய அல்லியை மலரச் செய்கிற சந்திரன், அந்த ராமசந்திரனை வழிபடுகிறேன். (65)*

वदतु वदतु वाणी राम रामेति नित्यं
जपतु जपतु नित्यं रामपादारविन्दम् ।
वदतु वदतु देहः चिन्तयेद्रामचन्द्रं
न भवतु मम पापं जन्मजन्मान्तरेषु ।। ६६

வதது வதது வாணீ ராம ராமேதி நித்யம்
ஜபது ஜபது நித்யம் ராமபாதாரவிந்தம் ।
வதது வதது தேஹ: சிந்தயேத்ராமசந்த்ரம்
ந பவது மம பாபம் ஜந்மஜந்மாந்தரேஷு ॥ 66

*வாய் எப்போதும் ராம ராம என்று சொல்லட்டும்! சொல்லட்டும்! ராமனது திருவடித் தாமரை பற்றி எப்போதும் ஜபிக்கட்டும்! ஜபிக்கட்டும்! உடல் ராம எனக் கூறட்டும்! கூறட்டும்! ராமனை நினைக்கட்டும்! எப்பிறவியிலும் எனக்குப் பாபம் விளையாதிருக்கட்டும்! (66)*

चापबाणधरः सीताकामदः कान्तिमान्नरः ।
सीतालक्ष्मणसंयुक्तः: पातु मां राघवेश्वरः ।। ६७

சாபபாணதர: ஸீதாகாமத: காந்திமாந்நர: ।
ஸீதாலக்ஷ்மணஸம்யுக்த: பாது மாம் ராகவேச்வர: ॥ 67

*வில்லும் அம்பும் ஏந்தியவர், ஸீதை விரும்பியதை வழங்குபவர், பேரொளிமிக்க மாமனிதர். ஸீதையுடனும்*

லக்ஷ்மணனுடனும் கூடியவர், அந்த ராகவேச்வரன் என்னைக் காக்கட்டும். (67)

प्रातः स्मरामि रघुनाथमुखारविन्दं
मन्दस्मितं मधुरभाषि विशालफालम् ।
कर्णावलम्बिचलकुण्डलगण्डभागं
कर्णान्तदीर्घनयनं नयनाभिरामम् ॥ ६८

ப்ராத: ஸ்மராமி ரகுநாதமுகாரவிந்தம்
மந்தஸ்மிதம் மதுரபாஷி விசாலபாலம் ।
கர்ணாவலம்பிசலகுண்டலகண்டபாகம்
கர்ணாந்ததீர்கநயநம் நயநாபிராமம் ॥ 68

*(ஸுப்ரபாதம்) மென் சிரிப்புள்ளது, இனிது பேசுவது, விரிந்த நெற்றியுள்ளது, காதில் தொங்கி ஆடுகின்ற குண்டலத்தால் அழகிய கன்னப்பகுதி கொண்டது, காதுவரை நீண்ட கண்களுள்ளது. கண்களுக்கு இனியது, இந்த ராமனின் முகத்தாமரையைக் காலையில் நினைக்கிறேன். (68)*

प्रातर्भजामि रघुनाथपदारविन्दं
रक्षोगणाय भयदं वरदं निजेभ्यः ।
यद्राजसंसदि विभिद्य महेशचापं
सीताकरग्रहणमङ्गलमाप सद्यः ॥ ६९

ப்ராதர்பஜாமி ரகுநாதபதாரவிந்தம்
ரக்ஷோகணாய பயதம் வரதம் நிஜேப்ய: ।
யத் ராஜஸம்ஸதி விபித்ய மஹேசசாபம்
ஸீதாகரக்ரஹணமங்கலமாப ஸத்ய: ॥ 69

*ராக்ஷஸக் கூட்டத்திற்குப் பயமளிப்பது, தன்னவர் விரும்பியதைத் தருவது, அரசசபையில் சிவனின் வில்லை ஒடித்து உடன் ஸீதையின் கைகளைப் பற்றியது, இந்த ரகுநாதனின் திருவடித் தாமரைகளைக் காலையில் வழிபடுகிறேன். (69)*

प्रातर्नमामि रघुनाथपदारविन्दं
पद्माङ्कुशादिशुभरेखशुभावहं मे ।
योगीन्द्रमानसमधुव्रतसेव्यमानं
शापापहं सपदि गौतमधर्मपत्न्याः ॥

ப்ராதர்நமாமி ரகுநாதபதாரவிந்தம்
பத்மாங்குசாதிசுபரேகசுபாவஹம் மே ।
யோகீந்த்ரமாநஸமதுவ்ரதஸேவ்யமாநம்
சாபாபஹம் ஸபதி கௌதமதர்மபத்ந்யா: ॥ 70

*தாமரை அங்குசம் முதலிய சுபரேகைகள் கொண்டு மங்களமளிப்பது, சிறந்த யோகிகளின் மனமாகிய கருவண்டுகளால் சூழப்பெற்றது, கௌதமரின் தர்மபத்னியான அஹல்யையின் சாபக்கேட்டை நீக்கியது. அந்த ரகுநாதரின் திருவடித் தாமரையைக் காலையில் வணங்குகிறேன். (70)*

प्रातर्वदामि वचसा रघुनाथनाम
वाग्दोषहारि सकलं कलुषं निहत्य ।
यत्पार्वती स्वपतिना सह मोक्तुकामा
प्रीत्या सहस्रहरिनामसमं जजाप ॥ ७१

ப்ராதர்வதாமி வசஸா ரகுநாதநாம
வாக்தோஷஹாரி ஸகலம் கலுஷம் நிஹத்ய ।
யத்பார்வதீ ஸ்வபதிநா ஸஹ மோக்துகாமா
ப்ரீத்யா ஸஹஸ்ரஹரிநாமஸமம் ஜஜாப । 71

*வாக்கின் தவற்றை எல்லாப் பாபங்களேயும் அகற்றி நீக்குவது, பார்வதி தன் கணவருடன் கூடி முக்திபெற விரும்பி ஹரியின் ஆயிரம் நாமங்களுக்கு ஈடான ராமநாமத்தை ஜபித்தாள். அந்த ரகுநாதரின் நாமத்தை காலையில் கூறுகிறேன். (71)*

प्रातः श्रये श्रुतिनुतां रघुनाथमूर्तिं
नीलाम्बुदोत्पलसितेतररत्ननीलाम् ।

आमुक्तमौक्तिकविशेष विभूषणाढ्यां
ध्येयां समस्तमुनिभिर्निजभृत्यमुख्यैः ॥ ७२

ப்ராத: ச்ரயே ச்ருதிநுதாம் ரகுநாதமூர்திம்
நீலாம்புதோத்பலஸிதேதரரத்நநீலாம் ।
ஆமுக்தமௌக்திகவிசேஷ விபூஷணாட்யாம்
த்யேயாம் ஸமஸ்தமுநிபிர்நிஜப்ருத்யமுக்யை: ॥ 72

*வேதத்தால் துதிக்கப் பெற்ற ரகுநாதரின் அழகிய வடிவத்தைக் காலையில் அண்டி நிற்கிறேன். அது நீலோத்பலம், மேகம், நீலரத்னம், இவற்றை ஒத்த வண்ணம் கொண்டது, முத்து முதலிய சிறந்த ரத்ன ஆபரணங்களைச் சூடியது. முனிவரனைவராலும் ராமனுடைய பக்தர்களாலும், தியானிக்கத் தக்கது. (72)*

यः श्लोकपञ्चकमिदं नियतः पठेत
नित्यं प्रभातसमये पुरुषः प्रबुद्धः ।
श्रीरामकिङ्करजनेषु स एव मुख्यो
भूत्वा प्रयाति हरिलोकमनन्यलभ्यम् ॥ ७३

ய: ச்லோகபஞ்சகமிதம் நியத: படேத
நித்யம் ப்ரபாதஸமயே புருஷ: ப்ரபுத்த: ।
ஸ்ரீராமகிங்கரஜநேஷு ஸ ஏவ முக்யோ
பூத்வா ப்ரயாதி ஹரிலோகமநந்யலப்யம் ॥ 73

*இந்த (68-72) சுலோகங்களைத் தினமும் முறையுடன் காலையில் படிப்பவன், ஸ்ரீ ராமரின் ஏவலாளனது இடம் பெற்று மற்றவரால் அடைய இயலாத விஷ்ணு லோகத்தை அடைவான். (73)*

किं मन्त्रैर्बहुभिश्च दुष्करफलैरायासदैस्तद्विदां
किंचिल्लोपविधानमात्रविफलैः संसारदुःखावहैः ।
एकः सन्नपि सर्वमन्त्रफलदो दोषोज्झितः सर्वदा
श्रीरामः शरणं ममेति परमो मन्त्रोऽयमष्टाक्षरः ॥ ७४

கிம் மந்த்ரைர்பஹுபிச்ச துஷ்கரபலைராயாஸதைஸ்தத்விதாம்
கிஞ்சில்லோபவிதாநமாத்ரவிபலை: ஸம்ஸாரது:கவஹை: ।
ஏக: ஸந்நபி ஸர்வமந்த்ரபலதோ தோஷோஜ்ஜித: ஸர்வதா
ஸ்ரீராம: சரணம் மமேதி பரமோ மந்த்ரோऽயமஷ்டாக்ஷர: ॥ 74

*மற்ற மந்திரங்கள் பலனை எளிதில் தராதவை. ஆயாசம் தருபவை. சிறிது தவறினாலும் பயனற்றதாகுபவை. வாழ்வில் துன்பம் தருபவை, 'ஸ்ரீ ராம; சரணம்மம (ராமன் எனக்குப் புகலிடம்) என்ற எட்டக்ஷரங்களுள்ள மந்திரம், எல்லா மந்திரங்களின் பயனையும் எப்போதும் தரவல்லது. குறையற்றது. (74)*

रामभद्राश्रयः साक्षाद्रामचन्द्रो न संशयः ।
तत्र कोदण्डतूणीरावत्र दण्डकमण्डलू ।। ७५

ராமபத்ராச்ரய: ஸாக்ஷாத்ராமசந்த்ரோ ந ஸம்சய: ।
தத்ர கோதண்டதூணீராவத்ர தண்டகமண்டலூ ॥ 75

*ராமசந்திரனை அண்டியவன் ராமசந்திரனே. அங்கு வில்லும் அம்புறாத் தூணியும், இங்கு தண்டமும் கமண்டலுவும். (75)*

रघुनाथ पदारविन्दयोस्ते भ्रमरीभूतमदान्धकारसूर्यः ।
अपराधशतालयं कलौ मामवगृह्णाति हि मङ्गलैः कटाक्षैः ।। ७६

ரகுநாத பதாரவிந்தயோஸ்தே ப்ரமரீபூதமதாந்தகாரஸூர்ய: ।
அபராதசதாலயம் கலௌ மாமவக்ருஹ்ணாதி ஹி மங்கலை: கடாக்ஷை: ॥ 76

*ரகுநாத! உமது திருவடித் தாமரையை வண்டாகச் சுற்றி வருகிற என் செருக்காகிற இருளுக்குச் சூரியனான நீர் கலியில் ஆயிரம் தவறுகளின் இருப்பிடமான என்னை மங்களம் தருகிற கடாக்ஷத்தால் தாங்கிப் பிடிக்கிறீர். (76)*

रामनाम तव नाम जपन्तः पामरा अपि तरन्ति भवाब्धिम्।
अङ्गसङ्गिभवदङ्गुलिमुद्रः किं विचित्रमतरत्कपिरब्धिम् ।। ७७

ராமநாம தவ நாம ஜபந்த: பாமரா அபி தரந்தி பவாப்திம் ।
அங்கஸங்கிபவதங்குலிமுத்ர: கிம் விசித்ரமதரத்கபிரப்திம் ॥ 77

*உனது ராமநாமத்தை ஜபிக்கிற பாமரர்களும் பிறவிக் கடலைத் தாண்டுகிறனர். அந்த வானரரான அனுமான் உமது மேனியை அலங்கரித்த மோதிரத்தைக் கையில் கொண்டதால் கடலைத் தாண்டினூர் என்பதில் வியப்பதற்கு என்ன உள்ளது.?(77)*

श्रीरामनामामृतमन्त्रबीजं सञ्जीवनं चेन्मनसि प्रतिष्ठम् ।
हालाहलं वा प्रलयानलं वा मृत्योर्मुखं वा वितथीकरोति ॥ ७८

ஸ்ரீராமநாமாம்ருதமந்த்ரபீஜம் ஸஞ்ஜீவநம் சேந்மநஸிப்ரதிஷ்டம் ।
ஹாலாஹலம் வா ப்ரலயாநலம் ம்ருத்யோர்முகம் வா விததீகரோதி ॥ 78

*ஸ்ரீ ராமனின் நாமமாகிய அமுதம் மந்திரங்களின் விதையானது. அது வாழவைப்பது. அது மனத்திலிருந்தால் ஹாலாஹலத்தையோ பிரளய காலத்து நெருப்பையோ யமனின் வாயையோ பயனற்றதாக்கிவிடும். (78)*

हा कृष्णाच्युत हा कृपालय हरे हा पाण्डवानां सखे
कासि कासि सुयोधनावरगतां हा रक्ष मां द्रौपदीम् ।
इत्युक्तौ क्षयवस्त्ररक्षणतनुर्योऽरक्षदाशु क्षणे-
नार्त्तत्राणपरायणः स भगवान्नारायणो मे गतिः ॥ ७९

ஹா க்ருஷ்ணச்யுத ஹா க்ருபாலய ஹரே ஹா பாண்டவாநாம் ஸகே
க்வாஸி க்வாஸி ஸுயோதநாவரகதாம் ஹா ரக்ஷ மாம் த்ரௌபதீம் ।
இத்யுக்தௌ க்ஷயவஸ்த்ரரக்ஷணதநுர்யோऽரக்ஷதாசு க்ஷணே-
நார்த்தத்ராணபராயண: ஸ பகவாந்நாராயணோ மே கதி: ॥ 79

*கிருஷ்ண! அச்யுத! கருணையின் இருப்பிடமே! ஹரே! பாண்டவர்களின் நண்பரே! நீர் எங்கு உள்ளீர்? துர்யோதனின் தம்பியிடம் சிக்கிய என்னை- துரௌபதியைக் காப்பீர்'' என வேண்டியதும் குறைகிற ஆடையை நிரப்புபவராக நொடியில் எவர் காப்பாற்றினூரோ, துயருற்றவரைக் காக்க முனைந்த அந்த நாராயண பகவான் எனக்குப் புகலிடம். (79)*

इन्दीवरदलश्याममिन्दुकोटिनिभाननम् ।
कन्दर्पकोटिलावण्यं वन्देऽहं रघुनन्दनम् ॥ ८०

**இந்தீவரதலச்யாமமிந்துகோடிநிபாநநம் ।**
**கந்தர்பகோடிலாவண்யம் வந்தேऽஹம் ரகுநந்தநம் ॥ 80**

*நீல அல்லி நிறமுள்ளவர், கோடி சந்திரர்களுக்கொப்பான முகம் உள்ளவர், கோடி மன்மதர்களின் அழகு கொண்டவர், அந்த ரகுநந்தனனை நான் வணங்குகிறேன். (80)*

किं योगशास्त्रैः किमशेषविद्यया किं यागगङ्गादिविशेषतीर्थैः ।
किं ब्रह्मचर्याश्रमसञ्चरेण भक्तिर्न चेत्ते रघुवंशकीर्त्याम् ॥ ८१

**கிம் யோகசாஸ்த்ரை: கிமசேஷவித்யயா**
**கிம் யாககங்காதிவிசேஷதீர்தை: ।**
**கிம் ப்ரஹ்மசர்யாச்ரமஸஞ்சரேண**
**பக்திர்நசேத்தே ரகுவம்சகீர்த்யாம் ॥ 81**

*யோக சாஸ்திரத்தாலோ மந்திரங்களனைத்தாலோ, வேள்வி கங்கை முதலிய புனித நதிகளில் நீராடல், பிரும்மசரிய விரதம் முதலியவற்றாலோ ரகுநாதனின் பெருமையில் பக்தி இல்லாவிடில் ஆவதென்ன? (81)*

हे राम भद्राश्रय हे कृपालो हे भक्तलोकैकशरण्यमूर्ते ।
पुनीहि मां त्वच्चरणारविन्दं जगत्पवित्रं शरणं ममास्तु ॥ ८२

**ஹே ராம பத்ராச்ரய ஹே க்ருபாலோ ஹே பக்தலோகைகசரண்யமூர்தே ।**
**புநீஹி மாம் த்வச்சரணாரவிந்தம் ஜகத்பவித்ரம் சரணம் மமாஸ்து ॥ 82**

*ஹே ராம பத்திர! மங்களத்தின் இருப்பிடமே! கருணைமிக்கவரே! பக்தருலகத்திற்கு சரண் புகத்தக்க ஒரே இடமானவரே! என்னைக் காப்பீர். உலகைத் தூயதாக்குகிற உம் திருவடியே எனக்குப் புகலிடமாகட்டும். (82)*

हे रामभद्राश्रय योगिचन्द्र प्रसन्नमूर्तौ परिदृश्यमाने ।
तापत्रयं नाशमुपैति पुंसां ममान्धकारं विनिहन्तु सद्यः ॥ ८३

**ஹே ராமபத்ராச்ரய யோகிசந்த்ர ப்ரஸந்நமூர்த்தௌ பரித்ருச்யமாநே ।**
**தாபத்ரயம் நாசமுபைதி பும்ஸாம் மமாந்தகாரம் விநிஹந்து ஸத்ய: ॥ 83**

*ஹே ராம பத்திர! மங்களத்தின் இருப்பிடமே! யோகிகளில் சிறந்தவரே! உம் தெளிந்தவடிவம் புலப்பட ஆதிதைவிக, - ஆதிபௌதிக- ஆத்யாத்மிக தாபங்கள் மறையும். அது என் உள்ளத்து இருட்டை உடன் அகற்றட்டும். (83)*

नीलाभ्रबृन्द निखिलेश जगन्निवास
राजीवनेत्र रमणीयगुणाभिराम ।
श्रीराम दैत्यकुलमर्दन रामचन्द्र
त्वत्पादपद्ममनिशं कलयामि चित्ते ॥ ८४

**நீலாப்ரப்ருந்த நிகிலேச ஜகந்நிவாஸ**
**ராஜீவநேத்ர ரமணீயகுணாபிராம ।**
**ஸ்ரீராம தைத்யகுலமர்தந ராமசந்த்ர**
**த்வத்பாதபத்மமநிசம் கலயாமி சித்தே ॥ 84**

*கார்மேகக் குவியலே! அனைவரின் ஈச! உலகில் பரவியுள்ளவரே! தாமரைக் கண்ணரே! குணங்களால் மனத்தைக் கவர்பவரே! ஸ்ரீ ராம! அஸுரர்குலத்தை அழித்தவரே! ராமசந்திர! உம் திருவடித் தாமரையை எப்போதும் உள்ளத்தில் கொள்வேன். (84)*

कुवलयदलनीलः पीतवासाः स्मितास्यो
विविधरुचिरभूषाभूषितो दिव्यमूर्तिः ।
दशरथकुलनाथो जानकीप्राणनाथो
निवसतु मम चित्ते सर्वदा रामचन्द्रः ॥ ८५

**குவலயதலநீல: பீதவாஸா: ஸ்மிதாஸ்யோ**
**விவிதருசிரபூஷாபூஷிதோ திவ்யமூர்த்தி: ।**
**தசரதகுலநாதோ ஜாநகீப்ராணநாதோ**
**நிவஸது மம சித்தே ஸர்வதா ராமசந்த்ர: । 85**

*அல்லிதளம் போல் கருத்தவர், செம்மஞ்சளாடை உடுத்தியவர், புன்சிரிப்பவர், பல அழகிய அணிகள் பூண்டவர், தெய்வீக வடிவம் கொண்டவர், தசரதரின் குலத்தின் நாதர், ஜானகியின் உயிருக்குயிரான நாதர், அந்த ராமசந்திரன் எப்போதும் என் உள்ளத்தில் வசிக்கட்டும். (85)*

सजलजलदनीलं सन्मुनिस्तुत्यलीलं
सुगमनिगममूलं यातुधानान्तकालम् ।
दशरथनृपबालं सत्कृपापूर्णलीलं
भजतु भुवनखेलं भक्तसंस्तुत्यशीलम् ॥ ८६

ஸஜலஜலதநீலம் ஸந்முநிஸ்துத்யலீலம்
ஸுகமநிகமமூலம் யாதுதாநாந்தகாலம் ।
தசரதந்ருபபாலம் ஸத்க்ருபாபூர்ணலீலம்
பஜது புவநகேலம் பக்தஸம்ஸ்துத்யசீலம் ॥ 86

*நீருண்ட மேகம் போன்றவர், நல்ல முனிவர்களால் போற்றப் பெற்ற லீலைகளுள்ளவர், எளிதில் உணரப்பெறுகிற வேதத்தின் வேர், அரக்கர்களின் யமன், தசரத அரசரின் புதல்வர், நல்ல பரிவு நிறைந்த லீலைகள் கொண்டவர், உலகோடு விளையாடுபவர், பக்தர்களால் துதிக்கப் பெற்ற நன்னடைமுறை கொண்டவர், அவரை என் மனம் அடையட்டும். (86)*

दशरथवरपुत्रं जानकीसत्कलत्रं
दशमुखहरदक्षं पद्मपत्रायताक्षम् ।
करधृतशरचापं चारुमुक्ताकलापं
रघुकुलनृपवर्यं राममीडे शरण्यम् ॥ ८७

தசரதவரபுத்ரம் ஜாநகீஸத்கலத்ரம்
தசமுகஹரதக்ஷம் பத்மபத்ராயதாக்ஷம் ।
கரத்ருதசரசாபம் சாருமுக்தாகலாபம்
ரகுகுலந்ருபவர்யம் ராமமீடே சரண்யம் ॥ 87

*தசரதரின் நல்ல புதல்வர், ஜானகியின் நல்ல கணவர், ராவணனை அழிப்பதில் நிபுணர், அழகிய முத்தாபரணங்கள் பூண்டவர், ரகுகுலத்தரசர்களில் சிறந்தவர், சரண்புகத்தக்கவர். அந்த ராமரைத் துதிக்கிறேன். (87)*

**रामं वीरासनस्थं विमलरविनिभं भासमानस्वरूपं**
**श्यामं सीतासमेतं स्मित रुचिरमुखं कुण्डलोद्दीप्तगण्डम् ।**
**श्रीवत्स श्रीनिवासं सुरविटपितटन्यस्तसिंहासनस्थं**
**दिव्याकल्पोज्ज्वलाङ्गं दिविजपतिनुतं ध्यानयज्ञेन यक्ष्ये ।।८८**

**ராமம் வீராஸநஸ்தம் விமலரவிநிபம் பாஸமாநஸ்வரூபம்**
**ச்யாமம் ஸீதாஸமேதம் ஸ்மித ருசிரமுகம் குண்டலோத்தீப்தகண்டம்।**
**ஸ்ரீவத்ஸ ஸ்ரீநிவாஸம் ஸுரவிடபிதடந்யஸ்தஸிம்ஹாஸநஸ்தம்**
**திவ்யாகல்போஜ்ஜ்வலாங்கம் திவிஜபதிநுதம் த்யாநயஜ்ஞேந யக்ஷ்யே॥**

*வீராஸனத்தில் அமர்ந்தவர், மாசற்ற சூரியனுக்கு ஈடானவர், ஒளிமிக்க வடிவம் கொண்டவர், கருமேனியர், ஸீதையுடன் கூடியவர், புன் சிரிப்பால் அழகிய முகமுள்ளவர், குண்டல ஒளியால் பிரகாசிக்கிற கன்னமுள்ளவர், ஸ்ரீ வத்ஸத்தையும் லக்ஷ்மியையும் தாங்குபவர், கற்பக மரத்தடியில் அமைந்த ஸிம்ஹாஸனத்தில் இருப்பவர், இவரை தியானம் என்ற வேள்வியால் வழிபடுகிறேன். (88)*

**श्रीरामभद्राश्रयसद्गुरूणां पादारविन्दं भजतां नराणाम् ।**
**आरोग्यमैश्वर्यमनन्तकीर्तिमन्ते च विष्णोः पदमस्ति सत्यम्।।**

**ஸ்ரீராமபத்ராச்ரயஸத்குரூணாம் பாதாரவிந்தம் பஜதாம் நராணாம் ।**
**ஆரோக்யமைச்வர்யமநந்தகீர்திமந்தே ச விஷ்ணோ: பதமஸ்தி ஸத்யம் ॥**

*ஸ்ரீராம பத்ரரை அண்டிய நல்ல குருவின் திருவடித் தாமரையை வழிபடுகிற மனிதர்களுக்கு நோயின்மையும் மேலாண்மையும் எல்லையற்ற புகழும் இறுதியில் விஷ்ணு பதமும் உண்டு. இது உண்மை. (89)*

रणहतदनुजेन्द्रो राजराजात्मचन्द्रः
समदरिपुमृगेन्द्रः सन्मनोऽम्भोधिचन्द्रः ।
ललितघननगेन्द्रो लक्ष्मणानन्दसान्द्रो
महितसुजनचन्द्रो मैथिलीप्राणचन्द्रः ॥ ९०

ரணஹததநுஜேந்த்ரோ ராஜராஜாத்மசந்த்ர:
ஸமதரிபும்ருகேந்த்ர: ஸந்மநோऽம்போதிசந்த்ர: ।
லலிதகநநகேந்த்ரோ லக்ஷ்மணாநந்தஸாந்த்ரோ
மஹிதஸுஜநசந்த்ரோ மைதிலீப்ராணசந்த்ர: ॥ 90

*ஸ்ரீ ராமன் போரில் அரக்கர்களை அழித்தவர், அரசர்களுக்கு அரசர், சந்திரன் போன்றவர், கொழுத்த எதிரிகளைச் சிங்கமாக அழிப்பவர், நல்லோரின் மனமாகிய கடலைப் பொங்கி எழச்செய்கிற சந்திரன். எளிய மேகத்தைத் தாங்குகிற மலை, லக்ஷ்மணனுக்கு ஆனந்தத்தின் செரிவைத் தருபவர், நல்லோரைப் பெருமைப்படுத்துக்ற சந்திரன். மைதிலியின் உயிருக்குச் சந்திரன். (90)*

नमः कोदण्डहस्ताय सन्धीकृतशराय च ।
दण्डिताखिलदैत्याय रामायापन्निवारिणे ॥ ९१

நம: கோதண்டஹஸ்தாய ஸந்தீக்ருதசராய ச ।
தண்டிதாகிலதைத்யாய ராமாயாபந்நிவாரிணே ॥ 91

*கோதண்டத்தைக் கையில் கொண்டவரும் அம்பைப் பொறுத்தியுள்ளவரும் எல்லா அரக்கர்களையும் தண்டித்தவரும் ஆபத்தைத் தடுப்பவருமான ராமனுக்கு வந்தனம். (91)*

न जानन् जानकीजानौ रामे तत्वमपि प्रभौ ।
धिक्कुर्याद्यमदूतान् स यो नरस्तत्वमीहते ॥ ९२

ந ஜாநந் ஜாநகீஜாநௌ ராமே தத்வமபி ப்ரபௌ ।
திக்குர்யாத்யமதூதாந் ஸ யோ நரஸ்தத்வமீஹதே ॥ 92

பிரபுவான ஜானகியின் மணாளனை ராமனது உண்மையான தத்துவமறியாதவன் கூட, யமதூதர்களை உதறித்தள்ளுவான். தத்வமறிய முற்பட்டவனைப் பற்றி என்ன கேள்வி?(92)

रामो मे हृदि सन्निधिं रमयतां रामं भजे दुष्कृतं
रामेणापहृतं नमो भगवते रामाय रामाच्छुभम्।
वक्ष्ये श्रीरघुनन्दनस्य सुकृतेर्दासोऽस्म्यहं सर्वदा
नित्यं कोसलकन्यकाप्रियसुते रामे मनो वर्तताम्।। ९३

ராமோ மே ஹ்ருதி ஸந்நிதிம் ரமயதாம் ராமம் பஜே துஷ்க்ருதம்
ராமேணாபஹ்ருதம் நமோ பகவதே ராமாய ராமாச்சுபம் ।
வக்ஷ்யே ஸ்ரீரகுநந்தநஸ்ய ஸுக்ருதேர்தாஸோऽஸ்ம்யஹம் ஸர்வதா
நித்யம் கோஸலகந்யகாப்ரியஸுதே ராமே மநோ வர்ததாம் ॥ 93

ராமன் என் உள்ளத்தில் இருப்பதை விரும்பட்டும். ராமனை வழிபடுகிறேன். ராமனால் என் பாபம் பறிக்கப்பட்டது. பகவானான ராமனுக்கு வந்தனம். ராமனிடமிருந்து மங்களம் பெருகட்டும். ரகுநந்தனன் என்ற நற்செயலாளருக்கு நான் எப்போதும் அடிமை. கோஸல அரசனின் மகளின் அன்புமிக்க புதல்வரிடம் என் மனம் இருக்கட்டும். (93)

कोदण्डनिर्मुक्त शराग्रखण्डनं
प्रचण्डविष्वग्भुजदण्डमण्डनम् ।
प्रचण्डचण्डांशुसमानमण्डनं
भजामि रामं रणरङ्गमण्डनम् ।। ९४

கோதண்டநிர்முக்த சராக்ரகண்டநம்
ப்ரசண்டவிஷ்வக்புஜதண்டமண்டநம் ।
ப்ரசண்டசண்டாம்சுஸமாநமண்டநம்
பஜாமி ராமம் ரணரங்கமண்டநம் ॥ 94

ராமன் கோதண்டத்திலிருந்து விடுபட்ட அம்பின் நுனியால் துண்டிப்பவர், வலிவு மிக்க தடிபோன்ற கையை மேனோக்கி

*வைத்திருப்பவர், உக்ரமான ஸூரிய ஒளி கொண்ட ஆபரணங்கள் பூண்டவர், போரரங்கில் சிறப்பாகக் காட்சி தருபவர், அவரை நான் அடைந்துள்ளேன். (94)*

**सिंहासनस्थं मुनिसिद्धसेव्यं रक्तोत्पलालङ्कृतपादपद्मम् ।**
**सीतासमेतं शशिसूर्यनेत्रं रामं भजे राघवरामचन्द्रम् ॥ ९५**

**ஸிம்ஹாஸநஸ்தம் முநிஸித்தஸேவ்யம் ரக்தோத்பலாலங்க்ருதபாதபத்மம் ।**
**ஸீதாஸமேதம் சசிஸூர்யநேத்ரம் ராமம் பஜே ராகவராமசந்த்ரம் ॥ 95**

*ஸிம்ஹாஸனத்தில் அமர்ந்திருப்பவர், முனிவர்களாலும் சித்தர்களாலும் ஸேவிக்கப் பெறுபவர், செவ்வல்லியால் அலங்கரிக்கப் பெற்ற திருவடி கொண்டவர், ஸீதையுடன் கூடியவர், சந்திரனையும் ஸூரியனையும் கண்களாகக் கொண்டவர், ராமன், ராகவன், ராமசந்திரன், இவரை அடைந்துள்ளேன். (95)*

**दयारूपे भूपे रघुकुलकलापे सुहृदये**
**भुजस्तम्भे दम्भेतरविजयगुम्भे विहरताम् ।**
**महावीरे धीरे दशरथकुमारे परिसरद्**
**गुणारामे रामे दशमुखविरामे मम मनः ॥ ९६**

**தயாரூபே பூபே ரகுகுலகலாபே ஸுஹ்ருதயே**
**புஜஸ்தம்பே தம்பேதரவிஜயகும்பே விஹரதாம் ।**
**மஹாவீரே தீரே தசரதகுமாரே பரிஸரத்**
**குணாராமே ராமே தச்முகவிராமே மம மந: ॥ 96**

*தயையின் வடிவானவர், பூமியை ஆள்பவர், ரகுவம்சத்தின் அணி, நல்லிதயம் உள்ளவர், தூண் போன்ற கைகளுள்ளவர், ஜம்பமில்லாத வெற்றியைக் கொண்டாடுபவர், மஹாவீரர், தீரர், தசரதரின் புதல்வர், நற்குணங்களின் தோட்டம். ராவணனை ஓயச் செய்தவர், அந்த ராமனுடன் என்மனம் சுற்றிவந்து உலாவட்டும். (96)*

**गतेष्वनेकेषु भवेषु पापव्रतेष्वमूर्तेषु न योगतीर्थैः ।**
**वित्रस्तसर्वेषु नृणां कुलेशे संजायते भक्तिरनन्तमीडे ॥ ९७**

கதேஷ்வநேகேஷு பவேஷு பாபவ்ரதேஷ்வமூர்தேஷு ந யோகதீர்தை:।
வித்ரஸ்தஸர்வேஷு ந்ருணாம் குலேசே ஸஞ்ஜாயதே பக்திரநந்தமீடே ॥

*பல பிறவிகள் கழிந்து, பாபங்கள் வலிவிழந்து உருவிழந்த பின், யோகத்தாலோ புனித நீராடலாலோ பிறரைப் பயமுறுத்தாமல், குலத்தலைவரான ராமனிடம் பக்தி உண்டாகிறது, அந்த முடிவற்ற ஸத்யப் பொருளைத் துதிக்கிறேன். (97)*

श्रीरामभद्राश्रितयोगिवर्य पादाब्जयुग्मं सततं भजेऽहम्।
यच्चक्षुषी धाम जनप्रवेशं तच्चक्षुषी पश्यति यस्य चेतः ॥ ९८

ஶ்ரீராமபத்ராச்ரிதயோகிவர்ய பாதாப்ஜயுக்மம் ஸததம் பஜேऽஹம் ।
யச்சக்ஷுஷீ தாம ஜநப்ரவேசம் தச்சக்ஷுஷீ பச்யதி யஸ்ய சேத: ॥ 98

*ஸ்ரீ ராம பத்ர! யோகிகளில் சிறந்தவரால் அண்டப் பெற்றவரே! உம் திருவடிகளை எப்போதும் புகலடைகிறேன். மக்களின் சென்றடையுமிடம். அந்த பரந்தாமனைப் பார்ப்பவையே கண்கள். அவரை உணர்கிற உள்ளம் கொண்டவரது கண்களே கண்கள். (98)*

न ग्रस्तस्तमसा न चाह्नि मलिनो दर्शे नो कर्शितो
नैवास्तं गतवान् न चाङ्किततनुर्नो पाक्षिकश्रीरपि ।
लोकालोक नगेन्द्रलङ्घनविधौ नो पङ्गुभावङ्गतो
निर्दोषो गुणसागराद्रघुपतेस्तेजो यशश्चन्द्रमाः ॥ ९९

ந க்ரஸ்தஸ்தமஸா ந சாஹ்நி மலிநோ தர்சேந நோ கர்சிதோ
நைவாஸ்தம் கதவாந் ந சாங்கிததநுர்நோ பாக்ஷிகஶ்ரீரபி ।
லோகாலோக நகேந்த்ரலங்கநவிதௌ நோ பங்குபாவங்கதோ
நிர்தோஷோ குணஸாகராத்ரகுபதேஸ்தேஜோ யசச்சந்த்ரமா: ॥ 99

*ரகுபதியின் பேரொளியும் புகழும் ஆற்றலுமான சந்திரன் கிரஹணமடைவதில்லை. பகலில் மறைவதில்லை. அமாவாசையில் இளைப்பதில்லை. அஸ்தமிப்பதில்லை. அதன் இடையே முயல் முதலிய கரும்புள்ளி இல்லை. (ஒரு பக்ஷத்தில் மங்கி) மற்றொரு பக்ஷத்தில் மட்டும் ஒளிபெற்றதில்லை. லோகாலோகம் என்ற*

*உலகின் வெளி விளிம்பிலுள்ள மலையைச் சுற்றுவதால் நொண்டியாவதில்லை. தோஷமற்றவன். குணக்கடலான ராமனிடமிருந்து வெளிப்பட்டவன். (99)*

नागानामयुतं तुरङ्गनियुतं सार्धं रथानां शतं
पादाताः शतकोटियुद्ध दलिता नृत्यत्कबन्धो रणे ।
एवं कोटिसहस्रनर्तनविधौ चञ्चच्चलद्घण्टिका
यामार्धं परमात्मनो रघुपतेः कोदण्डघण्टारवः ॥ १००

**நாகாநாமயுதம் துரங்கநியுதம் ஸார்தம் ரதாநாம் சதம்
பாதாதா: சதகோடியுத்த தலிதா ந்ருத்யத்கபந்தோ ரணே ।
ஏவம் கோடிஸஹஸ்ரநர்தநவிதௌ சஞ்சச்சலத்கண்டிகா
யாமார்தம் பரமாத்மநோ ரகுபதே: கோதண்டகண்டாரவ: ॥** 100

*யானைகள் 10000, குதிரைகள் லக்ஷம், தேர்கள் 150, நூறு கோடி காலாட்படை வீரர்கள், போரில் தலையில்லாத முண்டங்கள் நடமாடுகின்றன. ஆயிரம் கோடி முண்டங்களின் நடனம் அரையாமம் மட்டும் நடந்தது. அது வரை நடனத்திற்கு மணி ஓசை பரமாத்மாவான ரகுபதியின் வில்லில் கட்டிய மணி எழுப்பியது. (100)*

भजेहं सदा राममिन्दीवराभं
भवारण्यदावानलाभाभिधेयम् ।
भवानीहृदा भावितानन्दरूपं
भवाभावहेतुं भवानीप्रसन्नम् ॥ १०१

**பஜேஹம் ஸதா ராமமிந்தீவராபம்
பவாரண்யதாவாநலாபாபிதேயம் ।
பவாநீஹ்ருதா பாவிதாநந்தரூபம்
பவாபாவஹேதும் பவாநீப்ரஸந்நம் ॥** 101

*அல்லி போன்ற வண்ணம் கொண்ட ராமனை நான் எப்போதும் வழிபடுகிறேன். அவர், பிறவிக் கடலைக் காட்டுத்தீயாக எரிக்கிற நாமம் கொண்டவர், பார்வதியின்*

*உள்ளத்தால் உணரப் பெற்ற பேரானந்தவடிவினர், பிறவியற்ற நிலைக்குக் காரணமானவர், பார்வதிக்கு அருள் புரிந்தவர். (101)*

सुरानीक दुःखौघनाशैक हेतुं
नराकारदेहं निराकारमीड्यम् ।
परेशं परानन्दरूपं वरेण्यं
हरिं राममीशं भजे भारनाशम् ॥ १०२

ஸுராநீக து:கௌகநாசைக ஹேதும்
நராகாரதேஹம் நிராகாரமீட்யம் ।
பரேசம் பராநந்தரூபம் வரேண்யம்
ஹரிம் ராமமீசம் பஜே பாரநாசம் ॥ 102

*தேவர்களின் படையினரின் துயர்க்குவியலை அழித்தவர், மனித உடல் கொண்டவர், உருவற்றவர், துதிக்கு உரியவர், பேராளுனர், பேரானந்த வடிவினர், விரும்பத்தக்கவரில் சிறந்தவர், ஹரி, ராமன், சுமையைக் குறைக்கிற ஈசன், அவரை வழிபடுகிறேன். (102)*

प्रपन्नाखिलानन्द दोहप्रपन्नं
प्रपन्नार्तिनिःशेषनाशाभिधानम् ।
तपोयोग योगीशभावाभिभाव्यं
कपीशादिमित्रं भजे रामचन्द्रम् ॥ १०३

ப்ரபந்நாகிலாநந்த தோஹப்ரபந்நம்
ப்ரபந்நார்திநி:சேஷநாசாபிதாநம் ।
தபோயோக யோகீசபாவாபிபாவ்யம்
கபீசாதிமித்ரம் பஜே ராமசந்த்ரம் ॥ 103

*சரணடைந்தவருக்கு ஆனந்தப் பெருக்கை அளிப்பவர், புகலடைந்தவரின் துயரனைத்தையும் அழிக்கிற நாமப் பெருமை உள்ளவர், தபோயோகத்தில் ஆழ்ந்த சிறந்த யோகிகளின் உள்ளத்தால் உணரப் பெற்றவர், ஸுக்ரீவன் முதலானோரின் நண்பர், அந்த ராமசந்திரனைப் புகலடைகிறேன். (103)*

स्फुरद्रत्न केयूर हाराभिरामं धराभारभूतासुरानीकदावम् ।
शरच्चन्द्रवक्त्रं लसत्पद्मनेत्रं दुरासाद्यपारं भजे रामचन्द्रम् ॥ १०४

**ஸ்புரத்ரத்ந கேயூர ஹாராபிராமம்**
**தராபாரபூதாஸுராநீகதாவம் ।**
**சரச்சந்த்ரவக்த்ரம் லஸத்பத்மநேத்ரம்**
**துராஸாத்யபாரம் பஜே ராமசந்த்ரம் ॥** 104

*ரத்னத்தாலான கேயூரம், ஹாரம் இவற்றின் ஒளியால் அழகானவர், பூமிக்குப் பாரமான அசுரக் கூட்டத்தைக் காட்டுத் தீயாக எரித்தவர், சரத் காலத்து சந்திரன் போன்று அழகிய முகம் உள்ளவர், தாமரைக் கண்களால் அழகர், எல்லை காண இயலாதவர், இந்த ராமசந்திரனை வழிபடுகிறேன். (104)*

सुराधीशनीलाभनीलाङ्गकान्तिं
विराधादिरक्षोगणानीकनाशम् ।
किरीटादिशोभं पुरारातिलाभं
भजे रामचन्द्रं रघूनामधीन्द्रम्॥ १०५

**ஸுராதீசநீலாபநீலாங்ககாந்திம்**
**விராதாதிரக்ஷோகணாநீகநாசம் ।**
**கிரீடாதிசோபம் புராராதிலாபம்**
**பஜே ராமசந்த்ரம் ரகூநாமதீந்த்ரம் ॥** 105

*இந்திர நீலம் போன்ற நீலமேனியொளி கொண்டவர், விராதன் முதலிய அரக்கர் கூட்டத்தை அழித்தவர், கிரீடம் முதலியவற்றால் அழகுற்றவர், சிவனால் அடையப் பெற்றவர், ரகுக்களின் தலைவரான ராமசந்திரனை வழிபடுகிறேன். (105)*

लसच्चन्द्रकोटिप्रकाशादि पीठे
समासीनमङ्के समादाय सीताम् ।
स्फुरद्धेमवर्णां लसत्कञ्जपुञ्जां
भजे रामचन्द्रं निवृत्त्यादितन्त्रम् ॥ १०६

லஸச்சந்த்ரகோடிப்ரகாசாதி பீடே
ஸமாஸீநமங்கே ஸமாதாய ஸீதாம் ।
ஸ்புரத்தேமவர்ணாம் லஸத்கஞ்ஜபுஞ்ஜாம்
பஜே ராமசந்த்ரம் நிவ்ருத்த்யாதிதந்த்ரம் ॥ 106

*கோடி சந்திர ஒளி கொண்ட ஆதிபீடத்தில் தங்க நிற ஒளி கொண்டவளும், தாமரை மாலை அணிந்தவளுமான ஸீதையை மடியில் கொண்டவர், பற்றின்மை முதலியவற்றைச் செயல்முறையில் கொண்டவர், இந்த ராமசந்திரனை வழிபடுகிறேன். (106)*

सदा भोगभाजां सुदूरे विभान्तं
मुदा योगभाजामदूरे विभान्तम् ।
चिदानन्दकन्दं सदा राघवेशं
विदेहात्मजानन्दकन्दं प्रपद्ये ॥ १०७

ஸதா போகபாஜாம் ஸுதூரே விபாந்தம்
முதா யோகபாஜாமதூரே விபாந்தம் ।
சிதாநந்தகந்தம் ஸதா ராகவேசம்
விதேஹாத்மஜாநந்தகந்தம் ப்ரபத்யே ॥ 107

*போகிகளுக்கு வெகுதூரத்தில் இருப்பவர், யோகிகளுக்கு அருகில் காட்சி தருபவர், பேருணர்வும் பேரானந்தமும் முளைவிடுகிற கிழங்கானவர், ரகுகுலத்தவரின் ஈசன், வைதேஹியின் ஆனந்தக் கிழங்கு. அந்த ராமனைச் சரணடைகிறேன். (107)*

महायोगमायाविशेषानुयुक्तो
विभासीश लीलानराकारवृत्तिः ।
त्वदानन्दलीलाकथापूर्णकण्ठाः
सदानन्दरूपा भवन्तीह लोके ॥ १०८

மஹாயோகமாயாவிசேஷாநுயுக்தோ
விபாஸீச லீலாநராகாரவ்ருத்தி: ।

**த்வதாநந்தலீலாகதாபூர்ணகண்டா:**
**ஸதாநந்தரூபா பவந்தீஹ லோகே ॥** 108

*மாபெரும் யோகமாயையின் சிறப்புடன் கூடியவராக, விளையாட்டாக மனித வடிவில் நீர் காட்சி தருகிறீர். உமது ஆனந்த லீலை பற்றிய கதையைக் கூறுபவர், எப்போதும் பேரானந்த வடிவில் திளைக்கின்றனர்.(108)*

यस्य प्राणनिवारणावनकृते स्यातां निदानौ विभोः
ऐन्द्र ध्वांक्षपतेः कृपा जलनिधौ कोपप्रसादौ मुदे ।
भूयाद् वासवनीलसन्निभतनुर्वामाङ्कसेव्यद्वधूः
सोऽयं दुष्टनिशाटपाटनपटुः श्रीराघवो नः सदा ॥ १०९

**யஸ்ய ப்ராணநிவாரணாவநக்ருதே ஸ்யாதாம் நிதாநௌ விபோ:**
**ஐந்த்ர த்வாம்க்ஷபதே: க்ருபா ஜலநிதௌ கோபப்ரஸாதௌ முதே ।**
**பூயாத் வாஸவநீலஸந்நிபதநுர்வாமாங்கஸேவ்யத்வதூ:**
**ஸோऽயம் துஷ்டநிசாடபாடநபடு: ஸ்ரீராகவோ ந: ஸதா ॥** 109

*உயிரை நீக்குவதிலும் காப்பதிலும் உள்ள திறமையைக் காட்டுகிற அடையாளம், இந்திரன் மகனை காகாஸுரனிடம் காட்டிய பரிவு, கடலிடம் காட்டிய கோபமும் பரிவும், அந்த பெருமையுள்ள ஸ்ரீ ராகவன், இந்திர நீல ரத்ன ஒளிகொண்ட மேனியுடன், இடது புறத்தில் மனைவியுடன் துஷ்ட அரக்கரின் அழிப்பில் தேர்ச்சி பெற்றவராக எப்போதும் நம் முன் காட்சி தரட்டும். (109)*

दुष्टो वा कलुषात्मकोऽपि पिशुनो दुर्मार्गसञ्चारि वा
मातृघ्नोऽपि पितृघ्नवर्तनरतः सन्मौनिनिन्दापरः ।
योऽयं स्मृत्यमृतं मधुरसं वक्ता च श्रोता लिखेत्
स प्राप्नोति निरन्तरैहिकसुखं निर्वाण सौख्यं ततः ॥ ११०

**துஷ்டோ வா கலுஷாத்மகோऽபி பிசுநோ துர்மார்கஸஞ்சாரி வா**
**மாத்ருக்நோऽபி பித்ருக்நவர்தநரத: ஸந்மௌநிநிந்தாபர: ।**
**யோऽயம் ஸ்ம்ருத்யம்ருதம் மதுரஸம் வக்தா ச ச்ரோதா லிகேத்**
**ஸ ப்ராப்நோதி நிரந்தரைஹிகஸுகம் நிர்வாண ஸௌக்யம் தத: ॥**

துஷ்டனோ, மாசுள்ளவனோ, கருமியோ, கெட்டவழியில் நடப்பவனோ, தாயைக் கொன்றவனோ, தந்தையைக் கொன்றவனோ, முனிவரைப் பழிப்பவனோ, எவராயினும் நினைக்க இனிய உம் சரிதத்தைச் சொல்பவனும் கேட்பவனும் எழுதுபவனும் தடையற்ற இம்மைச் சுகமும் முக்தி ஸௌகமும் பெறுவான். *(110)*

* * *



श्रीरामभद्रदीक्षितकृतं

# रामकर्णरसायनम्

*ஸ்ரீ ராம பத்திரதீக்ஷிதர் இயற்றிய*

## *ஸ்ரீ ராம கர்ண ரஸாயனம்*

## प्रथमो निष्यन्दः

**முதல் நிஷ்யந்தம்**

दिशतु स कुशलं जिते दशास्ये
विधिविहितस्तुतिवेदितस्वरूपः।
उपदिशति शिवो नृणां यदीयं
मनुमविमुक्तपुरे विमुक्तिहेतोः॥ १

**திசது ஸ குசலம் ஜிதே தசாஸ்யே**
**விதிவிஹிதஸ்துதிவேதிதஸ்வரூப: ।**
**உபதிசதி சிவோ ந்ருணாம் யதீயம்**
**மநுமவிமுக்தபுரே விமுக்திஹேதோ: ॥ 1**

*காசியில் ராமனது திருநாமமாகிய மந்திரத்தைச் சிவபெருமான் மக்கள் முக்தி பெறுவதற்காக உபதேசிக்கிறார். ராவணன் வெல்லப்பட்டதும் பிரும்மாவின் துதியால் தன்னிலை விளக்கம் பெற்ற அந்த ராமர் நலம் வழங்கட்டும். (1)*

विहितविधिमपास्यता निषिद्धा-
न्यपि चरताप्यकृताक्षनिग्रहेण ।
यदघमुपचितं मया यतिष्ये
रघुवरसंस्मरणेन तन्निमार्ष्टुम् ॥ २

**விஹிதவிதிமபாஸ்யதா நிஷித்தா-**
**ந்யபி சரதாப்யக்ருதாக்ஷநிக்ரஹேண ।**
**யதகமுபசிதம் மயா யதிஷ்யே**
**ரகுவரஸம்ஸ்மரணேந தந்நிமார்ஷ்டும் ॥ 2**

எனக்கென வகுக்கப் பெற்ற நடைமுறைகளிலிருந்து விலகி, தடை செய்யப்பெற்ற நடைமுறைகளைக் கையாண்டு, புலன்களைக் கட்டுப்படுத்தாத என்னால் சேமிக்கப் பெற்ற பாபத்தைக் ரகுவரனின் ஸ்மரணத்தால் போக்கிக் கொள்ள முயல்வேன்.(2)

चिरपरिचितया मनो विकृष्टं
दिशि दिशि वासनया न मे नियाम्यम् ।
इति कवनपथेऽवतार्य राम-
स्मरणविधावनघे करोम्युपायम् ॥ ३

சிரபரிசிதயா மநோ விக்ருஷ்டம்
திசி திசி வாஸநயா ந மே நியாம்யம் ।
இதி கவநபதேऽவதார்ய ராம-
ஸ்மரணவிதாவநகே கரோம்யுபாயம் ॥ 3

வெகு நாட்களாகப் பழக்கப்படுத்தப்பட்ட வாஸனையால் திசை மாறித் திசை இழுத்துச் செல்லப்படுகிற மனம் கட்டுப்படுத்த இயலாததெனக் கண்டு குறையில்லாத ராமஸ்மரண வழியில் கவிபாட இறங்கி மனத்தை அடக்க உபாயத்தை ஏற்றுள்ளேன்.(3)

प्रकृतिरिति सरस्वतीति लक्ष्मी-
रिति गिरिजेति जगन्मयीति वा याम् ।
गदति मुनिगणः कवित्वसिद्ध्यै
कथमपि तां कलये विदेहकन्याम् ॥ ४

ப்ரக்ருதிரிதி ஸரஸ்வதீதி லக்ஷ்மீ-
ரிதி கிரிஜேதி ஜகந்மயீதி வா யாம் ।
கததி முநிகண: கவித்வஸித்த்யை
கதமபி தாம் கலயே விதேஹகந்யாம் ॥ 4

*பிரகிருதி என்றும் ஸரஸ்வதீ, லக்ஷ்மீ, உமை, உலகமே வடிவானவள் என்றும் முனிவர் கூட்டம் கூறுகிற விதேக அரசரின் மகளைக் கவிபாடும் திறமை பெறத் தியானிக்கிறேன்.(4)*

मधुरभणितये पतिव्रतानां
मकुटमणिं कलये महीकुमारीम् ।
पतिकृतरिपुपातनप्रतिज्ञा-
दलनभयादहितेऽप्यदत्तशापाम् ॥ ५

**மதுரபணிதயே பதிவ்ரதாநாம்**
**மகுடமணிம் கலயே மஹீகுமாரீம் ।**
**பதிக்ருதரிபுபாதநப்ரதிஜ்ஞா-**
**தலநபயாதஹிதேऽப்யதத்தசாபாம் ॥ 5**

*பதிவிரதைகளுக்குள்ளே மகுடத்து ரத்தினமும் தன் கணவர் தன் எதிரிகளை மாய்ப்பதாக சொன்ன உறுதி மொழி சிதறி விடுமோ என்ற பயத்தில் தன்னிடம் நேர்மையற்று நடந்த ராவணனைச் சபிக்காதிருந்தவளுமான பூமியின் புதல்வியை உள்ளத்தில் காண்கிறேன்.(5)*

हृदय विषयमेव सेवसे किं
यदयमुदग्रविषोपमः क्रमेण ।
मदयति च निहन्ति च प्रकामं
तदयनमेत्य गिरां भजस्व रामम् ॥ ६

**ஹ்ருதய விஷயமேவ ஸேவஸே கிம்**
**யதயமுதக்ரவிஷோபம: க்ரமேண ।**
**மதயதி ச நிஹந்தி ச ப்ரகாமம்**
**ததயநமேத்ய கிராம் பஜஸ்வ ராமம் ॥ 6**

*இதயமே! வெளிப்பொருளையே நாடுகிறாயே? அது சிறிது சிறிதாகக் கொடிய விஷமாகக் கூடியது. முதலில் உணர் விழக்கச்*

*செய்யும், பின் முற்றிலும் அழித்துவிடும். வாக்கு சென்றடையுமிடமான ராமனைச் சரணடைவாய்.(6)*

रघुवरचरणारविन्दभक्ति-
च्छलमकरन्दनिरन्तराभिषिक्ताः।
वकुलपरिमला गिरो मदीयाः
कविकुलकर्णरसायनानि सन्तु ॥ ७

ரகுவரசரணரவிந்தபக்தி-
ச்சலமகரந்தநிரந்தராபிஷிக்தா: ।
வகுலபரிமலா கிரோ மதீயா:
கவிகுலகர்ணரஸாயநாநி ஸந்து ॥ 7

*என் சொற்கள் ரகுவரனின் திருவடித் தாமரைகளில் பக்தியைக் காரணமாக்கி வெளியாகிற மகரந்தத் துகள்களால் எப்போதும் நீராட்டப் பெற்றவை, மகிழம் பூவின் மணம் கொண்டவை. இவை கவிகளின் காதுகளுக்கு இனிய ரஸாயனமாகட்டும்.(7)*

भरतविदितपादुकाप्रभावं
धरणिसुतादरणीयनामधेयम् ।
करतलधृतकार्मुकं पुमांसं
मरतकनीलशरीरमाश्रयामः॥ ८

பரதவிதிதபாதுகாப்ரபாவம்
தரணிஸுதாதரணீயநாமதேயம் ।
கரதலத்ருதகார்முகம் புமாம்ஸம்
மரதகநீலசரீரமாச்ரயாம: ॥ 8

*பரதனால் உணரப் பெற்ற பாதுகையின் பெருமை கொண்டவர், பூமியின் புதல்வியான ஸீதையால் அன்புடன் கூறப் பெறுகிற திருநாமம் கொண்டவர், கையில் வில்லேந்தியவர்,*

*மரகத ரத்தினம் போன்று மேனி வண்ணம் கொண்டவர். அந்தப் பரமபுருஷனை அண்டி நிற்போம்.(8)*

निटिलनयननिर्वृतिप्रदाख्यं
कुटिलनिशाचरकुम्भिनां मृगेन्द्रम् ।
कटिलसदसिमम्बुदाभमेकं
जटिलमुरीकृतचापबाणमीडे ॥ ९

நிடிலநயநநிர்வ்ருதிப்ரதாக்யம்
குடிலநிசாசரகும்பிநாம் ம்ருகேந்த்ரம் ।
கடிலஸதஸிமம்புதாபமேகம்
ஜடிலமுரீக்ருதசாபபாணமீடே ॥ 9

*நெற்றிக் கண்ணரான சிவபெருமானுக்கு தன் நாமத்தால் அமைதி தருபவர். கொடும் அரக்கர்களாகிய யானைகளுக்குச் சிங்கமாகக் காட்சி தருபவர், இடுப்பில் உடைவாள் கொண்டவர், கார்மேக வண்ணத்தினர், வில்லும் அம்பும் ஏந்திய அந்தச் சடையுள்ளவரைத் துதிக்கிறேன்.(9)*

निलयमखिलमङ्गलस्य रक्षो-
बलयवसप्रबलायितानलास्त्रम् ।
कलयति हृदयं विदेहकन्या-
वलयपदाङ्कितकन्धरं पुमांसम् ॥ १०

நிலயமகிலமங்கலஸ்ய ரக்ஷோ-
பலயவஸப்ரபலாயிததாநலாஸ்த்ரம் ।
கலயதி ஹ்ருதயம் விதேஹகந்யா-
வலயபதாங்கிதகந்தரம் புமாம்ஸம் ॥ 10

*எல்லா மங்களங்களுக்கும் இருப்பிடம், அரக்கர் சேனையாகிய வைக்கோலை எரிக்கிற அக்னி அஸ்திரம், விதேகரின் மகளின் கைவளையல்களால் அடையாளம் பெற்றுள்ள*

*கழுத்துள்ளவர், அந்தப் பரமபுருஷனை என் உள்ளம் உருவகப்படுத்துகிறது.(10)*

विमोहयति विष्टपत्रयजनान्गुणारोपण-
    क्षणत्रुटितचण्डिकारमणचापचण्डध्वनौ ।
जयत्यसकृदुन्मिषत्पुलकयोरपेतत्रपं
    परस्परनिरीक्षणं रघुवरक्षमाकन्ययोः।। ११

விமோஹயதி விஷ்டபத்ரயஜநாந்குணாரோபண-
    க்ஷணத்ருடிதசண்டிகாரமணசாபசண்டத்வநௌ ।
ஜயத்யஸக்ருதுந்மிஷத்புலகயோரபேதத்ரபம்
    பரஸ்பரநிரீக்ஷணம் ரகுவரக்ஷமாகந்யயோ: ॥ 11

*நாண் பூட்டும் போது ஒடிந்த சிவனின் வில்லின் சத்தம் மூவுலகையும் கலக்கியது. அப்போது ரகுவரரும் பூமியின் புதல்வியும் அடிக்கடி மயிர் கூச்செறிய, நாணமகன்று ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டது சிறப்புடன் விளங்குகிறது.(11)*

करोमि हृदयाम्बुजे कमपि वीरमम्भोनिधेः
    निबन्धनमबिन्धनज्वलनबन्धुतूणीशयम् ।
न कश्चिदपि दृश्यते जगति यस्य शक्तो जये
    स्मरप्रहितजानकीनयनपद्मबाणं विना ।। १२

கரோமி ஹ்ருதயாம்புஜே கமபி வீரமம்போநிதே:
    நிபந்தநமபிந்தநஜ்வலநபந்துதூணீசயம் ।
ந கச்சிதபி த்ருச்யதே ஜகதி யஸ்ய சக்தோ ஜயே
    ஸ்மரப்ரஹிதஜாநகீநயநபத்மபாணம் விநா ॥ 12

*கடலைக் கட்டியவர், வடவை நெருப்பு போன்ற அம்புறுத்தூணி கொண்டவர், மன்மதன் ஏவிய ஜானகியின் பார்வையாகிற பாணத்தைத் தவிர வேறு எவரும் மூவுலகிலும் அவரை வெல்ல இயலாது. அத்தகைய ஒரு வீரரை உள்ளத் தாமரையில் கொள்கிறேன்.(12)*

क एष दलदुत्पलद्युतिरुदारवेषोज्ज्वलः
स्वयं विशति मे मनस्त्वरितमाः परिज्ञायते ।
स एष ननु जानकीकुचतटीपटीरद्रव-
प्रसक्तघनवासनाघुमुघुमायमानः प्रभुः ॥ १३

க ஏஷ தலதுத்பலத்யுதிருதாரவேஷோஜ்ஜ்வல:
ஸ்வயம் விசதி மே மநஸ்த்வரிதமா: பரிஜ்ஞாயதே ।
ஸ ஏஷ நநு ஜாநகீகுசதடீபடீரத்ரவ-
ப்ரஸக்தகநவாஸநாகுமுகுமாயமாந: ப்ரபு: ॥ 13

*மலர்கிற நீல அல்லி போன்ற ஒளி கொண்டவர், பெருமை மிக்க ஆடையணி பூண்டவர், யார் இவர்! என் உள்ளத்தினுள் வேகத்துடன் தானே நுழைகிறாரே! இவர் ஜானகியின் மார்பகத்துச் சந்தனப் பூச்சுடன் ஒட்டியதால் குமு குமு என மணக்கிற அந்தப் பிரபு அல்லவா? (13)*

भजे शरधनुर्धरं विकटचित्रकूटाटवी-
चरं कमपि शंकरप्रणयिनीप्रियाख्यं प्रभुम् ।
स्फुटाकलितकुङ्कुमा वदति यस्य वक्षस्तटी
मृगेन्द्ररसितत्रसज्जनकजाहठालिङ्गनम् ॥ १४

பஜே சரதநுர்தரம் விகடசித்ரகூடாடவீ-
சரம் கமபி சங்கரப்ரணயிநீப்ரியாக்யம் ப்ரபும் ।
ஸ்புடாகலிதகுங்குமா வததி யஸ்ய வக்ஷஸ்தடீ
ம்ருகேந்த்ரரஸிதத்ரஸஜ்ஜநகஜாஹடாலிங்கநம் ॥ 14

*அம்பும் வில்லும் ஏந்தியவர், அடர்ந்த சித்திர கூடத்துக் காட்டில் சுற்றி வருபவர், சிவனுக்கினியவளான உமை விரும்புகிற பெயர் கொண்டவர், பளிச்சென குங்குமப்பூக் குழம்பு பூசப்பட்ட அவரது மார்பு சிங்கக் கர்ஜனையால் பயந்த ஸீதை இறுக அணைத்துக் கொண்டதைக் காட்டுகிறது. அவரை அண்டி நிற்கிறேன். (14)*

चिरस्य विधुरस्य मे विषयघर्मघोरातपैः
पयोदनिचयोदयप्रतिनिधिः किलेयं दशा ।
नराघमुषि राघवे यदधुना मनः प्रीयते
समस्तसुरमस्तकप्रणतिकर्मणि ब्रह्मणि ॥ १५

சிரஸ்ய விதுரஸ்ய மே விஷயகர்மகோராதபை:
பயோதநிசயோதயப்ரதிநிதி: கிலேயம் தசா ।
நராகமுஷி ராகவே யததுநா மந: ப்ரீயதே
ஸமஸ்தஸுரமஸ்தகப்ரணதிகர்மணி ப்ரஹ்மணி ॥ 15

*வெளிப் பொருள் நாட்டமாகிற கொடும் வெயிலில் வெகுநாட்கள் வாடி நிற்கிற எனக்குப் பெருமேகக் கூட்டம் எதிரில் தோன்றியதற்கொப்பான நிலை இன்று ஏற்பட்டுள்ளது. தேவர்களனைவராலும் வணங்கப் பெற்ற பரம் பொருளும் மனிதனின் பாபக்குவியலை அகற்றுபவருமான ராகவனிடம் இப்போது என் மனம் அன்பால் நிறைவு காண்கிறதே? (15)*

कटीघटितवल्कलं घनलसज्जटामण्डलं
करात्तशरकार्मुकं कमलपत्रमित्रेक्षणम् ।
तमालदलमेचकं धरणिकन्यकाकामुकं
तरङ्गितकृपारसं तरणिवंशदीपं भजे ॥ १६

கடீகடிதவல்கலம் கநலஸஜ்ஜடாமண்டலம்
கராத்தசரகார்முகம் கமலபத்ரமித்ரேக்ஷணம் ।
தமாலதலமேசகம் தரணிகந்யகாகாமுகம்
தரங்கிதக்ருபாரஸம் தரணிவம்சதீபம் பஜே ॥ 16

*இடுப்பில் மரவுரி கட்டியவர், அடர்ந்த மேகம் போன்ற சடை மண்டலமுள்ளவர், கைகளில் அம்பும் வில்லும் ஏந்தியவர், தாமரை இதழுடன் நட்புள்ள கண்கள் கொண்டவர், பச்சிலை போன்ற அழகிய மேனி வண்ணம் கொண்டவர், பூமியின்*

*புதல்வியிடம் காதல் கொண்டவர், அலைபாய்கிற பரிவுப் பெருக்குள்ளவர், ஸுர்ய வம்சத்தின் ஒளி விளக்கானவர், அவரை வழிபடுகிறேன்.(16)*

अचोदितकुलक्रमं पुनरपृष्टजातिक्रियं
नयानयविचारणाविधुरमस्तशङ्काकणम् ।
उपेयुषि विभीषणे झटिति दत्तमस्याभयं
मयेति समुदीरिता भगवतो गिरः पान्तु नः ॥ १७

அசோதிதகுலக்ரமம் புரநப்ருஷ்டஜாதிக்ரியம்
நயாநயவிசாரணாவிதுரமஸ்தசங்காகணம் ।
உபேயுஷி விபீஷணே ஜடிதி தத்தமஸ்யாபயம்
மயேதி ஸமுதீரிதா பகவதோ கிர: பாந்து ந: ॥ 17

*குலவழி முறை கேட்காமல், ஜாதியும் தொழிலும் பற்றி வினவாமல், நட்பு கொள்வது ஏற்றதா, ஏற்கத்தகாததா என விசாரிக்காமல், துளி கூட ஐயமின்றி தன்னை வந்தடைந்த விபீஷணனிடம் உடன் இவனுக்கு என்னால் அபயமளிக்கப் பெற்றதென வெளிவந்த பகவானின் வாக்குகள் நம்மை காப்பாற்றட்டும். (17)*

कह्लाराम्बुजगन्धिमन्दपवने खेलन्मृगालंकृते
कूजत्कोकिलबालचूतगहने कूले सरय्वाः शुभे ।
पश्यान्वेति शुकं शुकीति चुबुके गृह्णन्करेण प्रियां
चित्ते भाति स कोऽपि मे दशशिरोमत्तेभकण्ठीरवः॥ १८

கல்ஹாராம்புஜகந்திமந்தபவநே கேலந்ம்ருகாலங்க்ருதே
கூஜத்கோகிலபாலசூதகஹநே கூலே ஸரய்வா: சுபே ।
பச்யாந்வேதி சுகம் சுகீதி சுபுகே க்ருஹ்ணந்கரேண ப்ரியாம்
சித்தே பாதி ஸ கோऽபி மே தசசிரோமத்தேபகண்டீரவ: ॥ 18

नेत्राह्लाद प्रवीणो निजतनुमहसा सन्ततं लक्ष्मणेतो
नित्यं सन्मार्गगामी सकलमपि हरंस्तापमत्यन्तशुद्धः ।
आलोकेनैव दूरादपि दृढतमसां छेदने संप्रवृत्तो
भद्राद्रौ किन्नु रात्रिञ्चरनिधनपरो भासते रामचन्द्रः ॥ १५

நேத்ராஹ்லாத ப்ரவீணோ நிஜதநுமஹஸா ஸந்ததம் லக்ஷ்மணேதோ
நித்யம் ஸந்மார்ககாமீ ஸகலமபி ஹரம்ஸ்தாபமத்யந்தசுத்த: ।
ஆலோகேநைவ தூராதபி த்ருடதமஸாம் சேதநே ஸம்ப்ரவ்ருத்தோ
பத்ராத்ரௌ கிந்நு ராத்ரிஞ்சரநிதநபரோ பாஸதே ராமசந்த்ர: ॥ 15

*அவர் ராமன் எனும் சந்திரன். தன் மேனி ஒளியால் எப்போதும் கண்களுக்கு இன்பமளிப்பவர். லக்ஷ்மணனுடன் கூடியவர். எப்போதும் நல்வழி செல்பவர், எல்லா தாபத்தையும் நீக்குபவர், மிகவும் தூயவர். தூரத்திலிருந்தே கடும் இருளையும் (அறியாமையையும்) பார்வையாலேயே போக்குவதில் முனைந்தவர். ஆனால் பத்ராசலத்தில் இரவில் நடமாடும் அரக்கரை அழிப்பவராமே! (நிலவு இரவில் நடமாடுபவருக்கு ஒளி தந்து வழிகாட்டி உதவும் என அனைவரது எதிர்பார்ப்பு. இங்கு நடமாடுபவர் அரக்கரானதால் மாற்றம்.) (15)*

चित्रं भद्राचलेन्दो तव किल चरितं वर्ण्यतां कैर्वचोभिः
सीताया विप्रयोगे करुणकरणता प्रस्फुटा ते विलापैः ।
त्यक्त्वा तामेव देवीं पुरजनवचसा गर्भिणीं काननान्ते
धीरोऽभूः पालयन्क्ष्मां मखकरणपरो वत्सराणां सहस्रम् ॥ १६

சித்ரம் பத்ராசலேந்தோ தவ கில சரிதம் வர்ண்யதாம் கைர்வசோபி:
ஸீதாயா விப்ரயோகே கருணகரணதா ப்ரஸ்புடா தே விலாபை: ।
த்யக்த்வா தாமேவ தேவீம் புரஜநவசஸா கர்பிணீம் காநநாந்தே
தீரோऽபூ: பாலயந்க்ஷ்மாம் மககரணபரோ வத்ஸராணாம் ஸஹஸ்ரம் ॥ 16

*பத்ராசலத்தின் மீது உலாவுகிற சந்திரனே! உன் நடைமுறையை எவ்வாறு வர்ணிப்பேன்? பஞ்சவடிக்காட்டில் சீதையை விட்டுப்பிரிந்ததும் உன் சோகம் நிரம்பிய உள்ளம்*

*உனது புலம்பலால் வெளியே தெரிந்தது. அதே நீ நகர மக்களின் அவச்சொல் கேட்டு அதே சீதையை கருவுற்றிருந்தபோது நடுக்காட்டில் விட்டுவந்ததுடன், பூமியை ஆயிரம் ஆண்டுகள் ஆண்டாய் ! வேள்வி புரிய முனைந்தாய். (அது என்ன சித்தப்போக்கு?) (16)*

**काहं मान्द्यैकभूमिः क्व रघुतिलको विद्वदीड्यांघ्रिपद्मः**
**स्तोत्रायाथापि तस्य प्रसरति हृदयं वार्यमाणं मयापि ।**
**मोदेनाथापि नूनं रघुकुलवृषभो भद्रशैलाग्रवासी**
**स्तम्भारोहप्रयत्नं हसति किल शिशुं वीक्ष्य नन्दन्पिता हि ॥१७**

**க்வாஹம் மாந்த்யைகபூமி: க்வச ரகுதிலகோ வித்வதீட்யாங்க்ரிபத்ம:**
**ஸ்தோத்ராயாதாபி தஸ்ய ப்ரஸரதி ஹ்ருதயம் வார்யமாணம் மயாபி।**
**மோதேநாதாபி நூநம் ரகுகுலவ்ருஷபோ பத்ரசைலாக்ரவாஸீ**
**ஸ்தம்பாரோஹப்ரயத்நம் ஹஸதி கில சிசும் வீக்ஷ்ய நந்தந்பிதா ஹி ॥ 17**

*அறியாமையின் ஒரே இருப்பிடமான நான் எங்கே! பேரறிஞர்களால் தாமரை போன்ற திருவடிகளில் வணங்கப் பெறுகிற ரகுகுல திலகன் எங்கே! நான் தடுத்தும் என் உள்ளம் அவனைத்துதிக்க முன் வருகிறது. பத்ராசலத்திலுள்ள ரகுகுலத்தின் காளையான ராமன் அதனுல் ஆனந்தமடையக் கூடும். தன் சிசு தூணின் மீது தாவி ஏற முயல்வதைக் கண்டு தந்தை கைகொட்டிச் சிரிப்பானே! (அது இயல்புதானே !) (17)*

**शृण्वन्तो वा पठन्तस्तव चरितवरं हन्त वाल्मीकिबद्धं**
**भक्ता आनन्दबाष्पाकुलनयन युगाः किञ्च रोमाञ्चवन्तः ।**
**यत्रासीरंस्ततो मामपि नय भगवन्भद्र भद्राचलेश**
**प्राप्स्याम्युत्तीर्य मोहाम्बुधिमथ भवतस्तेजसेद्धं पदं तत् ॥१८**

**ச்ருண்வந்தோ வா படந்த ஸ்தவ சரிதவரம் ஹந்த வால்மீகிபத்தம்**
**பக்தா ஆநந்தபாஷ்பாகுலநயந யுகா: கிஞ்ச ரோமாஞ்சவந்த: ।**
**யத்ராஸீரம்ஸ்ததோ மாமபி நய பகவந் பத்ர பத்ராசலேச**
**ப்ராப்ஸ்யாம்யுத்தீர்ய மோஹாம்புதிமத பவதஸ்தேஜஸேத்தம் பதம் தத் ॥**

பகவானே! மங்களமானவரே! பத்ராசல நாதரே! வால்மீகி இயற்றிய உன் சிறந்த வரலாற்று நூலான ஸ்ரீமத் ராமாயணத்தைக் கேட்கிற பக்தர்கள் ஆனந்தக் கண்ணீர் பெருக, உடல் புல்லரிக்க அமர்ந்திருக்குமிடத்திற்கு என்னையும் அழைத்துச்செல்வாய் ! நானும் மதிமயக்கக் கடலைக் கடந்து உன் பேரொளிமிக்க அந்தப் பெருநிலை அடைவேனே!(18)

ऐश्वर्यं धनलाभमप्यधिकतां स्वेषु प्रशंसावहां
अर्थिभ्योऽर्पणमन्न वस्त्रधन सद्विद्यादिकानामपि ।
ये वाञ्छन्ति त एकदापि मनुजा गोदावरीमज्जनाः
भद्राद्रीश्वरपादपद्मयुगलीनम्रा भवन्तु क्षणम् ।। १९

ஐச்வர்யம் தநலாபமப்யதிகதாம் ஸ்வேஷு ப்ரசம்ஸாவஹாம்
அர்திப்யோऽர்பணமந்ந வஸ்த்ரதந ஸத்வித்யாதிகாநாமபி ।
யே வாஞ்சந்தி த ஏகதாபி மநுஜா கோதாவரீ மஜ்ஜநா:
பத்ராத்ரீச்வரபாதபத்மயுகலீநம்ரா பவந்து க்ஷணம் ॥ 19

பேராளுமையையும் செல்வப் பேற்றையும் தன் மக்களிடையே புகழ் தருகிற பெருமையையும் தன்னை நாடியவருக்கு உணவும் ஆடையும் செல்வமும் நற்கல்வியும் வழங்கத்தகுதியும் பெற விரும்புபவர், ஒருதடவையாவது கோதாவரியில் நீராடி பத்ராசல நாதரது தாமரை போன்ற திருவடியில் ஒரு கணமாவது வணங்கி நிற்கட்டும். (19)

भो लोकाः शृणुतेदमल्पधिषणेनाप्युक्तमल्पं वचो
वैदुष्यं कवितां धनं निपुणतां यच्चेतरत्कीर्तिकृत् ।
रामः स्वेषु परीक्षते न कुहचिद्भक्तिं परं पश्यति
क्षेमार्थं तदुपेत भद्रधरणीभृन्नाथदृष्टेः पदम् ।। २०

போ லோகா: ச்ருணுதேதமல்பதிஷணேநாப்யுக்தமல்பம் வசோ
வைதுஷ்யம் கவிதாம் தநம் நிபுணதாம் யச்சேதரத்கீர்திக்ருத் ।
ராம: ஸ்வேஷு பரீக்ஷதே ந குஹசித்பக்திம் பரம் பச்யதி
க்ஷேமார்தம் ததுபேத பத்ரதரணீப்ருந்நாதத்ருஷ்டே: பதம் ॥ 20

*மக்களே! இந்தச் சிறுபுத்தியுடையவனின் அற்பமான சொல்லைக் கேட்பீர். ராமன் தன்னைச்சார்ந்தவரது அறிவாற்றலையோ வல்லமையையோ மற்றும் புகழ் தரக் கூடியதெதனையுமோ சோதிப்பதில்லை. பக்தியை மட்டும் காண்கிறார். அதனால் நலம் பெற பத்ராசல நாதரின் பார்வையில் படுவீர். (20)*

रामो राम इतीव सर्वजनतासंघुष्यमाणे विभौ
अज्ञानादिव ते कथां सुरमुनिं पप्रच्छ वल्मीकभूः ।
तेन ज्ञातमिदं तवोत्तमकथा वक्त्राद्गृहीता गुरोः
मुक्त्यै स्यादपि भुक्तये तनुभृतां भद्राद्रिनाथ प्रभो ॥ २१

**ராமோ ராம இதீவ ஸர்வஜநதாஸங்குஷ்யமாணே விபௌ**
**அஜ்ஞாநாதிவ தே கதாம் ஸுரமுநிம் பப்ரச்ச வல்மீகபூ: ।**
**தேந ஜ்ஞாதமிதம் தவோத்தமகதா வக்த்ராத்க்ருஹீதா குரோ:**
**முக்த்யை ஸ்யாதபி புக்தயே தநுப்ருதாம் பத்ராத்ரிநாத ப்ரபோ ॥ 21**

*பத்ராசல நாதனே! பெருமானே! ராமன் ராமன் என உலகம் முழுவதும் புகழப் பெறுகிற பெருமானைப் பற்றிச் சிறிதும் அறியாதவர் போல் வால்மீகி தேவர்ஷியான நாரதரிடம் கேட்டறிந்தார். அதிலிருந்து (நான்) புரிந்து கொண்டது இது மட்டுமே. குருவின் வாயிலாக உன் உத்தமமான கதை கேட்பது முக்திபெற உதவும். மனிதனின் இவ்வுலக வாழ்விற்கும் பெரிதும் உதவும் என்பதே, (21)*

हंसं त्वामवयन्ति शास्त्रनिपुणाः सन्मानसे सञ्चर-
स्येवं चेत्तव पक्षपातमुचितं मन्ये महीपेश्वर ।
तस्य स्थानममुं जनं कलयितुं काक्षेपकर्ताऽस्ति ते
भद्राद्रीश्वर भावयास्य समयं सज्जोऽस्म्यहं सर्वदा ॥ २२

**ஹம்ஸம் த்வாமவயந்தி சாஸ்த்ரநிபுணா: ஸந்மாநஸே ஸஞ்சர-**
**ஸ்யேவம் சேத்தவ பக்ஷபாதமுசிதம் மந்யே மஹீபேச்வர ।**
**தஸ்ய ஸ்தாநமமும் ஜநம் கலயிதும் க்வாக்ஷேபகர்தாऽஸ்தி தே**
**பத்ராத்ரீச்வர பாவயாஸ்ய ஸமயம் ஸஜ்ஜோऽஸ்ம்யஹம் ஸர்வதா ॥ 22**

சாஸ்திரம் கற்றுத் தேர்ந்தவர் உன்னை அன்னப்பறவையாகக் (ஹம்ஸமாக - ஆத்மாவாக) கருதுகின்றனர். அதனுல் நல்லோரின் மனமாகிய மானஸஸரஸில் நீந்திவருகிறுய். பாலும் நீரும் கலக்கப்பெற அதில் நீரையும் பாலையும் பிரித்துப்பாலைப்பருகுகிற பக்ஷபாதம் (ஒரு சார்பில் அக்கரை கொள்வது) இயல்பானதே. அரசர்களுக்கும் அரசனே! அந்த நிலையில் என்னைப் பாலாக நீ கருதுவாயே எனில் அதனை எவர் தடுப்பார்? இவனுக்கு அதற்குரிய நேரத்தை அமைத்துத் தருவாய். நான் எந்நேரமும் அவ்வாருக ஆயத்தமடைய உள்ளேன். (22)

यद्ब्रह्माहुरपाणिपादं अमनो निष्कर्णचक्षुर्महत्
तद्द्रष्टुं कथमीश्महे कथमहो नन्तुं समीहामहे ।
इत्यालोच्य विषीदतां तनुमतां क्षेमाय रामात्मना
तद्भद्राचल सीम्नि राजतितरां सर्वान्पुमर्थान् ददत् ।। २३

யத்ப்ரஹ்மாஹுரபாணிபாதம் அமநோ நிஷ்கர்ண சக்ஷுர்மஹத்
தத்த்ரஷ்டும் கதமீச்மஹே கதமஹோ நந்தும் ஸமீஹாமஹே ।
இத்யாலோச்ய விஷீததாம் தநுமதாம் க்ஷேமாய ராமாத்மநா
தத்பத்ராசல ஸீம்நி ராஜதிதராம் ஸர்வாந்புமர்தாந் ததத் ॥ 23

பிரும்மம் காலும் கையுமில்லாதது, மனமற்றது, காதும் கண்ணுமில்லாதது, மிக மிகப் பெரிது என்பர். அதனை எவ்வாறு காண்பது? எவ்வாறு வணங்க முடியும்? இவ்வாறு நினைத்துச் சோர்வுறுகிற மாந்தரின் நலனுக்காக பத்ராசல எல்லையில் எல்லா புருஷார்த்தங்களையும் வழங்குகிற பெருமான் ராமனுகக் காட்சி தருகிறுர் (23)

वाङ्मे निर्गुण मानुषस्तुतिहता चेतो हतं चिन्तया
हस्तोऽयं मम दुर्जनार्पितधनादानेन नित्यं हतः ।
पुष्टं दुष्टपरान्नतश्च जठरं स त्वं प्रसीदेः कथं
निर्व्याजां प्रतिपालये तव कृपां भद्राद्रिनाथ प्रभो ।। २४

வாங்மே நிர்குண மாநுஷஸ்துதிஹதா சேதோ ஹதம் சிந்தயா
ஹஸ்தோऽயம் மம துர்ஜநார்பிததநாதாநேந நித்யம் ஹத: ।
புஷ்டம் துஷ்ட பராந்நதச்ச ஜடரம் ஸ த்வம் ப்ரஸீதே: கதம்
நிர்வ்யாஜாம் ப்ரதிபாலயே தவ க்ருபாம் பத்ராத்ரிநாத ப்ரபோ ॥ 24

*ஈன குணமுள்ளவனைப்பாடி என் வாக்கு வீணானது. உள்ளம் வேண்டாத சிந்தனையால் பாழானது. இந்தக்கையும் அற்பன் அளித்த பணத்தை வாங்கி எப்போதும் பலனற்றதாயுள்ளது. வயிறும் தூய்மை கெட்டவன் தந்த உணவை ஏற்று வளர்க்கப்பட்டது. பத்ராசல நாத! பெருமானே! காரணம் எதிர்பாராத உன் கிருபை ஒன்றையே எதிர்பார்க்கிறேன். (24)*

माया त्वां जनयत्यजं विदधती नामानि ते सादरं
ब्रह्मा विष्णुरुमापती रघुपतिः कृष्णश्च कल्कीति च ।
मत्त्राणाय नियोजयेद्यदि तदा कुर्याश्च मद्रक्षणं
श्रीभद्राद्रिविभो मदीयदुरितैः सा नैवमाधाद् ध्रुवम् ॥ २५

மாயா த்வாம் ஜநயத்யஜம் விதததீ நாமாநி தே ஸாதரம்
ப்ரஹ்மா விஷ்ணுருமாபதீ ரகுபதி: க்ருஷ்ணச்ச கல்கீதி ச ।
மத்த்ராணாய நியோஜயேத்யதி ததா குர்யாச்ச மத்ரக்ஷணம்
ஸ்ரீபத்ராத்ரிவிபோ மதீயதுரிதை: ஸா நைவமாதாத் த்ருவம் ॥ 25

*மாயை பிறவிக்குட்படாத உன்னைப் பிறக்கச் செய்தது. கரிசனத்துடன் பிரும்மா, விஷ்ணு, உமாபதி, ரகுபதி, கிருஷ்ணன், கல்கி எனப் பெயரிட்டழைத்தது. அது என்னைக் காக்கும்படி உன்னைப்பணித்தால் அப்போது என்னை நீ காப்பாற்றுவாய். ஸ்ரீபத்ராசல நாத! எல்லாமானவனே! அந்த மாயை என்பாபத்தின் காரணமாக உன்னைப்பணிக்கவில்லை என்பது நிச்சயம். (25)*

कल्याणं कमलापतेः कलयतात्कम्रोऽवतारः स नो
यः कङ्काय च योगिनामसुलभं स्थानं स्वयं प्राददात् ।
गत्वाऽन्यं पुरुषं धिया मुनिवधूं भ्रष्टां पुनाति स्म यो
यो वा दक्षिणदेशजान्सुखयितुं भद्राचले तिष्ठति ॥ २६

கல்யாணம் கமலாபதே: கலயதாத் கம்ரோऽவதார: ஸ நோ
ய: கங்காய ச யோகிநாமஸுலபம் ஸ்தாநம் ஸ்வயம் ப்ராததாத் ।
கத்வாऽந்யம் புருஷம் தியா முநிவதூம் ப்ரஷ்டாம் புநாதி ஸ்ம யோ
யோ வா தக்ஷிணதேசஜாந் ஸுகயிதும் பத்ராசலே திஷ்டதி ॥ 26

*லக்ஷ்மியின் கணவனின் ஒரு அழகிய அவதாரம் நமக்கு மங்களம் அளிக்கட்டும். அது கழுகுக்கு யோகிகளுக்கும் கிட்டாத மேனிலையைத் தானே அளித்தது. ஒரு ஆணை மனமாற நாடித் தூய்மையிழந்த அகலியை என்ற பெண்ணைத் தூயவளாக்கியது. அது தென் திசையில் வாழ்பவரை இன்புறச் செய்ய பத்ராசலத்தில் உள்ளது. (26)*

कल्पद्रुः कविताजुषां कुलगुरुर्विद्येप्सया श्राम्यतां
भारूपः प्रणतान्तरस्थतमसां भोग्यं परं योगिनाम् ।
कालः कौणपसन्ततेश्च करुणा मूर्ता महागस्विनां
भद्रं दातुमनर्गलं विजयते भद्राचले कोऽपि नः ॥ २७

கல்பத்ரு: கவிதாஜுஷாம் குலகுருர்வித்யேப்ஸயா ச்ராம்யதாம்
பாரூப: ப்ரணதாந்தரஸ்ததமஸாம் போக்யம் பரம் யோகிநாம் ।
கால: கௌணபஸந்ததேச்ச கருணா மூர்தா மஹாகஸ்விநாம்
பத்ரம் தாதுமநர்கலம் விஜயதே பத்ராசலே கோऽபி ந: ॥ 27

*கவனசக்தியுள்ளவருக்குக் கற்பகமரம்; நற்கல்வி பெற உழைப்பவருக்கு குல குரு; உள்ளத்திருட்டிற்குப் பேரொளி; யோகிகளுக்கு அடைய வேண்டிய பெருநிலை, அரக்கர் வம்சத்தினருக்கு யமன். பெரும்பாபிகளுக்கு உருவெடுத்த கருணை, அவ்வாறு பத்ராசலத்தில் ஒருவன் மங்களத்தைத் தடையின்றி அளிப்பதற்கெனக் காட்சி தருகிறான். (27)*

यस्याङ्घ्रेः सकृदर्पणाद्रघुकुलक्ष्मपाल सिंहासनं
प्राप्तं पादुकयाऽपि राक्षसपतिः कीशाधिपश्च स्वयम् ।
आस्तां प्रेमभरेण नुन्नमनसौ सच्चामरग्राहिणौ
यस्यासौ मम सेव्यतामधिगतो भद्राचलस्योपरि ॥ २८

யஸ்யாங்க்ரே: ஸக்ருதர்பணாத்ரகுலக்ஷ்மாபால ஸிம்ஹாஸநம்
ப்ராப்தம் பாதுகயாऽபி ராக்ஷஸபதி: கீசாதிபச்ச ஸ்வயம் ।
ஆஸ்தாம் ப்ரேமபரேண நுந்நமநஸௌ ஸச்சாமரக்ராஹிணௌ
யஸ்யாஸௌ மம ஸேவ்யதாமதிகதோ பத்ராசலஸ்யோபரி ॥ 28

*அவரது திருவடிகளில் ஒரு தடவை தன்னைக் கிடத்திக் கொண்டதால் பாதுகையும் ரகுகுலத்தரசருக்கான ஸிம்ஹாஸனத்தில் அமர்ந்தது. அவ்வாறே சரணடைந்த ராக்ஷஸர்களின் அரசனான விபீஷணனும் குரங்குகளின் அரசனான ஸுக்ரீவனும் தாமே அன்புச்சுமை தூண்டிய மனத்தினராக சாமரம் ஏந்தியுள்ளனர். அந்தப் பெருமான் பத்ராசலத்தின் மீது என்னால் பணிவிடை செய்யப் பெறுபவராக உள்ளார். (28)*

चापो यस्य तनोति पातकततेः सेतौ कृताग्रः क्षतिं
बाणो यस्य कपीशभावमददात्पुत्राय भासां निधेः ।
वीक्षा यस्य च पापिनोऽपि भवति स्वर्लोकनिःश्रेणिका
सोऽयं वाङ्मनसातिगामि महिमा जागर्ति भद्राचले ॥ २९

சாபோ யஸ்ய தநோதி பாதகததே: ஸேதௌ க்ருதாக்ர: க்ஷதிம்
பாணோ யஸ்ய கபீசபாவமததாத்புத்ராய பாஸாம் நிதே: ।
வீக்ஷா யஸ்ய ச பாபிநோऽபி பவதி ஸ்வர்லோகநி: ச்ரேணிகா
ஸோऽயம் வாங்மநஸாதிகாமி மஹிமா ஜாகர்தி பத்ராசலே ॥ 29

*இவரது வில் ஸேதுவில் நுனி பதிந்ததாக (தனுஷ்கோடி) பாப வரிசையை அழிக்கிறது. இவரது அம்பு சூர்ய குமாரனான ஸுக்ரீவனுக்கு வானரர்களின் அரசுரிமையைத் தந்தது. இவருடைய கடாட்சம் பாபிக்கும் ஸ்வர்க்கமேறப் படிவரிசையாகிறது. வாக்கிற்கும் மனத்திற்கும் எட்டாத பெரும் பொருள் பத்ராசலத்தில் காட்சி தருகிறது. (29)*

यद्वीक्षा शरभङ्गनामकमुनेः वैधात्पदात् ज्यायसी
यत्सेवा युवराजताख्यपदतः श्लाघ्या सुमित्राभुवः ।
यच्चारित्रकथाश्रुतिर्हनुमतो वैकुण्ठवासाधिका
तास्तिस्रोऽपि च भद्रशैल शिखरे लभ्याः स्वतो देहिनाम् ॥ ३०

யத்வீக்ஷா சரபங்கநாமகமுநே: வைதாத்பதாத் ஜ்யாயஸீ
யத்ஸேவா யுவராஜதாக்யபதத: ச்லாக்யா ஸௌமித்ராபுவ: ।
யச்சாரித்ரகதாச்ருதிர்ஹநுமதோ வைகுண்டவாஸாதிகா
தாஸ்திஸ்ரோऽபி ச பத்ரசைல சிகரே லப்யா: ஸ்வதோ தேஹிநாம் ॥ 31

*இவரது கடைக்கண் பார்வை சரபங்க முனிவருக்கு பிரும்மலோகவாஸத்தை விடப் பெரிது. லக்ஷ்மணனுக்கு இவரது பணிவிடை யுவராஜ பதவியை விடப் புகழுக்குரியது. இவரது கதை கேட்பது ஹனுமாருக்கு வைகுண்ட வாஸத்தைவிடப் பெரிது. அம் மூன்றுமே பத்ராசல சிகரத்தில் உயிரினமனைத்திற்கும் எளிதில் கிட்டும். (30)*

यं वक्षःस्थलमास्थिताऽपि कमला नो तत्वतो जानती
तस्यानुग्रहमीप्सतीव पदयोः सेवां सदा कुर्वती ।
सोऽयं रामवपुःप्रकाशितमहातत्त्वः स्वयं ब्रह्मणा
मूढानुग्रहकांक्षया विलसति श्रीभद्रशैलोपरि ॥ ३१

யம் வக்ஷ: ஸ்தலமாஸ்திதாऽபி கமலா நோ தத்வதோ ஜாநதீ
தஸ்யாநுக்ரஹமீப்ஸதீவ பதயோ: ஸேவாம் ஸதா குர்வதீ ।
ஸோऽயம் ராமவபு: ப்ரகாசிதமஹாதத்த்வ: ஸ்வயம் ப்ரஹ்மணா
மூடாநுக்ரஹகாங்க்ஷயா விலஸதி ஸ்ரீபத்ரசைலோபரி ॥ 31

*மார்பில் அமர்ந்திருந்தும் லக்ஷ்மி இவரை உண்மை நிலையில் உணராமல் அவரது அருள்பெற விரும்பித் திருவடிகளுக்குப் பணிவிடை புரிகிறாள். அவரே ராமன் என்றவடிவில் எனப் பிரம்மாவால் அவரது உண்மை நிலை வெளிப்படுத்தப் படுகிறது. அவரே அறிவிலிகளுக்கு அருள்புரியவென்றே ஸ்ரீபத்ராசலத்தில் காட்சி தருகிறார். (31)*

अङ्गाभाजित तोयदाय भजतां भङ्गावहाय द्विषां
गङ्गापावनताप्रदाय महिजासङ्गाधिकानन्दिने ।
पिङ्गाक्षेशसखाय मे नतिशतं रङ्गाधिराजार्चिने
तुङ्गात्युज्ज्वलभद्रशैलविलसच्छृङ्गाग्रभूवासिने ॥ ३२

அங்காபாஜித தோயதாய பஜதாம் பங்காவஹாய த்விஷாம்
கங்காபாவநதாப்ரதாய மஹிஜா ஸங்காதிகாநந்திநே ।
பிங்காக்ஷசஸகாய மே நதி சதம் ரங்காதிராஜார்சிநே
துங்காத்யுஜ்ஜ்வலபத்ர சைலவிலஸச்ச்ருங்காக்ரபூவாஸிநே ॥ 32

*(எட்டு பிராஸங்கள் கொண்ட சுலோகம்) மிக உயர்ந்து பேரொளியுடன் விளங்குகிற பத்ராசலத்தின் மீது அழகாக விளங்குகிற கொடுமுடியில் வசிக்கிறவருக்கு என் நூறு நமஸ்காரங்கள். அவர் மேகத்தைத் தன் மேனியொளியால் வென்றவர். தன்னை வழிபடுபவருக்கு மேகம் போல் விரும்பியதைப் பொழிபவர். எதிரிகளை முறியடிப்பவர். கங்கைக்கும் தூய்மை வழங்குபவர். பூமியின் புதல்வியுடன் இணைவதில் அதிகம் ஆனந்திப்பவர். செங்கண்ணனான வானரத் தலைவனான ஸுக்ரீவனின் நண்பர். ரங்கநாதரை வழிபடுபவர். (32)*

याचे त्वां रघुनाथ किञ्चन न ते दत्तेन तेन क्षतिः
सारथ्यं ददते त्वदर्थमयते भक्तिं सुमन्त्राय ते ।
यद्रूपं समदर्शयः करुणया प्रस्थास्यमानो वनं
तत्तेजोमयमीक्षितुं मम मनो भद्राचलेशेच्छति ॥ ३३

யாசே த்வாம் ரகுநாத கிஞ்சந ந தே தத்தேந தேந க்ஷதி:
ஸாரத்யம் தததே த்வதர்தமயதே பக்திம் ஸுமந்த்ராய தே ।
யத்ரூபம் ஸமதர்சய: கருணயா ப்ரஸ்தாஸ்யமாநோ வநம்
தத்தேஜோமயமீக்ஷிதும் மம மநோ பத்ராசலேசேச்சதி ॥ 33

*பத்ராசலேச! ரகுநாத! உம்மிடம் ஒன்று வேண்டுவேன். அதை வழங்குவதால் உமக்குக் குறை ஏதுமில்லை. காட்டுக்குக் கிளம்பும் போது பக்தியுடன் உமது தேரோட்டியாயிருந்த ஸுமந்திரருக்குக் கருணையுடன் நீர் காட்டிய ஒளிமயமான உருவத்தைக் காண என்மனம் விரும்புகிறது. (33)*

कारुण्यामृतवर्षुको जनकजाविद्युल्लतासङ्गवान्
सन्तापं शमयन् स्वमाश्रितवतां श्यामाभिरामाकृतिः ।

नित्यं सत्पथमाश्रितो जनतया संप्रार्थ्यसन्दर्शनः
भद्रोर्वीधरमाश्रितो विजयते रामाभिधानो घनः ॥ ३४

காருண்யாம்ருதவர்ஷுகோ ஜநகஜாவித்யுல்லதாஸங்கவாந்
ஸந்தாபம் சமயந் ஸ்வமாச்ரிதவதாம் ச்யாமாபிராமாக்ருதி: ।
நித்யம் ஸத்பதமாச்ரிதோ ஜநதயா ஸம்ப்ரார்த்யஸந்தர்சந:
பத்ரோர்வீதரமாச்ரிதோ விஜயதே ராமாபிதாநோ கந: ॥ 34

*பத்ராசலத்தைத் தன்னிடமாக அடைந்த ராமன் என்ற கரு மேகம், கருணை எனும் அமுத நீர் பொழிவது, ஜானகீ என்ற மின்னல் கொடி படர்ந்தது. தன்னை அண்டியவரின் தாபத்தைக் குறைப்பது, கரும்பச்சை நிற மேனி கொண்டது, எப்போதும் நல்வழி நடப்பது, மக்களால் காண வேண்டி விரும்பப்பெறுவது. அது வெற்றியுடன் விளங்குகிறது. (34)*

चेतो मे विषयेषु सञ्चरति न प्रह्वोऽस्मि ते पादयोः
सद्भिः साधु समागमो न कुहचित् श्रद्धा च नो कर्मणि ।
संसाराम्बुनिधिं तरीतुमनसः किं वाऽस्ति मे साधनं
भद्राद्रीश्वर ते विनाऽद्य शबरीमोक्षप्रदातः कृपाम् ॥ ३५

சேதோ மே விஷயேஷு ஸஞ்சரதி ந ப்ரஹ்வோऽஸ்மி தே பாதயோ:
ஸத்பி: ஸாது ஸமாகமோ ந குஹசித் ச்ரத்தா ச நோ கர்மணி ।
ஸம்ஸாராம்புநிதிம் தரீதுமநஸ: கிம் வாऽஸ்தி மே ஸாதநம்
பத்ராதீச்வர தே விநாऽத்ய சபரீமோக்ஷப்ரதாத: க்ருபாம் ॥ 35

*என் மனம் வெளிப்பொருளை நாடிச் செல்கிறது. நான் உன் திருவடிகளில் பணிவுள்ளவனல்ல. நல்லோருடன் நல்லிணக்கமுமில்லை. சடங்குகளில் ஈடுபாடில்லை. பத்ராசலநாத! சபரிக்கு முக்தி அளித்தவரே! பிறவிக் கடலைக்கடக்க விரும்புகிற எனக்கு உம் கருணையைத் தவிர என்ன ஸாதனம் உள்ளது? (35)*

श्रेयः पक्ष्मलयन्ति सूक्तिषु सुधां सिञ्चन्ति राज्ञां सभा-
स्वातन्वन्ति जयं समं बुधगणैर्विद्याविवादेष्वपि ।

आकिञ्चन्यमपानुदन्ति हृदयं कुर्वन्त्यहो निर्मलं
भद्राद्रीश्वर रामभद्र करुणाफुल्लत्कटाक्षाङ्कुराः ॥ ३६

ச்ரேய: பக்ஷ்மலயந்தி ஸூக்திஷு ஸுதாம் ஸிஞ்சந்தி ராஜ்ஞாம் ஸபா-
ஸ்வாதந்வந்தி ஜயம் ஸமம் புதகணைர்வித்யாவிவாதேஷ்வபி।
ஆகிஞ்சந்யமபாநுதந்தி ஹ்ருதயம் குர்வந்த்யஹோ நிர்மலம்
பத்ராதீச்வர ராமபத்ர கருணாபுல்லத்கடாக்ஷாங்குரா: ॥ 36

*பத்ராசல நாதனான ராமபத்ரனின் கருணைததும்புகிற கடாக்ஷமுளைகள், மேனிலையை கிளைவிடச் செய்கின்றன. பேச்சில் அமுதத்தைத் தெளிக்கின்றன. ராஜஸபைகளில் அறிஞர் கூட்டத்துடன் கற்றவித்தையில் வாதவிவாதம் புரியும்போது வெற்றியைத் தருகின்றன. ஏழ்மையை அகற்றுகின்றன. உள்ளத்தை அப்பழுக்கற்றதாக்குகின்றன. (36)*

चाञ्चल्यं परिहर्तुमब्धिपयसो नाथेशिषे स्वेच्छया
चेतो मे चपलं विधातुमचलं शक्ते न किं त्वत्पदे ।
ईशस्त्वं वरभद्रशैलनिलय स्थाणोर्धनुर्भञ्जने
मत्कर्माङ्कुरमीश्वरो दलयितुं किं नेति विज्ञापये ॥ ३७

சாஞ்சல்யம் பரிஹர்துமப்திபயஸோ நாதேசிஷே ஸ்வேச்சயா
சேதோ மே சபலம் விதாதுமசலம் சக்தே ந கிம் த்வத்பதே।
ஈசஸ்த்வம் வரபத்ரசைலநிலய ஸ்தாணோர்தநுர்பஞ்நே
மத்கர்மாங்குரமீச்வரோ தலயிதும் கிம் நேதி விஜ்ஞாபயே ॥ 37

*நாத ! கடலின் நீரின் சஞ்சலத் தன்மையைத் தன் விருப்பப்படி போக்க முடிந்தவருக்குச் சபலமான என் சித்தத்தைச் சலனமின்றி உன் திருவடியில் பதிக்க இயலாதோ? சிறந்த பத்ராசலத்தில் வசிப்பவரே! சிவனது வில்லை ஒடிக்க இயன்ற நீர் என் கருமம் என்ற முளையைக் கிள்ளி எறிய இயலாதோ? இவ்வாறு விண்ணப்பித்துக்கொள்கிறேன். (37)*

सेव्यस्त्वं श्रुतिशीर्षवार्धितलगैर्नित्यं मुनीनां गणैः
मूढेषु प्रथमासनं प्रथयता सेव्यो मयाऽपि स्वयम् ।

नानानन्दमयं स्वधाम नयसे मामप्यसन्देहतो
युक्तं किं नु बुधाबुधौ समतया भद्राद्रिनाथेक्षसे ॥ ३८

ஸேவ்யஸ்த்வம் ச்ருதிசீர்ஷவார்திதலகைர்நித்யம் முநீநாம் கணை:
மூடேஷு ப்ரதமாஸநம் ப்ரதயதா ஸேவ்யோ மயாऽபி ஸ்வயம் ।
நாநாநந்தமயம் ஸ்வதாம நயஸே மாமப்யஸந்தேஹதோ
யுக்தம் கிம் நு புதாபுதௌ ஸமதயா பத்ராத்ரிநாதேக்ஷஸே ॥ 38

*வேதத்தின் முடியான உபநிஷத்தெனும் கடலின் அடித்தளத்தைக் கண்ட முனிவர் கூட்டத்தால் வழிபடத்தக்க நீ, முட்டாள்களில் முதலிடம் பெற்றதைப் பெருமையாக ஏற்கிற என்னாலும் வழிபடப் பெறுபவன். ஐயமின்றி என்னையும் பல்வகை ஆனந்தமே வடிவான தன் பெருநிலையை அடையச் செய்கிறாய். பத்ராசலநாத! பேரறிஞனையும் முட்டாளையும் ஸமமாகக் காண்பது உனக்கு உசிதமா? 38*

कीर्त्यर्थं न तु भक्तितो रघुपते गुम्भन्ति ये त्वत्कथां
वाचा माक्षिकधुर्यया तव कृपापात्रत्वमायान्ति ते ।
जिह्वाचापलतो रसायनवरं ये भुञ्जते तेऽपि किं
नारोग्यं महदाप्नुवन्ति भुवने भद्राचलेश प्रभो ॥ ३९

கீர்த்யர்தம் ந து பக்திதோ ரகுபதே கும்பந்தி யே த்வத்கதாம்
வாசா மாக்ஷிகதுர்யயா தவ க்ருபாபாத்ரத்வமாயாந்தி தே ।
ஜிஹ்வாசாபலதோ ரஸாயநவரம் யே புஞ்ஜதே தேऽபி கிம்
நாரோக்யம் மஹதாப்நுவந்தி புவநே பத்ராசலேச ப்ரபோ ॥ 39

*பத்ராசலநாத! ரகுபதியே! புகழைப்பெற - பக்தியாலல்ல - உன் கதையைத் தேனை மிஞ்சுகிற இனிய சொல்லால் பாடுபவர்களும் உன் கிருபையை பெறுகின்றனர். உடலைத்திடப்படுத்துகிற சிறந்த இனிய மருந்தை நாக்கிற்கு ருசி என்று சாப்பிடுபவரும் பெரும் ஆரோக்யத்தைப் பெறுவதில்லையா? 39*

त्वद्बाणेन निमज्जितो जलनिधौ मारीचनामाऽशरः
पश्यन् राममयं जगन्मुनिततीर्भीतिभरादत्यगात् ।
पापोऽमूं गतिमानशे यदि तवाधायापराधं परं
किं वाच्यं वरभद्रशैलनिलय त्वत्पादपद्मार्चिषु ।। ४०

த்வத்பாணேந நிமஜ்ஜிதோ ஜலநிதௌ மாரீசநாமாऽசர:
பச்யந் ராமமயம் ஜகந்முநிததீர் பீதேர்பராதத்யகாத் ।
பாபோऽமூம் கதிமாநசே யதி தவாதாயாபராதம் பரம்
கிம் வாச்யம் வரபத்ரசைலநிலய த்வத்பாதபத்மார்சிஷு ॥ 40

*சிறந்த பத்ராசலத்தில் வசிப்பவனே! உன் பாணத்தால் அடிப்பட்ட மாரீசன் என்ற ராக்ஷஸன் கடலில் மூழ்கடிக்கப்பட்டு பயத்தின் சுமையால் உலகையே ராமனுக (வெளிப்பொருளனைத்தையும் ராம வடிவாகக்) கண்டான். (எங்கும் ஈசனைக் காண்கிற) முனிவர்களைவிட முன் நின்ருன். உன்னிடம் பெருந்தவற்றைச் செய்த பாபியே இந்நிலை பெறமுடிந்ததெனில் உன் திருவடிகளை அர்ச்சிப்பவர் எந்நிலை பெறுவார் எனச் சொல்ல முடியுமா? (40)*

राम त्वत्पदपद्मयोर्नखरुचिर्हार्दं तमो मे हरेत्
उद्भूता चरणाम्बुजात्तव पुरा स्रोतस्विनी द्योसदाम् ।
सोढ्वा ते जलधिप्रयुक्त शरसंसक्ताग्नितापं परं
पत्यर्थं शरणागतेव लसति श्रीभद्रशैलेश या ।। ४१

ராம த்வத்பதபத்மயோர் நகருசிர் ஹார்தம் தமோ மே ஹரேத்
உத்பூதா சரணும்புஜாத்தவ புரா ஸ்ரோதஸ்விநீ த்யோஸதாம் ।
ஸோட்வா தே ஜலதிப்ரயுக்த சரஸம்ஸக்தாக்நிதாபம் பரம்
பத்யர்தம் சரணுகதேவ லஸதி ஸ்ரீபத்ரசைலேச யா ॥ 41

*ஸ்ரீ பத்ராசல ஈச! ராம! முன்னர் உன் திருவடித் தாமரைகளிலிருந்து வானவரின் நதியான கங்கை பெருகினுள். நீ கடல் மீது பிரயோகித்த அம்பில் ஒட்டியிருந்த நெருப்பின் தாபத்தைத் தாங்கிக் கொண்டு தன்பதியான கடலரசனுக்காகச்*

சரணடைந்தவள் போல் தோன்றுகிறது. அந்த திருவடித் தாமரைகளின் நகஒளி என் உள்ளத்தின் இருட்டை அகற்றட்டும் (41).

कृत्वाऽऽगांसि बहून्यपि प्रतिदिनं त्वत्तो भयं नाप्नुयां
कृत्वाऽऽगो वधदण्डनं स बलिभुक् किं न त्वया रक्षितः ।
त्वां यातः शरणं तथाऽहमपि किं त्वां रक्षकं नाप्तवान्
भद्राद्रीश्वर वर्ष मय्यपि कृपापूर्णान् कटाक्षाङ्कुरान् ॥ ४२

க்ருத்வாऽऽகாம்ஸி பஹூந்யபி ப்ரதிதிநம் த்வத்தோ பயம் நாப்நுயாம்
க்ருத்வாऽऽகோ வததண்டநம் ஸ பலிபுக் கிம் ந த்வயா ரக்ஷித: ।
த்வாம் யாத: சரணம் ததாऽஹமபி கிம் த்வாம் ரக்ஷகம் நாப்தவாந்
பத்ராத்ரீச்வர வர்ஷ மய்யபி க்ருபாபூர்ணாந் கடாக்ஷாங்குராந் ॥ 42

பத்ராசலேச! தினமும் பல பாபங்களைச் செய்த பின்னும் உன்னிடம் பயமடைய மாட்டேன். கொலை தண்டனை பெறத்தக்க பாபத்தைச் செய்த காக்கை உன்னால் காப்பாற்றப்படவில்லையா? உன்னைச் சரணடைந்தான் அவன். நானும் உன்னைக் காப்பாளனாக்கிக் கொள்ள வில்லையா? கருணை நிறைந்த கடைக் கண்பார்வை என்ற முளைவிடுகிற விதைகளை என் மீது பொழிவாய். 42

कुर्वन्कर्म मदर्थमेष्यति ततः सिद्धिं भवानित्यमुं
पार्थायार्थमुपादिशो न खलु तद्वाक्यं मृषाऽवोचथाः ।
धुत्वा रावणमाहरन्तमवनीपुत्रीं रथात्पातयन्
पक्षच्छेदमवाप्य भद्रगिरिराट् ! गृध्रः पदं तेऽगमत् ॥ ४३

குர்வந்கர்ம மதர்தமேஷ்யதி தத: ஸித்திம் பவாநித்யமும்
பார்தாயார்தமுபாதிசோ ந கலு தத்வாக்யம் ம்ருஷாऽவோசதா: ।
துத்வா ராவணமாஹரந்தமவநீபுத்ரீம் ரதாத்பாதயந்
பக்ஷச்சேத மவாப்ய பத்ரகிரிராட் ! க்ருத்ர: பதம் தேऽகமத் ॥ 43

*''என் பொருட்டுப் பணிபுரிபவன் ஸித்தி பெறுவான்'' என குந்தியின் புதல்வனுக்கு உபதேசித்த அந்த சொல் பொய்யா? பத்ராசல அரசனே! பூமியின் புதல்வியைத் திருடிச் செல்கிற ராவணனை உதைத்து ரதத்திலிருந்து வீழ்த்தி இறக்கைகள் வெட்டப்பட்ட கழுகு உன்நிலை அடைந்ததே! (43).*

माहात्म्यं तव वेदितुं रघुपते नालं विरिञ्चादयो
वाल्मीकिस्तदवेत्तवैव कृपया लेशस्य लेशात्मना ।
सत्येवं तव वैभवं भुवि कविः को वर्णयेत्कृत्स्नशः
त्वद्दत्तां कवितां तवैव पदयोर्भद्राचलेशार्पये ॥ ४४

**மாஹாத்ம்யம் தவ வேதிதும் ரகுபதே நாலம் விரிஞ்சாதயோ
வால்மீகிஸ் ததவேத் தவைவ க்ருபயா லேசஸ்ய லேசாத்மநா।
ஸத்யேவம் தவ வைபவம் புவி கவி: கோ வர்ணயேத் க்ருத்ஸ்நச:
த்வத்தத்தாம் கவிதாம் தவைவ பதயோர்பத்ராசலேசார்பயே ॥ 44**

*பத்ராசலாதிபதியான ரகுபதியே! உன் பெருமையை உணர பிரும்மா முதலானோரும் இயலாதவரே. உன் கருணையின் துளியின் துளியால் வால்மீகி அதனை அறிந்தார். அந்நிலையில் உன் பெருமையை முழுதும் வர்ணிக்கப் பூமியில் எந்த கவியும் இயலாதவரே. உன் திருவடிகளில் நீ அருளிய கவிதையை அர்ப்பணம் செய்கிறேன். 44*

वीक्षा ते रघुनाथ हन्त शबरीमोक्षाय सङ्कल्पते
वीर्यं शङ्करचापभञ्जनकृते प्रौढिं समालम्बते ।
क्रोधो राक्षसराट्शिरोदशशतीं भूमौ क्षिपत्यञ्जसा
श्रीभद्राचलनाथ ते स्तुतिविधौ के वा वराका वयम् ॥ ४५

**வீக்ஷா தே ரகுநாத ஹந்த சபரீமோக்ஷாய ஸங்கல்பதே
வீர்யம் சங்கரசாபபஞ்ஜநக்ருதே ப்ரௌடிம் ஸமாலம்பதே।
க்ரோதோ ராக்ஷஸராட்சிரோதசசதீம் பூமௌ க்ஷிபத்யஞ்ஜஸா
ஸ்ரீபத்ராசலநாத தே ஸ்துதிவிதௌ கே வா வராகா வயம் ॥ 45**

*ரகுநாத! ஸ்ரீபத்ராசல நாத! சபரிக்கு முக்தி தர உன் பார்வை திட்டமிடுகிறது. சிவனது வில்லை ஒடிக்க உன் வீர்யம் மதர்ப்பைத் தழுவுகிறது. உன் கோபம் ராவணனது ஆயிரம் தலைகளையும் வெட்டித் தரையில் சாய்க்கிறது. உன் துதியில் ஏதுமறியாத நாங்கள் எங்கே! 45*

किं ते मे वरिवस्यया विहितया नूनं न मामीक्षसे
रक्षोवानरनायकावभवतां ते चामरग्राहिणौ ।
दासस्ते नयने गिरेरपि महादक्षो हनूमानभूत्
सर्वोर्वीपतितां स्वयं च वहसे भद्राद्रिनाथ प्रभो ॥ ४६

**கிம் தே மே வரிவஸ்யயா விஹிதயா நூநம் ந மாமீக்ஷஸே**
**ரக்ஷோவாநரநாயகாவபவதாம் தே சாமரக்ராஹிணௌ ।**
**தாஸஸ்தே நயநே கிரேரபி மஹாதக்ஷோ ஹநூமாநபூத்**
**ஸர்வோர்வீபதிதாம் ஸ்வயம் ச வஹஸே பத்ராத்ரிநாத ப்ரபோ ॥ 46**

*பத்ராசலநாத! பெருமானே! நான் உனக்குப் பணிவிடை செய்வதால் ஆவதென்ன? விபீஷணனும் ஸுக்ரீவனும் உனக்குச் சாமரம் வீசுபவர். மலையைக் கொணர்வதில் மிகவும் தேர்ந்த ஹனுமான் உன் தாஸன். பூமியனைத்தையும் ஆளும் பொறுப்பை நீ ஏற்றுள்ளாய். 46*

भद्राद्रीश तवेडितानि चरितान्यत्यद्भुतानि प्रभो
पाषाणप्लवनं तृणस्य च तथा ब्रह्मास्त्रतापादनम् ।
स्त्रीत्वप्रापणमश्मनश्च धनुषः शम्भोस्तथा भञ्जनं
दृश्यन्ते क्व नु नाम कंकशबरीमोक्षप्रदानं तथा ॥ ४७

**பத்ராத்ரீச தவேடிதாநி சரிதாந்யத்யத்புதாநி ப்ரபோ**
**பாஷாணப்லவநம் த்ருணஸ்ய ச ததா ப்ரஹ்மாஸ்த்ரதாபாதநம் ।**
**ஸ்த்ரீத்வப்ராபணமச்மநச்ச தநுஷ: சம்போஸ்ததா பஞ்ஜநம்**
**த்ருச்யந்தே க்வ நு நாம கங்கசபரீமோக்ஷப்ரதாநம் ததா ॥ 47**

*பத்ராசலேச! பெருமானே! உம்மைப் பற்றிக் கூறப்படுகிற வரலாற்று நிகழ்ச்சிகள் அற்புதமானவை. பாறுங்கல் நீரில் மிதந்தது. புல் பிரும்மாஸ்திரமானது, கல் பெண்ணானது. சிவனது வில்லை ஒடித்தது, கழுகுக்கும் சபரிக்கும் மோக்ஷமளித்தது. இவை வேறெங்கு நிகழ்ந்தன? (47)*

**कोपस्ते विशदः पयोधिपयसां क्वाथक्रियादानतः**
**शक्तिस्ते परमेशबाहुविधृतेष्वासद्विधाभञ्जनात् ।**
**प्रीतिस्ते च रजस्तमोतिगपदादेशात्तिरश्चस्तथा**
**वात्सल्यं मम भद्रभूधरपते निर्हेतुकं रक्षणात् ॥ ४८**

**கோபஸ்தே விசத: பயோதிபயஸாம் க்வாதக்ரியாதாநத:**
**சக்திஸ்தே பரமேசபாஹுவித்ருதேஷ்வாஸத்விதாபஞ்ஜநாத் ।**
**ப்ரீதிஸ்தே ச ரஜஸ்தமோதிக பதாதேசாத்திரச்சஸ்ததா**
**வாத்ஸல்யம் மம பத்ரபூதரபதே நிர்ஹேதுகம் ரக்ஷணாத் ॥ 48**

*பத்ராசலபதியே! கடல் நீரைக் கொதிக்க வைப்பதில் உன் கோபமும் பரமேசுவரன் ஏந்திய வில்லை இரண்டாக முறித்ததில் உன் ஆற்றலும், பறவைக்கும் ரஜஸ் - தமஸ் தாண்டிய நிலை அளித்ததில் உன் அன்பும் என்னை எந்த எதிர்பார்ப்புமின்றிக் காத்ததில் உன் தாயன்பும் வெளிப்பட்டது. (48)*

**गाधाभिः स्वकपोलकल्पित पदोन्निष्यन्दि माध्वीरसा-**
**स्वादानन्दित सज्जनाभिरनिशं गायन्ति हि त्वां बुधाः ।**
**जीवन्मुक्ततया स्थिता अपि च ते यद्येवमर्हत्तमाः**
**जोषं भावमवाप्नुयां कथमहं भद्राद्रिनाथ प्रभो ॥ ४९**

**காதாபி: ஸ்வகபோலகல்பித தபோந்நிஷ்யந்தி மாத்வீரஸா-**
**ஸ்வாதாநந்தித ஸஜ்ஜநாபிரநிசம் காயந்தி ஹி த்வாம் புதா: ।**
**ஜீவந்முக்ததயா ஸ்திதா அபி ச தே யத்யேவமர்ஹத்தமா:**
**ஜோஷம் பாவமவாப்நுயாம் கதமஹம் பத்ராத்ரிநாத ப்ரபோ ॥ 49**

*பத்ராசலநாதப் பெருமானே! அறிஞர்கள் தன் வாயால் கல்பனை செய்யப்பட்ட சொற்களில் சொட்டுகிற தேனால் நல்லோர் மனம் மகிழும்படி உன்னைப் பற்றிப் பாடுகின்றனர். அவர்களுக்கு அத்தகுதியிருக்க ஜீவன் முக்த நிலையிலுள்ளனர். நான் மட்டும் எப்படி மௌனமாக இருப்பேன்? 49*

कल्याणं कलयस्व मे कलिमलं संसक्तमुन्मूलय
भ्रान्तिं वारय भोगजालजसुखे कामादिकान्संहर ।
चित्तं निर्मलय प्रमोहभरितं स्वात्मानमादर्शय
क्लान्तं मां भवदावतः शिशिरय श्रीभद्रशैलेश्वर ॥ ५०

**கல்யாணம் கலயஸ்வ மே கலிமலம் ஸம்ஸக்தமுந்மூலய**
**ப்ராந்திம் வாரய போகஜாலஜஸுகே காமாதிகாந்ஸம்ஹர ।**
**சித்தம் நிர்மலய ப்ரமோஹபரிதம் ஸ்வாத்மாநமாதர்சய**
**க்லாந்தம் மாம் பவதாவத: சிசிரய ஸ்ரீபத்ரசைலேச்வர ॥ 50**

*ஸ்ரீபத்ராசலேச! எனக்கு மங்களம் செய்வாய்! நன்கு ஒட்டியுள்ள உள்ளத்தழுக்கை அகற்றுவாய்! பலவகை அனுபவங்களைத் தருகிற இன்பத்தில் தடுமாறுவதைத் தடுப்பாய். காமம் முதலியவற்றை ஒடுக்குவாய்! கலக்கம் நிறைந்த சித்தத்தைத் தூய்மைப்படுத்துவாய்! உள்ளத்தினுள் துலங்குகிற ஆத்மாவைக் காட்டுவாய்! பிறவித்துயரில் வாடிய என்னைக் குளிரச் செய்வாய்! (50)*

चन्द्रोऽभून्मनसस्तवेति वचनं वक्ति श्रुतिः सोऽप्यसौ
आह्लादं वितनोति शीतलरुचिः सन्मार्गगामी सदा ।
कार्यं कारणतो गुणान् लभत इत्याहुर्मनस्ते तथा
भद्राद्रीश्वर तान्गुणांस्तव समान् संक्रामयास्मास्वपि ॥ ५१

**சந்த்ரோऽபூந்மநஸஸ்தவேதி வசநம் வக்தி ச்ருதி: ஸோऽப்யஸௌ**
**ஆஹ்லாதம் விதநோதி சீதலருசி: ஸந்மார்க்காமீ ஸதா ।**
**கார்யம் காரணதோ குணாந் லபத இத்யாஹுர்மநஸ்தே ததா**
**பத்ராத்ரீச்வர தாந்குணாம்ஸ்தவ ஸமாந் தவ ஸங்க்ராமயாஸ்மாஸ்வபி ॥**

*பத்ராசலநாதனே! உன் மனத்திலிருந்து சந்திரன் தோன்றினான் எனவேதம் கூறும். அந்த சந்திரனும் நல்வழியில் நடந்து குளிர்ந்த ஒளியுடன் ஆனந்தம் தருகிறான். காரியம் காரணப் பொருளிடமிருந்து குணச்சிறப்பைப் பெறுகிறதென்பர். நல்வழி நடப்பவனும் குளிர்ந்த ஒளியுள்ளவனுமான நீ காரணப் பொருள். ஆனந்தம் தருபவன். உன்னிடமிருந்து தோன்றிய காரியப் பொருளான சந்திரனும் அச்சிறப்பைப் பெற்றது இயல்பே. அதே பொதுவான குணங்களை எம்மிடம் பரவச் செய்வாய். 51*

दुष्टस्यापि विनिन्दतोऽपि दयसे त्वं वालिनः स्म स्फुटं
भार्याहर्तरि रावणे युधि जिते न घ्नन्गृहं प्रैषयः ।
सीतावक्षसि दारणं कृतवतः काकस्य रक्षामधाः
भद्राद्रीश्वर मां परं दुरितिनं त्वं शिक्षसे प्रत्यहम् ॥ ५२

**துஷ்டஸ்யாபி விநிந்ததோऽபி தயஸே த்வம் வாலிந: ஸ்ம ஸ்புடம்**
**பார்யாஹர்தரி ராவணே யுதி ஜிதே ந க்நந் க்ருஹம் ப்ரைஷய: ।**
**ஸீதாவக்ஷஸி தாரணம் க்ருதவத: காகஸ்ய ரக்ஷாமதா:**
**பத்ராத்ரீச்வர மாம் பரம் துரிதிநம் த்வம் சிக்ஷஸே ப்ரத்யஹம் ॥ 52**

*பத்ராசலநாத! துஷ்டனும் உன்னை நிந்தித்தவனுமான வாலியிடம் பரிவு காட்டினீர். இது உலகமறிந்ததே. மனைவியைப் பறித்துச் சென்ற ராவணன் போரில் தோற்ற போது அவனைக் கொல்லாமல் வீட்டிற்கு (இளைப்பாற) அனுப்பினாய். ஸீதையின் மார்பில் கீறிய காகத்திற்குக் காப்பளித்தீர். பாபியான என்னை மட்டும் ஒவ்வொரு நாளும் தண்டிக்கிறீரே! 52*

वन्दित्वा तव पादपद्मयुगलं वन्देय नान्यं क्वचित्
प्रार्थ्य त्वं स्वमभीप्सितं न च परं तत्प्रार्थयेयं पुनः ।
एवं चेत्क्रियते यशोऽकलुषितं स्यात्ते ममैतत्प्रियं
भावं तं मम पालयस्व दयया भद्राचलाधीश्वर ॥ ५३

**வந்தித்வா தவ பாதபத்மயுகலம் வந்தேய நாந்யம் க்வசித்**
**ப்ரார்த்ய த்வம் ஸ்வமபீப்ஸிதம் ந ச பரம் தத்ப்ரார்தயேயம் புந: ।**

ஏவம் சேத்க்ரியதே யசோऽகலுஷிதம் ஸ்யாத்தே மமைதத்ப்ரியம்
பாவம் தம் மம பாலயஸ்வ தயயா பத்ராசலாதீச்வர ॥ 53

*பத்ராசலநாத! உன் திருவடிகளை வணங்கிய பின் வேறொருவரை வணங்கமாட்டேன். என் விருப்பத்தை உன்னிடம் கோரியபின் வேறெவரிடமும் வேண்டமாட்டேன். இப்படிச் செய்தால் உன் புகழ் மலினமடையாது. எனக்கும் பிரியமானது. அந்த எண்ணத்தைப் பரிவுடன் காப்பீர். 53*

गंगाया अपि चोत्तरे जनपदे जन्माप्तवान् स्वेच्छया
पातुं दक्षिणदेशजानपि जनान् सन्दर्शनानुग्रहैः ।
नुन्नस्त्वं दययाऽतिपुण्यतटिनी गोदावरीरोधसि
प्राप्तो भद्रगिरिं रघूत्तम विभो रक्षञ्जनान् मादृशान् ॥ ५४

கங்காயா அபி சோத்தரே ஜநபதே ஜந்மாப்தவாந் ஸ்வேச்சயா
பாதும் தக்ஷிணதேசஜாநபி ஜநாந் ஸந்தர்சநாநுக்ரஹை: ।
நுந்நஸ்த்வம் தயயாऽதிபுண்யதடிநீ கோதாவரீ ரோதஸி
ப்ராப்தோ பத்ரகிரிம் ரகூத்தம விபோ ரக்ஷஞ்ஜநாந் மாத்ருசாந் ॥ 54

*ரகு குலத்தில் சிறந்த பெருமானே! கங்கைக்கும் வடக்கேயுள்ள நாட்டில் உன் விருப்பப்படி பிறந்தாய். தென் தேசத்திலுள்ள மக்களுக்கும் காட்சி தந்து அருள் பாலிக்க உள்ளக்கனிவு தூண்ட மிகப் புண்ணியமான கோதாவரிக் கரையில் பத்ரமலைக்கு என்னைப் போன்ற மக்களைக் காக்க வந்து சேர்ந்தாய். (54)*

कल्पद्रुमर्धुपाश्रितस्तृणमुखी सा कामधेनुः श्रुता
चिन्तामण्यभिधो मणिश्च कठिनः किञ्च स्थितास्ते दिवि ।
सत्सेव्यो विजयी रणे सदयहृद्भद्राचले भूतले
निर्दोषो रघुनन्दनो विजयते देवो वदान्योत्तमः ॥ ५५

கல்பத்ருர்மதுபாச்ரிதஸ் த்ருணமுகீ ஸா காமதேநு: ச்ருதா
சிந்தாமண்யபிதோ மணிச்ச கடிந: கிஞ்ச ஸ்திதாஸ்தே திவி ।

ஸத்ஸேவ்யோ விஜயீ ரணே ஸதயஹ்ருத் பத்ராசலே பூதலே
நிர்தோஷோ ரகுநந்தநோ விஜயதே தேவோ வதாந்யோத்தம: ॥

*கற்பகமரம் வண்டு சூழ்ந்தது. காமதேனு புல்லை வாயில் கொண்டது. சிந்தாமணி என்ற ரத்தினம் கடினமானது. இவை அனைத்தும் வானில் உள்ளன. அவைகளை விடச் சிறந்த கொடையாளி. ரகு குலத்தை மகிழச் செய்பவன். குறையேதுமில்லாதவன். நல்லோரால் வழிபடப் பெறுபவன். போரில் வெல்பவன். பரிவுள்ள இதயமுள்ளவன். அவன் பூமியில் பத்திராசலத்தில் உள்ளான். விரும்பியதை வாரி வழங்கு பவனாகத்துலங்குகிறான். 55*

कयाऽद्य विधया ब्रुवे कलियुगस्य दोषं जनाः
क्षिपन्ति बहु वत्सरान् क्षणमिवारसैर्भाषणैः ।
अरुन्तुदनरस्तुतीर्विदधते सदा पण्डिताः
स्मरन्ति न कदाचन स्वपनतोऽपि भद्राचलम् ॥ ५६

கயாऽத்ய விதயா ப்ருவே கலியுகஸ்ய தோஷம் ஜநா:
க்ஷிபந்தி பஹு வத்ஸராந் க்ஷணமிவாரஸைர்பாஷணை: ।
அருந்துதநரஸ்துதீர்விதததே ஸதா பண்டிதா:
ஸ்மரந்தி ந கதாசந ஸ்வபநதோऽபி பத்ராசலம் ॥ 56

*கலியுகத்தின் குறையை எவ்வாறு விளக்குவேன்? மக்கள் சுவையற்ற பேச்சுகளால் பல்லாண்டுகளை நொடி போல் கழிக்கின்றனர். பண்டிதரும் காதுக்குத் துன்பமளிக்கும் நரஸ்துதியை (தனிமனிதனின் புகழ் பாடுவதை) எப்போதும் செய்கின்றனர். கனவிலும் அவர்கள் பத்திர மலையை நினைப்பதில்லை. (56)*

विचित्रतरवेदिकं विमलहेमतः कल्पितं
विमानवरमग्रतोऽस्य च सुदर्शनं काञ्चनम् ।
प्रदक्षिणपथं बुधैः पठितदिव्यरामायणं
प्रपश्यत वरालये रघुवरस्य भद्राचले ॥ ५७

விசித்ரதரவேதிகம் விமலஹேமத: கல்பிதம்

விமாநவரமக்ரதோऽஸ்ய ச ஸுதர்சநம் காஞ்சநம் ।

ப்ரதக்ஷிணபதம் புதை: படிததிவ்ய ராமாயணம்

ப்ரபச்யத வராலயே ரகுவரஸ்ய பத்ராசலே ॥ 57

*பத்திர மலையில் ரகுநாதனின் சிறந்த ஆலயத்தில் தூயத் தங்கத்தால் அமைந்த மிக விசித்திரமான மேடை, அதன் எதிரே அழகாகக் காட்சி தருகிற தங்க விமானம். அறிஞர்கள் திவ்யமான ராமாயணத்தைப் படித்துக் கொண்டு வலம் வருகிற வழி. இவற்றைக் காண்பீர். 57*

करीन्द्रकरबाहवे करधृताशुगासेषवे

प्रशस्तगुण सिन्धवे प्रणतजन्मिनां बन्धवे ।

कलीरिततमोमुषे कलितपुण्यहृज्जग्मुषे

नमांसि च समर्पये नगरितोरुभद्राद्रये ॥ ५८

கரீந்த்ரகரபாஹவே கரத்ருதாசுகாஸேஷவே

ப்ரசஸ்தகுண ஸிந்தவே ப்ரணதஜந்மிநாம் பந்தவே ।

கலீரிததமோமுஷே கலிதபுண்யஹ்ருஜ்ஜக்முஷே

நமாம்ஸி ச ஸமர்பயே நகரிதோருபத்ராத்ரயே ॥ 58

*பத்திரமலையை நகரமாக்கிய ராமனுக்கு வந்தனம் செய்கிறேன். அவன் யானைத் துதிக்கை போன்ற கைகளுள்ளவன். வில்லையும் அம்பையும் கைகளில் ஏந்தியவன். சிறந்த குணங்கள் நிரம்பிய கடல். தன்னை வணங்கி நிற்கிற உயிரின மனைத்தின் உறவினன். கலியால் விளைந்த அறியாமையைப் பறிப்பவன். புண்யம் புரிந்தவரின் உள்ளத்தில் குடியேறியவன். (58)*

मुनीन्द्रवरमोहने मुषितचक्षुषीक्षावतां

विदेहतनयादृशोर्विरचितामृताग्र्याञ्जने ।

स्वसुर्निशिचरप्रभोः स्मरशरार्तिसन्दायके

शरीरमहसि प्रभोर्विशति हृत्तु भद्राचले ॥ ५९

முநீந்த்ரவரமோஹநே முஷிதசக்ஷுஷ்க்ஷாவதாம்
விதேஹதநயாத்ருசோர்விரசிதாம்ருதாக்ர்யாஞ்ஜநே।
ஸ்வஸுர் நிசிசரப்ரபோ: ஸ்மரசரார்திஸந்தாயகே
சரீரமஹஸி ப்ரபோர் விசதி ஹ்ருத்து பத்ராசலே॥ 59

*பத்ராசலத்திலுள்ள பிரபுவின் திருமேனி ஒளியில் என் உள்ளம் பதிகிறது. சிறந்த மாமுனிவர்களையும் கவரக் கூடியது; கண் பெற்றவரின் பார்வையைப் பறிப்பது; விதேஹரின் பெண்ணின் கண்களுக்கு அமுதமான சிறந்த மையை இடுவது. ராக்ஷஸ அரசனான ராவணனின் தங்கையிடம் மன்மதனின் அம்பால் ஏற்படுகிற வேதனையைத் தந்தது. 59*

चराचरविधायिनीं चरणनम्रधीदायिनीं
कविस्तुतिरसादिनीं करुणयाऽऽर्तसंरक्षिणीम् ।
दिलीपकुलनन्दिनीं दिविषदार्तिसंहारिणीं
भजामि परदेवतां भवनितोरुभद्राचलाम् ॥ ६०

சராசரவிதாயிநீம் சரணநம்ரதீதாயிநீம்
கவிஸ்துதிரஸாதிநீம் கருணயாऽர்தஸம்ரக்ஷிணீம்।
திலீபகுலநந்திநீம் திவிஷதார்திஸம்ஹாரிணீம்
பஜாமி பரதேவதாம் பவநிதோருபத்ராசலாம்॥ 60

*அந்த ராமன் என்ற பரதேவதையை வழிபடுகிறேன். அது பத்ராசலமென்ற பெருமலையைத் தன் மாளிகையாக்கிக் கொண்டது. அசைவதும் அசையாததுமான உலகைப் படைப்பது. தன் திருவடிகளில் வணங்கியவனுக்கு பேரறிவு வழங்குவது. கவியின் (என் போன்றவனின்) துதிகளின் சுவையைப் பருகுவது. பரிவால் துயருறுபவரைக் காப்பது. திலீப குலத்தை ஆனந்தமடையச் செய்வது. தேவரின் துயரைப் போக்குவது. (60)*

अतीतभवसञ्चितैरगणितैश्च पुण्यव्रजैः
अवाप्य रघुनायकेऽभ्यधिकभक्तिमद्वैतिनीम् ।

तया जिगमिषेत्पदं सुखमयं जनश्चेत्तदा
प्रयातु बुधसंकुलं प्रभुसनाथभद्राचलम् ॥ ६१

அதீதபவஸஞ்சிதைரகணிதைச்ச புண்யவ்ரஜை:
அவாப்ய ரகுநாயகேऽப்யதிகபக்திமத்வைதிநீம்।
தயா ஜிகாமிஷேத்பதம் ஸுகமயம் ஜநச்சேத் ததா
ப்ரயாது புதஸங்குலம் ப்ரபுஸநாதபத்ராசலம் ॥ 61

*முன் பிறவிகளில் சேமித்த எண்ணற்ற புண்யக் குவியல்களால் ரகுநாயகனிடம் வேறுபாட்டுணர்வற்ற அளவுக்கு அதிகமான பக்தியைப் பெற்ற பின் அதனால் ஆனந்தமயமான நிலையை அடைய விரும்பினால் அப்போது பேரறிஞர்கள் குழுமிய, ஈசனுடன் கூடிய பத்திராசலத்தைச் சென்றடையட்டும். (61)*

कलिः कलयते बलात्कलुषचित्तसंवासनं
प्रभो षडरयो मनः प्ररचयन्ति वासोगृहम् ।
बिभेमि च यमादहं बत तवापि दासो भवन्
अतोऽत्र तव दृष्टये वसतिमेमि भद्राचले ॥ ६२

கலி: கலயதே பலாத் கலுஷசித்தஸம்வாஸநம்
ப்ரபோ ஷடரயோ மந: ப்ராசயந்தி வாஸோக்ருஹம்।
பிபேமி ச யமாதஹம் பத தவாபி தாஸோ பவந்
அதோऽத்ர தவ த்ருஷ்டயே வஸதிமேமி பத்ராசலே ॥ 62

*கலி வலிவில் என்னை உள்ளம் கெட்டவருடன் கூடியிருக்கச் செய்கிறது. காமம் முதலிய ஆறு எதிரிகளும் என் மனத்தைக் கூடாரமாக்கிக் கொண்டு விட்டன. உமது தாஸனாயிருந்த போதிலும் யமனிடம் பயப்படுகிறேன். அதனால் உம் பார்வை என் மீதுபட பத்திராசலத்தில் குடிவந்துள்ளேன். (62)*

यस्यैवाख्या मरणसमये मुक्तये देहभाजां
वाराणस्यां मदनरिपुणा प्रोच्यते कर्णमूले ।

यस्यैवाज्ञा जलनिधिजलस्तम्भनप्रौढिरासीत्
सोऽयं भद्राचलशिखरगः शोषयेच्छोकमोहौ ॥ ६३

யஸ்யைவாக்யா மரணஸமயே முக்தயே தேஹபாஜாம்
வாராணஸ்யாம் மதநரிபுணு ப்ரோச்யதே கர்ணமூலே ।
யஸ்யைவா ஜ்ஞா ஜலநிதிஜலஸ்தம்பநப்ரௌடிராஸீத்
ஸோऽயம் பத்ராசலசிகரக: சோஷயேச்சோகமோஹௌ ॥ 63

எவரது நாமம் உயிரினத்தின் மரணத்தின் போது முக்தி தருவதாக சிவனால் காதுகளின் அருகே காசியில் ஓதப்படுகிறதோ, எவரது ஆணை கடலில் நீரை ஸ்தம்பிக்கச் செய்ய வல்லதானதோ அந்த பத்ராசல சிகரத்திலுள்ள ராமன் என் சோகத்தையும் மதி மயக்கத்தையும் வற்றச் செய்யட்டும். 63

आशापाशाभिहतमनसामामयैः पीडितानां
ज्ञातुं शक्त्या विरहितधियां ब्रह्म वेदान्तवेद्यम् ।
प्राप्तुं यावत्तनु सुखमलं कांक्षतां मुक्तिमन्ते
का वाऽस्त्यन्या गतिरिह विना भद्रशैलाधिनाथम् ॥ ६४

ஆசாபாசாபிஹத மநஸாமாமயை: பீடிதாநாம்
ஜ்ஞாதும் சக்த்யா விரஹிததியாம் ப்ரஹ்ம வேதாந்தவேத்யம் ।
ப்ராப்தும் யாவத்தநு ஸுகமலம் காங்க்ஷதாம் முக்திமந்தே
கா வாऽஸ்த்யந்யா கதிரிஹ விநா பத்ரசைலாதிநாதம் ॥ 64

ஆசை (எதிர்பார்ப்பு) எனும் கயிற்றால் கட்டப்பட்ட மனமுள்ளவர்களும், நோயால் வாடுபவர்களும். வேதத்தின் முடிவான உபநிஷத்தால் மட்டுமே உணரத்தக்க பரப்பிரும்மத்தை அறியத்தக்க ஆற்றலில்லாதவர்களும் உடலுள்ளவரை இன்பமும் மரண வேளையில் முக்தியும் பெற விரும்புபவர்களும் பெறக்கூடிய பிடிப்பு, நாடுகிற கதி, பத்ராசல நாதனை விட்டால் வேறேது? (64)

जन्म प्राप्तं धनपतिगृहे लोकमान्ये ततः किं
विद्या लब्धा विनयमहिता विश्वहृद्या ततः किम् ।

वीर्योद्रेको भवति विजयप्राप्तिहेतुस्ततः किं
सौख्यं लभ्यं त्विह च परतो भद्रशैलाधिनेतुः ॥ ६५

ஜந்ம ப்ராப்தம் தநபதிக்ருஹே லோகமாந்யே தத: கிம்
வித்யா லப்தா விநயமஹிதா விச்வஹ்ருத்யா தத: கிம் ।
வீர்யோத்ரேகோ பவதி விஜயப்ராப்திஹேதுஸ்தத: கிம்
ஸௌக்யம் லப்யம் த்விஹ ச பரதோ பத்ரசைலாதிநேது: ॥ 65

*உலகம் புகழ்கிற பெருந்தனிகளின் வீட்டில் பிறப்பால் ஆவதென்ன? உலகம் உவக்கிற பணிவு நிறைந்த கல்வியால் ஆவதென்ன? வெற்றி பெற்றுத் தருகிற வீரிய எழுச்சியால் ஆவதென்ன? பத்திராசல நாதனிடமிருந்து தான் இம்மையிலும் மறுமையிலும் இன்பம் பெறமுடியும். 65*

मृत्योर्मृत्युं सततमयतां जातितो ज्ञानतो वा-
ऽजानानां निजमवरतादोषमप्युत्सुकानाम् ।
प्राप्तुं लोकानथ च पुनरावृत्तिशून्यान्सुखार्थं
भद्रोर्वीध्रे लसति शबरीमोक्षदः कोऽपि देवः ॥ ६६

ம்ருத்யோர்ம்ருத்யும் ஸததமயதாம் ஜாதிதோ ஜ்ஞாநதோ வா-
ऽஜாநாநாம் நிஜமவரதாதோஷமப்யுத்ஸுகாநாம் ।
ப்ராப்தும் லோகாநத ச புநராவ்ருத்திசூந்யாந் ஸுகார்தம்
பத்ரோர்வீத்ரே லஸதி சபரீமோக்ஷத: கோऽபி தேவ: ॥ 66

*ஒரு யமனிடமிருந்து (சாவுக்குக் காரணத்திலிருந்து) மற்றொரு யமனை எப்போதும் சென்றடைபவர்களும், பிறவியாலோ நுண்ணறிவாலோ தனது தாழ்மைக்கான காரணத்தை அறியாமல் திரும்பப் பிறக்க வேண்டியிராத லோகங்களை அடைவதில் ஆர்வமுள்ளவர்களுமான மாந்தருக்கு இன்பமளிக்க பத்ராசலத்தில் சபரிக்கு முக்தி அளித்த ஏதோ ஒரு தேவன் விளங்குகிறான். (66)*

सद्वाऽसद्वा कवयति कविः किञ्चिदाधाय चित्ते
क्षुद्रैरर्थैः सफलयति तां वाचमल्पैरबुद्धिः ।

वाल्मीकिस्ते चरितमभिधायैव वैधेषु लोके-
ष्वद्याप्यास्ते सुखमनुभवन् राम भद्राद्रिनाथ ॥ ६७

ஸத்வாऽஸத்வா கவயதி கவி: கிஞ்சிதாதாய சித்தே
க்ஷுத்ரைரர்தை: ஸபலயதி தாம் வாசமல்பைரபுத்தி: ।
வால்மீகிஸ்தே சரிதமபிதாயைவ வைதேஷு லோகே-
ஷ்வத்யாப்யாஸ்தே ஸுகமநுபவந் ராம பத்ராத்ரிநாத ॥ 67

*மனத்தில் எதனையோ கொண்டு கவி நல்லதையும் நல்லதல்லாததையும் எழுதுகிறான். அற்பமான தாழ்ந்ததொரு பொருள் கூறி அந்த கவிதையை அறிவில்லாதவன் சமாளிக்கிறான். பத்ராசல நாத! ராம! வால்மீகி உன் சரிதையைக் கூறி பிரும்ம லோகத்தில் இன்றும் இன்பமுற்று வாழ்கிறார்.67*

यस्या लाभाज्जनकनृपतेर्वृद्धिरासीदनल्पा
यस्याः क्रोधो न भवति महामन्तुकृद्राक्षसीषु ।
सैवानन्या यदि जनकजारूपिणी पद्मगेहा
किं त्वां न स्यात्सुखमुपयतां तं च भद्राद्रिनाथ ॥ ६८

யஸ்யா லாபாஜ்ஜநகந்ருபதேர்வ்ருத்திராஸீதநல்பா
யஸ்யா: க்ரோதோ ந பவதி மஹாமந்துக்ருத்ராக்ஷஸீஷு ।
ஸைவாநந்யா யதி ஜநகஜாரூபிணீ பத்மகேஹா
கிம் த்வாம் ந ஸ்யாத்ஸுகமுபயதாம் தம் ச பத்ராத்ரிநாத ॥ 68

*பத்ராசல நாத! லக்ஷ்மியே ஜனகரின் மகள் வடிவேற்றவள். அவளைப் பெற்றதும் ஜனக அரசனுக்குப் பெரும் செழிப்பு ஏற்பட்டது. அவளுக்குத் தன்னிடம் பெருந்தவறிழைத்த ராக்ஷஸிகளிடம் கூடக் கோபமிருந்ததில்லை. அவள் உம்மைக் காட்டிலும் வேறுபட்டவளில்லையெனில் உம்மை அணுகியவருக்கு இன்பம் கிட்டாதா என்ன? (68)*

नष्टं किं ते भवति नयनानन्दिमूर्ते वदादौ
मग्नोन्मग्नं भवजलनिधौ भावनाशून्यबुद्धिम् ।

कामक्रोधाद्यभिधमकरैस्तुद्यमानं समन्तात्
मां मा भैषीरिति वदसि चेद्भद्रशैलेश वाचा ॥ ६९

நஷ்டம் கிம் தே பவதி நயநாநந்திமூர்தே வதாதௌ
மக்நோந்மக்நம் பவஜலநிதௌ பாவநாசூந்யபுத்திம் ।
காமக்ரோதாத்யபிதமகரைஸ்துத்யமாநம் ஸமந்தாத்
மாம் மா பைஷீரிதி வதஸி சேத்பத்ரசைலேச வாசா ॥ 69

*பத்ரசைல நாத! கண்களுக்கு ஆனந்தம் தருகிற வடிவழகுள்ளவனே! நானோ பிறவிக்கடலில் மூழ்கி மூழ்கி எழுபவன், நல்லெண்ண மற்றவன். கடலிலுள்ள காமம் கோபம் முதலிய முதலைகளால் உடலெங்கும் கடிக்கப்பட்டவன். அந்த எனக்குப் பயப்படாதே என வாயால் ஆறுதல் கூறுவதால் உனக்கென்ன நஷ்டம்? கூறுவாய். 69*

देहो भास्वांस्तव सितरुची राम ते मन्दहासः
लोकार्तीनां शमकर विभो लोहितो लोचनान्तः ।
भावः सौम्यो गुरुरपि कृपा विद्वदर्च्यः कविस्त्वं
मन्दो रोषः शिरसि च तमो भासि भद्राद्रिकेतुः ॥ ७०

தேஹோ பாஸ்வாம்ஸ்தவ ஸிதருசீ ராம தே மந்தஹாஸ:
லோகார்தீநாம் சமகர விபோ லோஹிதோ லோசநாந்த: ।
பாவ: ஸௌம்யோ குருரபி க்ருபா வித்வசர்ச்ய: கவிஸ்த்வம்
மந்தோ ரோஷ: சிரஸி ச தமோ பாஸி பத்ராத்ரிகேது: ॥ 70

*(ஒன்பது கிரகங்களும் ராமன் வடிவில்) ராம! உன் உடல் சூரியன் (ஒளி மிக்கது). உன் புன் சிரிப்போ சந்திரன். வெண்மை மிக்க ஒளி கொண்டது. உலகின் துயரைச் சமனம் செய்கிற பெருமானே! உன் கடைக்கண் சிவந்தது (செவ்வாய்). உன் எண்ணமோ புதன். (ஸௌம்யத்தன்மை (மென்மை) கொண்டது). உன் கருணையோ குரு. (அளவில் அதிகமானது). நீ பேரறிஞர்களால் பூஜிக்கப்படுகிற சுக்ரன் (கவி). உன் ரோஷம் சனி (மந்தமானது). உன் தலையில் ராகு (கேசம் - இருள்) நீயே பத்ராசலத்தின் கேது (கொடி). (70)*

सारं वेदागमगतगिरां सारसासूयि नेत्रं
भारं पादप्रणतजनताभूतिरूपं वहन्तम् ।
पारं दूरं भवजलनिधेः प्रापयन्तं प्रपन्नान्
वारं वारं विरचितनतिर्नौमि भद्राचलेशम् ॥ ७१

ஸாரம் வேதாகமகதகிராம் ஸாரஸாஸூயி நேத்ரம்
பாரம் பாதப்ரணதஜநதாபூதிரூபம் வஹந்தம் ।
பாரம் தூரம் பவஜலநிதே: ப்ராபயந்தம் ப்ரபந்நாந்
வாரம் வாரம் விரசிதநதிர்நௌமி பத்ராசலேசம் ॥ 71

*பத்ராசலேசரை அடிக்கடி வணங்கித் துதிக்கிறேன். அவர் வேத ஆகம வாக்குகளின் ஸாரமானவர். தாமரையை வெல்கிற கண்களுள்ளவர். தன் திருவடிகளில் வணங்கியவருக்கான செல்வம் எனும் பாரத்தைச் சுமப்பவர், சரணடைந்தவரை பிறவிக்கடலின் தூரத்திலுள்ள அக்கரையை அடைவிப்பவர். 71*

गोदावर्याः सलिलशिशिरैः सेव्यमानं समीरैः
गोदानानामयुतजफलं सेविनां सन्दिशन्तम् ।
गोपायन्तं चरणपतितान् नारकाद् घोररूपात्
गोपत्युद्यत्सुकुलतिलकं नौमि भद्राचलेशम् ॥ ७२

கோதாவர்யா: ஸலிலசிசிரை: ஸேவ்யமாநம் ஸமீரை:
கோதாநாநாமயுதஜபலம் ஸேவிநாம் ஸந்திசந்தம் ।
கோபாயந்தம் சரணபதிதாந் நாரகாத் கோரரூபாத்
கோபத்யுத்யத்ஸுகுலதிலகம் நௌமி பத்ராசலேசம் ॥ 72

*பத்ராசலேசரைத் துதிக்கிறேன். அவர் கோதாவரியின் நீரால் குளிர்ந்த காற்றால் உபசரிக்கப் பெறுபவர். தன்னை வழிபடுபவருக்குப் பத்தாயிரம் பசுக்களைத் தானம் செய்த புண்யத்தை வழங்குபவர், தன் திருவடிகளில் வணங்கி நிற்பவரை கோரமான நரகத்திலிருந்து காப்பவர். ஸூரியனிடமிருந்து உதித்த நற்குலத்தின் திலகமானவர். (72)*

कर्माराध्यं सकलजगतां साधकं कांक्षितानां
काव्यारम्भे कविपरिषदा स्वीकृतं नायकत्वे ।
उच्छेत्तारं सकलविपदामुन्मुखं श्रीप्रदाने
भद्राद्रीश श्रयतु कतमं त्वां विनाऽयं विवेकी ॥ ७३

கர்மாராத்யம் ஸகலஜகதாம் ஸாதகம் காங்க்ஷிதாநாம்
காவ்யாரம்பே கவிபரிஷதா ஸ்வீக்ருதம் நாயகத்வே ।
உத்சேத்தாரம் ஸகலவிபதாமுந்முகம் ஸ்ரீப்ரதாநே
பத்ராத்ரீச ச்ரயது கதமம் த்வாம் விநாऽயம் விவேகீ ॥ 73

*பத்ராசலேசா! நீர் உலகனைத்தின் நற்பணிகளால் ஆராதிக்கப் பெறுபவர். விரும்பியவற்றை நிறைவுறச் செய்பவர். கவிகளின் கூட்டத்தால் காவியத்தைத் தொடங்குகையில் நாயகனாக ஏற்கப்பட்டவர். கேடுகளனைத்தையும் வேருடன் அழிப்பவர். சீரும் சிறப்புமளிக்க முன் நிற்பவர். உம்மைத் தவிர வேறு எவரைப் பகுத்தறிவாளி நாடுவான்? (73)*

प्रेमावेशस्त्वयि समभवद्धन्त वाल्मीकिवाक्यैः
नो शक्योऽयं व्यपगमयितुं वाङ्मुखैर्नास्तिकानाम् ।
दुःखं वा स्यात्सुखमपि च वा तेन सर्वंसहोऽहं
भद्राद्रीश त्वयि सुखमियां राम विन्यस्य भारम् ॥ ७४

ப்ரேமாவேசஸ்த்வயி ஸமபவத்தந்த வால்மீகிவாக்யை:
நோ சக்யோऽயம் வ்யபகமயிதும் வாங்முகைர்நாஸ்திகாநாம் ।
து:கம் வா ஸ்யாத் ஸுகமபி ச வா தேந ஸர்வம் ஸஹோऽஹம்
பத்ராத்ரீச த்வயி ஸுகமியாம் ராம விந்யஸ்ய பாரம் ॥ 74

*பத்ராசல நாத! ராம! வால்மீயின் வாக்கியங்களால் உம்மிடம் அன்பின் தாக்கம் ஏற்பட்டது. நாஸ்திகரின் பேச்சுகளால் அதனைமாற்ற இயலாது. துன்பமோ இன்பமோ எது நேரிடினும் அனைத்தையும் தாங்கிக் கொள்வேன். உம்மிடம் சுமையை ஒப்படைத்து நான் இன்பமடைவேன். (74)*

भद्राद्रीश प्रभुवर न ते रक्षकः शिक्षको वा
पापिष्ठं मामपि यदि करोष्यात्मदासं क्षतिः का ।
भ्रातृद्रोहिद्वयमपि कृतं राज्यदानैकपात्रं
दुष्प्रापं यत्त्रिदशभुवनं तत्कबन्धेन जग्मे ॥ ७५

பத்ராத்ரீச ப்ரபுவர ந தே ரக்ஷக: சிக்ஷகோ வா
பாபிஷ்டம் மாமபி யதி கரோஷ்யாத்மதாஸம் க்ஷதி: கா ।
ப்ராத்ருத்ரோஹித்வயமபி க்ருதம் ராஜ்யதானைகபாத்ரம்
துஷ்ப்ராபம் யத்த்ரிதசபுவநம் தத்கபந்தேந ஜக்மே ॥ 75

*பத்ராத்ரி நாத! சிறந்த பிரபுவே! உம்மைக் காப்பவரோ கட்டுப்படுத்துபவரோ இல்லை. பாபிகளில் முன் நிற்கிற என்னை உமது தாஸனுக்கிக்கொள்வீராகில் என்ன குறை நேரும்? சகோதரனுக்குத் துரோகம் விளைவித்த இருவரும் (ஸுக்ரீவனும் விபீஷணனும்) ராஜ்யம் வழங்க ஏற்றவராகச் செய்யப்பட்டனர். அடைவதற் கெளிதல்லாத ஸ்வர்க்க லோகம் கபந்தனுல் வெல்லப்பட்டது (தன்னுரிமையாகப் பெறப்பட்டது) (75).*

मरकतमणिश्यामा कामार्पणोद्यतमानसा
सततकरुणासार श्रीमत्कटाक्ष चमत्कृता ।
सुकृतिजनतासेव्या स्तव्या सुधामयवाग्झरी-
वितरणचणा भद्राद्रिस्था विभाति हि देवता ॥ ७६

மரகதமணிச்யாமா காமார்பணோத்யதமாநஸா
ஸததகருணாஸார ஸ்ரீமத்கடாக்ஷ சமத்க்ருதா ।
ஸுக்ருதிஜநதாஸேவ்யா ஸ்தவ்யா ஸுதாமயவாக்ஜரீ-
விதரணசணா பத்ராத்ரிஸ்தா விபாதி ஹி தேவதா ॥ 76

*பத்ராசலத்திலுள்ள ஒரு தேவதை மரகத ரத்னம் போன்ற பசுமை நிறம் கொண்டது. விரும்பியதை வழங்குவதில் முன் நிற்கிற மனம் கொண்டது. எப்போதும் கருணை பொழிகிற சிறப்பு மிக்க கடாக்ஷத்தால் அழகியது. புண்யம் செய்கிற மக்களால்*

வழிபடப் பெறுவது. துதிக்கத்தக்கது. அமுதம் போன்ற அலை அலையாகப் பெருகுகிற வாக்கை அளிப்பதில் தேர்ந்தது. அது நம்முன் காட்சி தருகிறது. (ராமனே அந்த தேவதை.) (76)

अरुणचरणैराताम्राक्षैरपुण्यसुदुर्लभैः
 विनतभरणैर्विश्वातीतैः वियत्समवैभवैः ।
दशरथतपःपुञ्जैः दीनावनैकधुरन्धरैः
 भरतविनतैर्भद्राद्रिस्थैः भजे परतन्त्रताम् ॥ ७७

அருணசரணைராதாம்ராக்ஷைரபுண்யஸுதுர்லபை:
 விநதபரணைர்விச்வாதீதை: வியத்ஸமவைபவை: ।
தசரததப: புஞ்ஜை: தீநாவநைகதுரந்தரை:
 பரதவிநதைர்பத்ராத்ரிஸ்தை: பஜே பரதந்த்ரதாம் ॥ 77

பத்ராசலத்திலுள்ள மாபெரும் ஒளியால் நான் ஆட்கொள்ளப் பட்டேன். சிவந்த திருவடிகள் கொண்டது. சிறிது சிவந்த கண்களுள்ளது. புண்யமல்லாததால் எளிதில் அடைய முடியாதது. தன்னை வணங்கியவரை ஏற்று வாழ வைப்பது. உலகிற் கப்பாற்பட்டது. ஆகாசவெளி போன்றளாவி நிற்கிற பெருமை கொண்டது. தசரதரின் தவக்குவியல். எளியோரைக் காக்கும் பொறுப்பை ஏற்றது. பரதனால் வணங்கப் பெற்றது. 77

मलिनमलिनं मन्दप्रज्ञं मदीयमनोऽधुना
 विमलविमलां बुद्धिं प्राप्तैर्विमृश्य विमृश्य च ।
श्रुतिशिखरगं त्वत्कं तत्त्वं चिरेण च गृह्यते
 कथमहमियां भद्राद्रीश त्वदीयकृपारसम् ॥ ७८

மலிநமலிநம் மந்தப்ரஜ்ஞம் மதீயமநோऽதுநா
 விமலவிமலாம் புத்திம் ப்ராப்தைர்விம்ருச்ய விம்ருச்ய ச ।
ச்ருதிசிகரகம் த்வத்கம் தத்த்வம் சிரேண ச க்ருஹ்யதே
 கதமஹமியாம் பத்ராத்ரீச த்வதீயக்ருபாரஸம் ॥ 78

*பத்ராசல நாத! மிகத் தெளிவுள்ள அறிவைப் பெற்றவரால் ஆராய்ந்தாராய்ந்து உபநிஷத்துகளில் உன் உண்மை நிலை பலநாட்களுக்குப் பின் புரிந்து கொள்ளப்படுகிறது. மிக மிக அழுக்கான என் மனம் இப்போது உள்ளுணர்வு மந்தமாயுள்ளது உம் கருணை ரஸத்தை நான் எப்படி உணரமுடியும். (78)*

श्रुतिशिरसि मे नास्ति प्रज्ञा श्रये न सतः क्वचित्
विहितचरणं त्यक्त्वा नित्यं निषिद्धमुपाश्रये ।
तदपि धिषणा मुक्तेः प्राप्तावतीव समुत्सुका
सति मनसि मे भद्राद्रीशे किमस्ति हि दुर्लभम् ॥ ७९

ச்ருதிசிரஸி மே நாஸ்தி ப்ரஜ்ஞாம் ச்ரயே ந ஸத: க்வசித்
விஹிதசரணம் த்யக்த்வா நித்யம் நிஷித்த முபாச்ரயே ।
ததபி திஷணா முக்தே: ப்ராப்தாவதீவ ஸமுத்ஸுகா
ஸதி மநஸி மே பத்ராத்ரீசே கிமஸ்தி ஹி துர்லபம் ॥ 79

*உபநிஷத்துகளைப் பற்றி அறியேன். நல்லோர்களை அண்டுவதுமில்லை. விதிக்கப் பெற்ற நடைமுறைகளை விட்டு தகாததென தடுக்கப் பெற்றதை எப்போதும் ஏற்கிறேன். ஆனால் முக்தி பெறுவதில் புத்தி உத்ஸாஹத்துடன் உள்ளது. பத்ராசல நாதன் உள்ளத்தினுள் துலங்கும் போது கிட்ட முடியாதது எது? (79)*

नगरमटवीं कर्तुं नेतः पुरं च महावनं
तव वनगतौ पौरो लोकस्तदा यतते स्म हि ।
तदभिलषितं तैर्नो लब्धं तवैव हि वञ्चनात्
इति किल कृपानुन्नो भद्राचलं नगरं व्यधाः ॥ ८०

நகரமடவீம் கர்தும் நேத: புரம் ச மஹாவநம்
தவ வநகதௌ பௌரோ லோகஸ்ததா யததே ஸ்ம ஹி ।
ததபிலஷிதம் தைர்நோ லப்தம் தவைவ ஹி வஞ்சநாத்
இதி கில க்ருபாநுந்நோ பத்ராசலம் நகரம் வ்யதா: ॥ 80

நீர் காட்டிற்குச் செல்ல முற்பட்டதும் நகரத்தைக் காடாக்க காட்டை நகரமாக்க அயோத்தி நகரமக்கள் முனைந்தனர். அவர்கள் விரும்பியது அவர்களுக்கு உமது வஞ்சகச் செயலால் கிட்டவில்லை. இதனை உணர்ந்தல்லவா கருணையால் தூண்டப் பெற்று பத்ரமலையை நாடாக்கினீர். (80)

परिहरतु मे पाणिद्वन्द्वे शरासशराङ्किता
परमपुरुषाभिख्या पापं पुरातनदेवता ।
मुनिविततयो नायोध्यायां न वा परमे पदे
विहितरतयो भद्राद्रौ यामुशन्ति निषेवितुम् ।। ८१

பரிஹரது மே பாணித்வந்த்வே சராஸசராங்கிதா
பரமபுருஷாபிக்யா பாபம் புராதநதேவதா ।
முநிவிததயோ நாயோத்யாயாம் ந வா பரமே பதே
விஹிதரதயோ பத்ராத்ரௌ யாமுசந்தி நிஷேவிதும் ॥ 81

இருகைகளில் வில்லும் அம்பும் அடையாளமாகக் கொண்ட பரம புருஷன் என்ற பெயர் கொண்ட பழமை மிக்க தேவதை என் பாபத்தை அகற்றட்டும். முனிவர்கள் அயோத்தியிலோ பரமபதத்திலோ விருப்பம் கொள்ளாமல் பத்ராசலத்தில் உம்மை வழிபட விரும்புகின்றனர். 81

कमलनयने कारुण्याब्धौ कपालिकृतादरे
विधिनुतपदे विश्वातीते विपत्तितमोरवौ ।
भवभयमहाभाराक्रान्ताशयस्य भृशाधिनो
भवतु हृदयं भद्राद्रीशे ममानिशमर्पितम् ।। ८२

கமலநயநே காருண்யாப்தௌ கபாலிக்ருதாதரே
விதிநுதபதே விச்வாதீதே விபத்திதமோரவௌ ।
பவபயமஹாபாராக்ராந்தாசயஸ்ய ப்ருசாதிநோ
பவது ஹ்ருதயம் பத்ராத்ரீசே மமாநிசமர்பிதம் ॥ 72

ஸம்ஸார பயத்தின் சுமையில் அழுந்திய உள்ளம் கொண்டவனும் பெரும் பாபியுமான என் உள்ளம் பத்ராசல

நாதனிடம் எப்போதும் அர்ப்பணமடைந்ததாகட்டும். அவர் தாமரைக் கண்ணர், கருணைக்கடல், சிவனால் அன்புடன் பேணப்பட்டவர், பிரும்மாவால் திருவடிகளில் வணங்கப் பெற்றவர், உலகியலைக் கடந்து நிற்பவர், விபத்தெனும் இருளைச் சூரியனாகி நீக்குபவர். (82)

कलितभुवनैः कालावश्यैः करात्तशरासनैः
कविकुलगिरां भाग्यैर्भोग्यैः कदाप्यकृतैनसाम् ।
जनकतनयानेत्रानन्दैर्जगत्त्रयपावनैः
भवहरपदैर्भद्राद्रिस्थैर्भवानि सुरक्षितः ॥ ८३

கலிதபுவனை: காலாவச்யை: கராத்தசராஸனை:
கவிகுலகிராம் பாக்யைர் போக்யை: கதாப்யக்ருதைநஸாம் ।
ஜநகதநயாநேத்ராநந்தைர் ஜகத்த்ரயபாவனை:
பவஹரபதைர் பத்ராத்ரிஸ்தைர் பவாநி ஸுரக்ஷித: ॥ 83

உலகிற்கு அலங்காரமாயிருப்பதும், காலத்திற்கு உட்படாததும், கையில் வில்லேந்தியதும், கவிக்கூட்டத்தின் வாக்கிற்குப் பாக்கியமும் எப்போதாவது கூட பாபம் செய்யாதவரால் மட்டும் உணரத்தக்கதும், ஜனகரின் மகளின் கண்களுக்கு ஆனந்தம் தருவதும், மூவுலகையும் தூயதாக்குவதும், ஸம்ஸார நோயகற்றுகிற திருவடி கொண்டதும் பத்ராசலத்தினுள்ளதுமான பரம்பொருளால் பாதுகாக்கப் படுவேனாக! (83)

अयोध्यां गत्वा त्वामवनितनयावल्लभ विभो
न सन्द्रष्टुं शक्ता इति किल वयं मानसतले ।
मतिं गोदावर्यां महितसरयूरित्यविकलां
प्रयामो भद्राद्रिं गृहमिति च साकेतनिलयम् ॥ ८४

அயோத்யாம் கத்வா த்வாமவநிதநயாவல்லப விபோ
ந ஸந்த்ரஷ்டும் சக்தா இதி கில வயம் மாநஸதலே ।
மதிம் கோதாவர்யாம் மஹிதஸரயூரித்யவிகலாம்
ப்ரயாமோ பத்ராத்ரிம் க்ருஹமிதி ச ஸாகேதநிலயம் ॥ 84

*பூமியின் மகளின் மணாளரே! பெருமானே! அயோத்தி சென்று உம்மைக் காண இயலாதவர் என உள்ளத்தினுள் கொண்டு கோதாவரியிடம் பெருமதிப்புக்குரிய ஸரயூ என்ற உணர்வைக் குழப்பமின்றி கொண்டு, பத்ராசலத்தை ஸாகேதத்திலுள்ள (அயோத்தியிலுள்ள) உம்மாளிகையாக எண்ணிச் செல்வோம். (84)*

कृतघ्नत्वादीनां स्वकृतदुरितानां फलतया
भवेऽस्मिन्दारिद्र्यं भरतनुतपादानुभवताम् ।
इदानीं त्वत्पादानतिपरधियां जन्ममरणे
विनिघ्नन् भद्राद्रौ वससि ददसे चाधिकधनम् ॥ ८५

க்ருதக்நத்வாதீநாம் ஸ்வக்ருததுரிதாநாம் பலதயா
பவேऽஸ்மிந் தாரித்ர்யம் பரதநுதபாதாநுபவதாம் ।
இதாநீம் த்வத்பாதாநதிபரதியாம் ஜந்மமரணே
விநிக்நந் பத்ராத்ரௌ வஸஸி ததஸே சாதிகதநம் ॥ 85

*பரதனால் திருவடிகளில் வணங்கப் பெற்றவரே! செய்நன்றி மறந்தது முதலிய தான் செய்த பாபத்தின் பயனாக இப்பிறவியில் ஏழ்மை அடைந்தவன் உன் திருவடி வணங்குவதில் ஆர்வ மேற்பட்டு வணங்க அவனது பிறப்பிறப்புத் தொடரை அறுப்பவராக பத்ராசலத்தில் வசிக்கிறீர். ஏழ்மை நீங்கப் பெருஞ் செல்வம் தருகிறீர். 85*

कवीन्द्राणां वाचं मुकुलयति ते दानमहिमा
गृहीत्वा षड्लक्षीमितकनकनिष्काणि रजनौ ।
वितीर्य स्वं दासं यवननृपतेर्मोचितवतः
कृपासिन्धो भद्राचलकृतगृहप्रेमनिलय ॥ ८६

கவீந்த்ராணாம் வாசம் முகுலயதி தே தாநமஹிமா
க்ருஹீத்வா ஷட்லக்ஷீமிதகநகநிஷ்காணி ரஜநௌ ।
விதீர்ய ஸ்வம் தாஸம் யவநந்ருபதேர் மோசிதவத:
க்ருபாஸிந்தோ பத்ராசலக்ருதக்ருஹப்ரேமநிலய ॥ 86

*கருணைக் கடலே! பத்ராசலத்தில் (ராமதாஸரால்) அமைக்கப் பெற்ற கோயிலில் அன்புடன் வசிப்பவரே! இரவில் 6 லட்சம் தங்கக் காசுகள் எடுத்துச் சென்று துருக்க அரசனிடம் தந்து தன் தாஸரை விடுவித்த உமது வள்ளல் பெருமை சிறந்த கவிகளின் வாக்கை மொட்டாகக் குவியச் செய்கிறது. (கவிகளின் வாக்கு இதனைப் பாராட்ட இயலாமல் குவிந்து நிற்கிறது).(86)*

धुनानं भक्तानां दुरितनिकुरुम्बं शुभदृशा
क्रियाणां कर्तॄणां फलमुचितरूपं च ददतम् ।
कलानामास्थानं कलितसुकृतानां च सुलभं
भयं त्यक्त्वा चित्तं भजति मम भद्राचलपतिम् ॥ ८७

துநாநம் பக்தாநாம் துரிதநிகுரும்பம் சுபத்ருசா
க்ரியாணாம் கர்த்ரூணாம் பலமுசிதரூபம் ச ததநம் ।
கலாநாமாஸ்தாநம் கலிதஸுக்ருதாநாம் ச ஸுலபம்
பயம் த்யக்த்வா சித்தம் பஜதி மம பத்ராசலபதிம் ॥ 87

*என் உள்ளம் பத்ராசலபதியைப் பயமின்றி அணுகுகின்றது. அவர் பக்தரின் பாபக்குவியலைத் தன் மங்களப் பார்வையால் அகற்றுபவர். நல்ல நோக்குடன் செயல் படுபவருக்குச் செயலுக்கேற்ற பலன் தருபவர். கலைகளின் இருப்பிடம். புண்ணியம் செய்பவருக்கு எளிதில் கிட்டுபவர். 87*

स्फुरन्त्यां शम्पायां सजलजलदं त्वां किल विदुः
लतायां सौवर्ण्यां मरकतमणिं प्राहुरपरे ।
वदन्त्यन्ये सन्तः कनककमलस्थं पृथुमलिं
महीजाश्लिष्टं त्वां मनुकुलज भद्राचलपते ॥ ८८

ஸ்புரந்த்யாம் சம்பாயாம் ஸஜலஜலதம் த்வாம் கில விது:
லதாயாம் ஸௌவர்ண்யம் மரகதமணிம் ப்ராஹுரபரே ।
வதந்த்யந்யே ஸந்த: கநககமலஸ்தம் ப்ருதுமலிம்
மஹீஜாச்லிஷ்டம் த்வாம் மநுகுலஜ பத்ராசலபதே ॥ 88

